# கல்கி

KALKI
2.1.2000
ரூ. 4.50

## 2000!

இப்படிக் கூட
நடக்குமா என
வியக்க
வைக்கும்
மிலெனியம்!

## றந்தது
## துயுகக் குழந்தை!

## பிரகாசமாக துவங்கும் புதிய ஆயிரத்தாண்டில்

## எங்கள் முதலீட்டாளர்களுக்கு உளங்கனிந்த நல்வாழ்த்துக்கள்!



**13.14%**

36 மாதம் அதற்குமேல்
13% மாதாந்திர வட்டி உண்டு
1வருடம் 12.12% மற்றும்
25 மாதங்கள் 12.63% காலாண்டிற்கு



**18.18%**

60 மாதங்களுக்கு
வருடவட்டி 13% மாதந்தோறும்
கூட்டுவட்டி முறையில் கணக்கிடப்படும்.

- Rating from CRISIL FA(+) indicates adequate safety.
- Registered with RBI as NBFC vide Regn. No.: 07.00403



# தமிழ்நாடு போக்குவரத்து வளர்ச்சி நிதி நிறுவனம் லிமிடெட்.

(தமிழ்நாடு அரசு நிறுவனம்)

பதிவு அலுவலகம் : 99, கிரீம்ஸ் சாலை, எம்.என். அலுவலக வளாகம், சென்னை-6.
தொலைபேசி : 8292059, 8292917, 8293351, தந்தி :TAFCON. P.B.No.719.
E-mail:tdfc@glasmd01.vsnl.net.in

- உள்ளூர் காசோலைகள் மற்றும் சென்னை வரைவோலைகள் மட்டுமே பெற்றுக்கொள்ளப்படும்.
- காசோலைகளும், வரைவோலைகளும், சனி மற்றும் ஞாயிற்றுக் கிழமைகளிலும் சென்னை அலுவலகத்தில் ஏற்கப்படும்.

**உங்களது முதலீடு "டிடிஎப்சி" யில் பாதுகாப்பானது - பத்திரமானது**

இந்த விளம்பரம் கம்பெனியால் 29.9.99 தினகரனில் வெளியிடப்பட்ட சட்ட பூர்வ விளம்பரத்தின் தொடர்ச்சியாகும்.

DIPR/1560/DIS/99/ELEGANT

# புது மிலெனியத்தின் உதய சூரியன்!

உலகத்தின் மொத்த கவனமும் ஒரு குட்டித் தீவின் மீது திரும்பியுள்ளது. அந்தச் சின்னஞ்சிறு தீவுக்குப் பெயர் கச்சால். அந்தமான், நிகோபார் தீவுக் கூட்டத்தில் உள்ள ஐநூற்றுச் சொச்சம் தீவுகளில் இதுவும் ஒன்று. இதற்கு மட்டும் ஏன் திடீர் மவுசு?

இரண்டாயிரமாவது ஆண்டின் முதல் தினம், சூரியனின் கதிர்கள் இந்த கச்சால் தீவு மீதுதான் முதன் முதலில் விழும் என்று ராயல் கிரீன்விச் வானியல் ஆய்வு மையம் கூறியது தான் காரணம். அதாவது, கிரீன் விச் நேரப்படி நடுநிசி பன்னிரண்டு மணிக்கு, பூமிக் கோளத்தின் எந்தப் பகுதியில் சூரிய ஒளி படும் என்று கணக்கிட்ட போது, அந்த இடம் கச்சால் என்று தெரியவந்துள்ளது. சூரிய ஒளி விழும் போது, இந்திய நேரப்படி அதிகாலை நான்கு மணி நாற

• கச்சாலில் சூரியோதயம்

• கச்சால் தீவு

கல்கி இண்டர்நெட் முகவரி :
www.kalkiweekly.com
ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

பது நிமிடமாக இருக்கும்!

பல்வேறு உலக நாடுகளும் 'உதயசூரியன் தீவு' என்று சிறப்பாய்க் குறிப்பிடும் இந்தக் கச்சால் தீவு, நிகோபார் தீவுக் கூட்டங்களில், தென் பகுதியில் உள்ள ஒரு சிறு தீவு. ஆதிவாசி மக்கள் தவிர இலங்கை அகதிகள், அரசு உத்தியோகஸ்தர்கள் என்று மூன்று தரப்பட்ட மக்கள் வசிக்கிறார்கள். இதன் புராதனப் பெயர் "திஹாயூ". இத் தீவு பற்றி ஒரு கர்ண பரம்பரைக் கதை சொல்லப்படுகிறது. ஒருகாலத்தில் கச்சால் தீவே வெள்ளக் காடாகிப் போனது. மிக உயரமான 'கம்பாங்' என்ற மரங்களைத் தவிர, மற்றவையெல்லாம் வெள்ளத்தில் மூழ்கிவிட்டன. மற்ற எல்லா உயிரினங்களும் அழிந்து விட்டாலும், ஒரு புழு இனம் மட்டும், கம்பாங் மரங்களின் உச்சியில் ஏறி உயிர் பிழைத்துக் கொண்டன. அந்தப் புழுக்களிலிருந்து, பரிணாம வளர்ச்சி பெற்று வந்தவர்கள்தான் இன்றைய தீவுவாசிகளான பழங்குடியினத்து மக்கள்!

"சுமார் நூற்றெழுபது சதுர கி.மீ. பரப்பு கொண்ட கச்சால் தீவு, கிழக்கு நோக்கிப் போகும் போது மேடிட்டுக் கொண்டு போகிறது. மலைப் பகுதிகளும், பாறைகளும் கொண்ட இயற்கை எழில் சூழ்ந்த தீவு கச்சால். அந்தமான் தீவுகளின் தலைநகரமான போர்ட் பிளேயரிலிருந்து கப்பல் மூலம்தான் (சுமார் 250 கடல் மைல்கள்) கச்சால் போக வேண்டும். அந்த கப்பல் பயணம் வெகு ரம்யமானது. அதிலும் குறிப்பாக தீவை நெருங்குகிறபோது ஒரு பெரிய பாறை, அதன் மீது கம்பீரமான ஐந்து தென்னை மரங்கள் கொண்ட காட்சி ரொம்பவும் பரவசப்பட வைக்கிறது!" என்று சிலாகிக்கிறார் சென்னை தொலைக்காட்சி நிலைய இயக்குனர் ஸ்ரீநிவாசா. அவர் ஜனவரி முதல் தேதி சூரிய உதயத்தை தூர்தர்ஷனில் நேரடியாய் ஒளிபரப்புவது தொடர்பான முன்னேற்பாடுகளுக்காகச் சமீபத்தில் கச்சால் போய் வந்திருக்கிறார்.

கச்சால், பழங்குடியினர் வாழும் பகுதி என்று இந்திய அரசால் அறிவிக்கப்பட்ட பகுதி. எனவே, அங்கே சுற்றுலாப் பயணிகள் அத்தனை சுலபமாக நுழைந்து விட முடியாது.

# கலைஞரை கட்டிப் போடும் சக்தி எது?

**● அரசு ரீதியாகவும், கட்சி ரீதியாகவும் தாம் விரும்பும் மாறுதல்களைக் கொண்டு வர முடியாமல் கலைஞரைக் கட்டிப் போடும் சக்தி எது? அமைச்சரவையில் சிலரை நீக்கி விட்டு துடிப்புள்ள இளைஞர்களை நியமித்து ஒரு புதிய உத்வேகத்துடன் எதிர்வரும் சட்டமன்றத் தேர்தலைச் சந்திக்கக் கலைஞர் விரும்பினாலும் அமைச்சரவை மாற்றம் தள்ளிப் போய்க்கொண்டிருக்கிறது. அது போலவே கட்சி அமைப்பில் சில மாற்றங்கள் கொண்டு வர வேண்டுமென்ற யோசனைகளை ஐவர் குழு சொல்லியிருந்தது. அவை கலைஞருக்கு பிடித்திருந்தும் நடந்து முடிந்த பொதுக்குழு மூலம் அந்த யோசனைகளை அவரால் செயல்படுத்த முடியவில்லை. ஜனநாயக முறையில் கட்சி நடத்தும்போது ஏற்படும் சிக்கல்கள் இவை. இப்படிப்பட்ட சூழ்நிலையில் திறமையற்றவர்களை பல்வேறு காரணங்களுக்காக ஆட்சி மட்டத்திலும், கட்சி மட்டத்திலும் அணைத்துச் செல்ல வேண்டிய அவசியம் உண்டாகி விடுகிறது!'' என்கிறார் சீனியர் தலைவர் ஒருவர்.**

**இதற்கிடையில் பொதுக்குழுவில் பேச்சாளர் வெற்றிகொண்டான் பேசும்போது, பல மாவட்டங்களில் கட்சி அமைப்பு மிகவும் பலவீனமாக இருப்பதைச் சுட்டிக் காட்டினார். ''புதுக்கோட்டை மாவட்டத்தில் கட்சியைத் 'துவக்கி' வைக்க வேண்டியிருக்கிறது'' என்று கிண்டலாகச் சொன்னார் அவர். மாறன் ஒரு படி மேலே போய் ''புதுக்கோட்டை மட்டுமல்ல, சென்னையிலும் ஏன் தமிழ்நாடு முழுக்கவும் நிலைமை அப்படித்தான் இருக்கிறது'' என்று பேசியபோது, கூட்டம் அமைதியாகி விட்டது. கட்சித் தேர்தலில் மேலிடச் செல்வாக்கு, ஜாதி செல்வாக்கு ஆகியவை மூலம் மீண்டும் பதவிக்கு வராமல் உண்மையிலேயே கட்சிக்குப் பணியாற்ற விரும்பும் ஆர்வமுள்ள இளைஞர்களுக்கு சீனியர்கள் வாய்ப்புக் கொடுக்க வேண்டும்'' என்றார் மாறன். ''கட்சித் தேர்தலை வீராசாமி தேர்தலாக நடத்தாதீர்கள் (சென்ற கட்சித் தேர்தலில் வீராசாமி மாவட்டம் மாவட்டமாக பிரமுகர்களைக் கூப்பிட்டுப் பேசி ஒருமனதாக ஆட்களைத் தேர்ந்தெடுத்தார்) உண்மையிலேயே போட்டி இருக்க வேண்டும். அது கட்சிக்கு எதிர்காலத்தில் வலிமை கூட்டும்'' என்**

அயல்நாட்டு சுற்றுலாப் பயணிகளுக்கு அங்கு நுழைய கட்டாயமாக அனுமதி கிடையவே கிடையாது. இந்திய டூரிஸ்ட்களுக்கும் ஆராய்ச்சி போன்ற பிரத்யேக காரணங்களின் அடிப்படையில்தான் சிறப்பு அனுமதி வழங்கப் படுகிறது.

1901ம் வருட மக்கள் தொகை கணக்கின்படி கச்சாலின் ஜனத்தொகை வெறும் 281தான். இப்போது ஒன்பதாயிரம்!

போர்ட் பிளேயரிலிருந்து சாதாரண நாட்களில் வாரம் ஒரு தடவை கச்சாலுக்கும் அதனையடுத்த மற்ற தீவுகளுக்குமாகக் கப்பல் விடப்படுகிறது. கச்சால் தீவில் தண்ணீர், மின்சாரம், சுகாதார வசதிகள் போன்றவை, தீவுவாசிகளுக்கு மட்டுமே போதுமான அளவில் இருக்கின்றன. ஆனால் ஜனவரி ஒன்றாம் தேதி டூரிஸ்ட் வருகையைச் சமாளிக்க, பிரத்யேக ஏற்பாடுகள் செய்யப் படுகின்றன. டிசம்பர் முப்பதாம் தேதி இரவு எட்டு மணிக்கு, டூரிஸ்ட்களுக்காக ஸ்வராஜ் தீப் என்ற கப்பல் புறப்படுகிறது. அது கச்சால் தீவுக்கருகில் முப்பத்தி ஒன்றாம் தேதி மாலை ஐந்து மணிக்குப் போய்ச் சேரும்.

மறுநாள் அதிகாலை சூரிய உதயத்தைப் பார்த்து விட்டு, பகல் பன்னிரண்டு மணிக்குப் புறப்பட்டால், அடுத்த நாள் காலை ஆறு மணிக்கு திரும்ப போர்ட் பிளேயர் வந்து சேரும். கப்பல் பயணத்துக்கான கட்டணம் : டீலக்ஸ் வகுப்பு : பத்தாயிரம் ரூபாய். மிகக் குறைந்த வகுப்பு : மூவாயிரம் ரூபாய். இதில் உணவுச் செலவு அடங்காது. இதற்கான டிக்கெட்களை போர்ட்பிளேயரில் போய் இறங்கிய பின்தான் வாங்கிக் கொள்ள முடியும். இந்த சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சியைக் காண பிரதமர், எல்.கே. அத்வானி உட்பட பல வி.ஐ.பிக்கள் வருவார்கள் என்று சொல்லப் படுகிறது. அவர்கள் வரும் ஹெலிகாப்டர் தரையிறங்குவதற்கு வசதியாக ஒரு ஹெலிபேட் அமைக்கப்பட்டு வருகிறது.

— எஸ். சந்திரமௌலி

## காதில் விழுந்தவை

றார் மாறன்.

மாறன் சொன்னது போல், கட்சியின் அஸ்திவாரம் ஆட்டம் கண்டிருப்பது அடுத்த நாள் நடந்த பேராசிரியர் பிறந்தநாள் விழா பொதுக் கூட்டத்தின்போது பளிச்சென்று தெரிந்தது. சிங்கள் டீ குடித்து விட்டு, கட்சி வேலை செய்த தொண்டர்கள் இல்லாததால்தானோ என்னவோ கொடிக்கம்பங்கள் நடுவது முதல் தோரணங்கள் கட்டுவதுவரை காண்ட்ராக்ட் விட்டு விட்டார் மாவட்டச் செயலாளர்.

● "மார்ச் மாதத்தில் நான்கு மாநிலங்களில் சட்டமன்றத் தேர்தல்கள் நடக்கின்றன. அப்போது திருச்சி, அறந்தாங்கி, நெல்லிக்குப்பம் தொகுதிகளிலும் இடைத் தேர்தல் நடத்த தேர்தல் கமிஷன் விரும்புகிறது. ஆனால் அரசியல் தலைமை கொஞ்சம் தயங்குவதற்கான காரணம் புரியவில்லை" என்கிறார் ஒரு கோட்டை அதிகாரி. "இந்தச் சந்தர்ப்பத்தில் இடைத் தேர்தலை நடத்தினால், எதிர்க்கட்சிகளின் தோழமை மிகவும் நெருக்கமாகி, சட்டமன்றத் தேர்தலின்போது வலிமையான அணியாக அது மாறிவிடும் வாய்ப்பு இருப்பதால், தி.மு.க தலைமை தயங்குகிறது. தவிர தப்பித் தவறி ஏதேனும் தொகுதியில் தோல்வியுற்றால் அதன் பாதிப்பு சட்டமன்றத் தேர்தலிலும் தெரியும் என்பதால்தான் இந்தத் தயக்கம்" என்கிறார்கள்.

● சென்னையில் ஓடும் கூவம், பக்கிங்காம், அடையாறு ஆகியவற்றைத் தூர் வாருவதற்கு டெண்டர் கேட்டிருந்தார்கள். கூவம் தவிர மற்ற வேலைகளுக்கு ஆர்டர் போட்டு விட்டார்கள். "கூவத்தில் சாக்கடை கலப்பதால் அங்கு இப்போது தூர் வாரத் தேவையில்லை" என்று பணி வழங்கப்படாததற்கு காரணங்கள் சொன்னாலும் 'உண்மையான காரணம்' எல்லோருக்கும் தெரிந்ததுதானே" என்கிறார் ஓர் ஒப்பந்தக்காரர்.

— சஞ்சயன்

# பிறந்தது புதுயுகக் குழந்தை!

சுய கட்டுப்பாட்டையும் எளிமையையும் போற்றிய காந்திய யுகம் விடைபெற்று சிறிது காலமாகி விட்டது. தகவல் புரட்சியுடன் விஞ்ஞானப் புரட்சியும் கைகோத்துள்ள சாகச யுகத்துக்குள் நாம் நுழைகிறோம். ஆனாலும் அந்த மகாத்மாவின் ஆளுமை நிழல் நம் மீது இன்னும் படர்ந்திருக்கிறது.

இனப்பெருக்கம், உயிரியல் விஞ்ஞானம் போன்ற துறைகளில் நடக்கும் அதிரடி ஆராய்ச்சிகள், அதன் முடிவுகள் மனித இனத்தின் கௌரவத்துக்கும் உடல், மன ஆரோக்கியத்துக்கும் கேடுசெய்ய வழிவகுக்காதா? என்ற கேள்வி அச்சுறுத்துகிறது.

மகப்பேறு மருத்துவத்தில் ஆச்சரியத்தில் வாயைப் பிளக்க வைக்கும் விஷயங்கள் நிறையவே நடந்துள்ளன. முதலில் 'வாடகைத் தாய்'! அதாவது, ஒருவரின் மனைவிக்குக் குழந்தை பெறும் வாய்ப்பு இல்லையென்றால், கணவன் விந்துவை செயற்கை முறையில் வேறொரு பெண்ணின் முட்டையில் செலுத்தி, அவள் வயிற்றில் அவரது குழந்தையை வளர வைக்கலாம். இந்த முறையில் அந்த ஆணும் கருவைச் சுமக்கும் பெண்மணியும் ஒருவரையொருவர் சந்திக்க வேண்டிய அவசியம் கூட இல்லை. அப்போது ஒரு கேள்வி எழுந்தது. 'இது அந்த ஆணின் குழந்தை. அவ்வளவே. இது எப்படி அவரது மனைவியின் குழந்தை ஆக முடியும்?'

பிறகு அறிமுகமானது 'சோதனைக் குழாய்க் குழந்தை'. பெண்ணின் உடலில் உள்ள சில கோளாறுகளினால் கரு உருவாவது தடைப்படுகிறது என்றால், அவளது முட்டையையும், அவள் கணவனின் விந்துவையும் பரிசோதனைச் சாலையில் இணைய வைத்து, அதன் மூலம் கருவை உருவாக்கி, அது ஓரளவு பாதுகாப்பான கட்டத்தை அடைந்தவுடன், தாயின் வயிற்றுக்குள் செலுத்

# 'ஃபேர் அண்ட் லவ்லி'

துதல். இந்த முறை மிகச் சிலருக்கே பயனளித்தது. தவிர இதற்கு ஆகும் செலவும் எக்கச்சக்கம். அப்போது ஒரு கேள்வி எழுந்தது. 'பெண்ணின் உடலில் கோளாறு என்றால் இந்த முறை பயனளிக்கலாம். குறைபாடு ஆணிடமென்றால் என்ன செய்வது?'

ஆராய்ச்சிகள் அடுத்த கட்டத்துக்கு அழைத்துச் சென்றன. வேறொரு ஆணின் ஆரோக்கியமான விந்துவை செயற்கை முறையில் பெண்ணின் உடலுக்குள் செலுத்தி கருவை உருவாக்க முடியும் என்றார்கள். தானமளித்த ஆண் மற்றும் அவனது உதவியால் கர்ப்பமடைந்த பெண் இருவருக்கும் மற்றவர் யாரென்பது தெரியாமல் மருத்துவர் ரகசியம் காப்பார். அப்போதும் ஒரு கேள்வி. 'இது அந்தப் பெண்ணின் குழந்தையே தவிர அவளது கணவனின் குழந்தை இல்லையே?'

இப்போது ரகசியம் காப்பதுகூட அவசியமற்றுப் போய் 'பேபி மேகிங்' என்பது மேலைநாடுகளில் சென்டிமென்ட் அற்ற வியாபாரமாக ஆங்காங்கே தலை காட்டுகிறது.

''ஆரோக்கியமான அழகான பெண்ணின் உடலில் உங்கள் குழந்தை வளர வேண்டுமா? தொடர்பு கொள்ளுங்கள்'', ''உங்கள் குழந்தை ஹெர்குலிஸ் போன்ற வீரனாகவும், சாக்ரடீஸ் போன்ற அறிவாளியாகவும் இருக்க வேண்டுமா? அப்படிப்பட்ட அழகுமேதை இதோ. அவர் தமது

• பேராசிரியர் கோபிநாத்



• டாக்டர் குந்தளா



விந்துவை தானமாக அளிக்கத் தயார்" என்றெல்லாம் வெப்ஸைட் விளம்பரங்கள் வர ஆரம்பித்துள்ளன. கூடவே குறிப்பிட்ட நபரின் புகைப்படமும் காட்டப் படுகிறது.

குடும்ப அமைப்புக்கும் ஆண் - பெண் இடையே இருக்கும் பரஸ்பர மரியாதைக்கும் இந்த முன்னேற்றங்களால் கேடு வராதா?

'ஃபேர் அண்ட் லவ்லி' பாப்பாக்கள் வேண்டும் என்று முடிவெடுத்து மனிதர்கள் செயல்பட ஆரம்பித்தால் என்னாவது?

பிறக்கும் குழந்தை ஆணா பெண்ணா என்பதை முன்கூட்டியே நிர்ணயிக்கும் சாத்தியம் வெகு தொலைவில் இல்லை என்னும் போது, இயற்கை வகுக்கும் சமச்சீர்



# பாப்பாக்கள்...?

நிலை என்னாவது?

"பிரசவ வேதனையெல்லாம் எனக்குத் தேவையில்லாத ஒன்று. நீங்கள் வேறு ஏற்பாட்டை விஞ்ஞான முன்னேற்றத்தின் மூலம் செய்து கொள்ளுங்கள்" என்று மனைவியோ, "நீ அழகில்லாதவள். வேறொரு அழகியின் உடலில் என் குழந்தை வளரட்டும்" என்று கணவனோ கூற ஆரம்பிப்பாரா...?

விஞ்ஞானிகள் இதுகுறித்து என்ன சொல்கிறார்கள்- என்று அறிய தேசிய பொறியியல் அகாடமியில் உறுப்பினராக இருப்பவரும், அண்ணா பல்கலைக்கழகத்தில் பயோ-டெக்னாலஜி பிரிவைச் சேர்ந்தவருமான டாக்டர் குந்தளா ஜெயராமனை அணுகினோம்.

"தொழில்நுட்ப முன்னேற்றம், அறிவியல் வளர்ச்சி என்ற பெயரில் சில விஷயங்களில், நாம் காட்டுமிராண்டிகளாகி வருகிறோமோ என்ற சந்தேகம் எனக்கும் எழுவதுண்டு.

என்றாலும் மரபியல் ஆராய்ச்சிகளை எதிர்மறையாக மட்டும் பார்க்கக் கூடாது. அதுவும் சமீபத்தில் மிகத் தீவிரமாக இயங்கி வரும் 'ஹியூமன் ஜெனோம் ப்ராஜெக்ட்' வருங்காலத்தில் மனிதகுலத்துக்கே பெரும் வரமாக விளங்கப் போகிறது" என்று தொடங்கினார்.

இந்த இடத்தில் ஒரு விளக்கம் : - மனித உடலில் 23 ஜோடி குரோமோசோம்கள் உள்ளன. ஒவ்வொரு குரோமோசோமிலும் DNA என்ற பொருள் உண்டு. இதில் உள்ளதுதான் மரபணு. ஒருவர் உடலில் உள்ள மொத்த DNAவையும் சேர்த்து ஜெனோம் என்கிறார்கள். ஓர் உயிரினம் மனிதனா, விலங்கா அல்லது தாவரமா என்பதை நிர்ணயிப்பது ஜெனோம்தான் - அதாவது இந்த DNA க்களின் எண்ணிக்கையும், அவற்றின் உள்ளடக்கமும் வரிசை அமைப்பும்தான்.

முன்பெல்லாம் மூளை வளர்ச்சி குன்றிய நிலையை கூடுதலான குரோமோசோம் குறைபாடுகளுடன் சம்பந்தப்படுத்தினார்கள் மருத்துவர்கள். ஆனால் காரணம் கண்டுபிடிக்கப்பட்டதே தவிர தீர்வு கிடைக்கவில்லை. இதற்கு விடை

காணத்தான் 'ஹியூமன் ஜெனோம் திட்டம்' உருவானது. 1990-ல் அமெரிக்காவில் தொடங்கிய இந்தத் திட்டத்தின் முக்கிய நோக்கம் DNAவிலுள்ள பொருள்கள் (A, T, C, G என்று இவற்றிற்குப் பெயரிட்டிருக்கிறார்கள்). ஒவ்வொரு குரோமோசோமிலும் எந்த வரிசையில் அமைந்துள்ளன என்பதைக் கண்டுபிடிப்பதுதான். 2013-ம் ஆண்டுதான் இந்த நோக்கம் நிறைவேறும் என்று தொடக்கத்தில் கருதப்பட்டாலும், இப்போது சிறுத்தைப் பாய்ச்சலாய் நடைபெற்று வரும் ஆராய்ச்சிகளின் விளைவாக இன்னும் மூன்று ஆண்டுகளிலேயே நோக்கம் நிறை வேறி விடுமாம்.

"பிரிட்டனின் சாங்கர் அமைப்பு, அமெரிக்காவின் ஒக்லஹாமா பல்கலைக் கழகம், ஜப்பானின் க்யோடா பல்கலைக் கழகம் ஆகியவை இந்த ஆராய்ச்சியில் ஒரு வித வெறியோடு ஈடுபட்டிருக்கின்றன. இப்போது கருவில் உள்ள குழந்தையின் உடலில் சில மருந்துகளைச் செலுத்துவதன் மூலம் சில பரம்பரை நோய்கள் வருங்காலத்தில் அதைத் தாக்க முடியாமல் செய்ய இயலுமா என்பதற்கான ஆராய்ச்சிகள் நடக்கின்றன" என்கிறார் டாக்டர் சுந்தரா ஜெயராமன்.

**செ**யற்கை பாப்பாக்கள் உற்பத்தி ஒரு புறம்; இயற்கையை (பரம்பரை நோய்) ஜெயித்து பிறக்கும் பாப்பாக்கள் இன்னொரு புறம் என்று புதுயுகப் பாப்பாக்கள் வீறுநடை போடக்கூடும்!

இதே விஞ்ஞான காரணங்களால் ஒருசில மனித இனங்கள் அழிந்துவிடக் கூட வாய்ப்பு இருக்கிறதல்லவா? நம் கேள்வியைத் தூக்கிக் கொண்டு அண்ணா பல்கலைக் கழகத்தின் மரபியல் துறைக்குப் போனோம். 'டாக்டர் ஏ.எல். முதலியார் அடிப்படை மருத்துவ மேற்படிப்புக் கழகத்தில் செயல்படுகிறது இத்துறை. துறைத் தலைவர் பேராசிரியர் கோபிநாத். அவரும், அத்துறையில் பணியாற்றும் டாக்டர் ரமேஷ், டாக்டர் ஜெயராமன், டாக்டர் சந்திரா, பேராசிரியர் சந்தியா ஆகியோரும் நமது மேற்குறிப்பிட்ட பயங்களுக்கு ஒரே குரலில் அளித்த கருத்து இது.

"மரபியல் ஆராய்ச்சிகளின் விளைவாக 'தேர்வு' செய்யும் உரிமை இருப்பது, நீங்கள் குறிப்பிடும் ஆபத்துகளுக்கு வழிவகுக்கலாம் தான்.

"பலதரப்பட்ட உயிரினங்கள் உலகில் இருப்பதுதான் நல்லது. மனிதர்களிடையே கூட பலவித இனங்களும், மாறுபாடுள்ள உடலமைப்புக் கொண்டவர்களும் இருப்பதுதான் மனிதகுலத்துக்கு நல்லதும் கூட. ஏதோ வைரஸ் கிருமிகள் புறப்பட்டு குறிப்பிட்ட உடலமைப்பு கொண்டவர்களை அழித்தாலும், மாறுபட்ட அமைப்பு கொண்ட மனிதர்களாவது உயிர்வாழ்வார்களில்லையா?

"ஆனால் நடைமுறையில் பார்த்தால், குழந்தையில்லாதவர்கள்தான் செயற்கை கருத்தரிப்பு முறைகளிலும், தேர்வு செய்து குழந்தை பெறும் முறைகளிலும் ஈடுபடுவார்கள். நம் நாட்டுக்கு இது ஒத்துவராது – இங்கு மக்கள் தொகை அதிகம். மேலும் தத்தெடுத்துக் கொள்வது இங்கு ஏற்றுக் கொள்ளப்பட்ட மரபு. அதோடு நம் பண்பாட்டின் வேர்கள் சக்திவாய்ந்தவை.

"தவிர, குளோனிங் முறையில் மனிதனையும் உருவாக்க முடிந்து விட்டால் செயற்கைக் கருத்தரிப்புக்கும் பிற விஷயங்களுக்கும் அவசியமேது? (குளோனிங்கால் வேறுவித சிக்கல்கள் ஏற்படலாம் என்பது வேறு விஷயம்).

"பல சிக்கல்களை இயற்கையே சரிசெய்து கொள்ளும். சிவந்த நிறத்துக் குழந்தைகளே அதிகம் நிலவினால் கறுப்புக் குழந்தைதான் வேண்டும் என்ற ஆசை மக்களிடையே முளைவிடும். அரிதானவற்றின் மீது ஆர்வம் கொள்வதுதான் மனித இயல்பு!

"தவிர, நீங்கள் நினைப்பது போல் புத்திசாலியான குழந்தையை நாம் 'தேர்வு' செய்து பெற்றுக் கொள்ள முடியாது. மரபணு மட்டுமல்ல. வளரும் சூழலும் சேர்ந்துதான் அறிவுத்திறனை நிர்ணயம் செய்யும். (அதனால்தான் இரட்டைக் குழந்தைகள் கூட வெவ்வேறு சூழலில் வளர்க்கப்பட்டால் வித்தியாசமாக நடந்து கொள்கின்றன). எனவே மரபியல் ஆராய்ச்சிகள் மனிதகுலத்துக்கு எதிரான வகையில் (தெரிந்தோ தெரியாமலோ), பயன்படுத்தப்பட்டாலும், இயற்கையே உதவிக்கு வந்து சீர்செய்து விடும்."

விஞ்ஞானிகளின் விளக்கம் தாற்காலிக சமாதானமளித்தாலும் இத்தனை ஆராய்ச்சிகளின் பயனும் வலிமையும் ஓர் உக்கிரமான சர்வாதிகாரியின் கைகளுக்குப் போய்ச் சேர்ந்தால் என்னாவது என்ற கேள்வி மீண்டும் எழுந்து பயமுறுத்தியது. ஹிட்லர்கள் மீண்டும் தோன்றாமலிருக்க விஞ்ஞானம் ஏதேனும் வழி செய்யுமா?

**— ஜி.எஸ்.எஸ்.**

• சோனியா

● ஷபானா ஆஸ்மி கதறியழுது விட்டார். கண்ணீரும் கம்பலையுமாக அவைத் தலைவரிடம் சென்று புகார் செய்யு மளவுக்கு ராஜ்ய சபையின் நடவடிக்கை அமைந்து விட்டது. விஷயம் என்ன? ராஜஸ்தானைச் சேர்ந்த சிவசேனா உறுப்பினர் போரா என்பவர் கொலை செய்யப்பட்டது தொடர்பாக விவாதம் கோரிய சிவசேனா உறுப்பினர் சஞ்சய் நிருபம், ஒரு குறிப்பிட்ட இனத்தைச் சொல்லி "..... அந்த நாய்கள் எங்கள் தொண்டரைக் கொலை செய்து விட்டனர்..." என்றார். துணை ஜனாதிபதியும் அவைத் தலைவருமான கிருஷ்ணகாந்த் சொன்ன எதையும் நிருபம் கேட்கவே யில்லை. நிருபமின் இந்தச் சொற்கள்தான் ஷபானாவை அழச் செய்து விட்டன. ஆனால் நிருபமோ, "நான்

• ஷபானா ஆஸ்மி



# கதறியழுத ஷபானா ஆஸ்மி!

'குண்டா' என்றுதான் சொன்னேன். அதுதான் உங்கள் காதுகளில் 'குத்தா (நாய்)' என்று விழுந்து விட்டது. ஆனாலும் ஷபானா விரும்பினால் நான் 'குத்தா' என்றும் சொல்லத் தயார்!" என்றார். அவைத் தலைவரிம் முறையிட்ட ஷபானா, பிறகு சிவசேனா உறுப்பினர்கள் பக்கம் – குறிப்பாக பிரிதீஷ்நந்தி பக்கம் திரும்பி, "நீங்கள் பத்திரிகையாளராக இருந்தவர். படித்தவர். உங்கள் உறுப்பினர் இப்படிப் பேசலாமா?" என்று முறையிட, "அவரே பெரிய குண்டர். அவரிடம் போய் நீங்கள பெரிதாக முறையிடு கிறீர்களே!" என்று ஒரு குரல் எழுந்தது இன்னோர் உறுப்பினரிடமிருந்து.

இத்தனை கண்ணியக் குறைவுகளுக்குப் பிறகு என்ன செய்ய முடிந்தது? நிருபமுக்குக் கண்டனம் தெரிவித்து விட்டு, அசிங்கமான வார்த்தைகளை அவைக் குறிப்பிலிருந்து நீக்கி விட்டு, அவையை



• பாஸ்வான்

ஒத்திவைக்கத்தான் முடிந்தது அவைத் தலைவரால்!

ராஜ்யசபையில் இப்படியென்றால், லோக் சபையில் தம்மை பதிலளிக்க விடாமல் குறுக்கிட்டுக் கொண்டிருந்த முலாயம் சிங் யாதவிடம், "உறுப்பினருக்கு அவை விதிகள் தெரியாது போலும்!" என்றார் நிதிஷ்குமார். அவ்வளவுதான்! முலாயமின் தொண்டரடிப் பொடியான தேவேந்திரசிங்குக்கு வந்ததே கோபம்! கையை ஓங்கிக் கொண்டு நிதிஷ் குமாரை அடிக்கச் சென்று விட்டார். அது மட்டுமல்ல. "நான் இன்று என்ன செய்தேனோ அதற்காகப் பெருமைப்படுகிறேன்!" என்றார்! சபாநாயகர் பாலயோகியால் என்ன செய்ய முடிந்தது? தமது கண்டனத்தை எழுத்து மூலம் தெரிவிக்க முடிந்தது. அவ்வளவே!

• அரசியல் சாசனத்தைத் திருத்தியெழுதும் முயற்சியில் இறங்கியுள்ளது பி.ஜே.பி. அதற்கான முன்னோட்டமாக, டெல்லியிலுள்ள இந்திய வக்கீல்கள் சங்கம் ஒரு மாநாடு நடத்தியது. அதில் பல்வேறு கட்சிகளின் உறுப்பினர்களும் கலந்து கொண்டு பேசினர். தி.மு.க.விலிருந்து ஆலடி அருணா உள்பட மூன்று பேர் கலந்து கொண்டனர். திருநெல்வேலி எம்.எல்.ஏ. சுப்பிரமணியன் மிக அற்புதமான கட்டுரையொன்றை மாநாட்டில் வாசித்தார். அவரது கட்டுரை அனைவராலும் பாராட்டப்பட்டது. என்னதான் பிராந்தியக் கட்சியாக இருந்தாலும் இதுபோன்ற விஷயங்களில் தி.மு.க. காட்டும் ஆர்வம் பற்றிப் பேசாதவர்களே இல்லை. இது இப்படியிருக்க, அ.தி.மு.க.விலிருந்தோ, த.மா.காவிலிருந்தோ ஒரு உறுப்பினர் கூட வந்து கலந்து கொள்ளவில்லை என்பதும் டெல்லியில் ஒரு செய்திதான்.

• ராம்விலாஸ் பாஸ்வான் ரயில்வே அமைச்சராயிருந்த போது, லட்சக்கணக்கான தினப்படித் தொழிலாளர்களை நிரந்தரமாக்கி விட்டார். அதனால் திண்டாடுகிறது ரயில்வே நிர்வாகம். இப்போதோ, சுமார் மூன்றரை லட்சம் தபால் ஊழியர்களை நிரந்தரமாக்கப் போவதாக அறிவித்திருக்கிறார் பாஸ்வான். "இதுபற்றி நிதியமைச்சரிடம் ஆலோசித்தீர்களா?" என்றபோது, "அவசியமில்லை. நிதியில்லை என்பதற்காக இவ்வளவு பெரிய தொழிலாளர் சக்தியை நாம் எப்படி உதாசினப்படுத்த முடியும்?" என்று ஒரே போடாகப் போட்டு விட்டார். இதனால் நிதித் துறை மட்டுமல்ல; அரசு இயந்திரமே பாஸ்வானைக் கண்டு நடுங்கிக் கொண்டிருக்கிறது.

• நாடாளுமன்றத்தில், ஓர் எதிர்க்கட்சித் தலைவருக்கு என்னென்ன உரிமைகள் இருக்கின்றன? ஓர் எதிர்க்கட்சித் தலைவர் எப்படியெல்லாம் நடந்து கொள்ள வேண்டும் என்பது தெரியாமல் - மகளிர் இட ஒதுக்கீடு மசோதா தொடர்பான விவாதம் கொண்டு வரத் தெரியாமல் - அவையில் எழுந்து கத்தி விட்டு வெளிநடப்புச் செய்த சோனியா பற்றிச் சிரிப்பாய்ச் சிரிக்கிறார்கள். இத்தனைக்கும் தமது வீட்டில் தமது எம்.பி.க்களைக் கொண்டு நாடாளுமன்றம் போலவே ரிகர்சல் செய்து தம்மைத் தயார் படுத்திக் கொண்டிருக்கிறாராம் சோனியா.

— இந்த்ரப்ரஸ்தன்

---




"உங்க நண்பர் அனுப்பிய புத்தாண்டு வாழ்த்துச் செய்தியைப் படிச்சிட்டு பல்லைக் கடிக்கறீங்களே! என்ன எழுதியிருக்கார் அதில்?"

"என்னிடம் சென்ற நூற்றாண்டான 8.7.1988ல் வாங்கிய நூறு ரூபாய்க் கடனை திருப்பித் தருகிற பண வசதியை இந்தப் புதிய நூற்றாண்டிலாவது கடவுள் உனக்கு அருளட்டும்னு!"

– உ. ராஜாஜி

# பருந்துப் பார்வையில் கடந்த நூற்றாண்டு!

**1901**:பாரிஸ் ரயில்வே ஸ்டேஷனில் ஒரு பொது தொலைபேசி அமைக்கப்பட்டது. உலகப் புகழ்பெற்ற ஓவியர் பிகாசோவின் முதல் ஓவியக் கண்காட்சி பாரிசில் நடந்தது. கார் டிரைவர்கள் மீசை வைத்துக் கொள்ளக் கூடாது என்ற விதியை எதிர்த்து பாரிஸ் கார் டிரைவர்கள் போராட்டம். கார்களுக்கு அதிகபட்ச வேகம் அறிமுகம்:(மணிக்கு பத்து கி.மீ!) லண்டனிலிருந்து 350 மைல் தொலைவிலுள்ள இடத்துக்கு, மார்க்கோனி கம்பியில்லா தந்தியில் செய்தி அனுப்பினார். வெள்ளை மாளிகையில் பூக்கர்.டி.வாஷிங்டன் என்ற கறுப்பு இனத்தவருக்கு விருந்து. ஸ்வீடன் நாடு, நோபல் பரிசை முதல் முறையாக வழங்கியது. **நார்வேயில், உள்ளாட்சித் தேர்தலில் பெண்களுக்கு வோட்டளிக்க உரிமை அளிக்கப்பட்டது.**



• அன்னை தெரஸா

**02:** ருஷ்யா, மரண தண்டனையை ரத்து செய்தது. பிரபல லண்டன் ஸ்கூல் ஆஃப் எகனாமிக்ஸ் அண்டு பொலிடிகல் சயன்ஸ் துவக்கம். சுவாமி விவேகானந்தா மரணம். எகிப்தில் காலரா நோயால் இருபத்தி ஆறாயிரம் பேர் பலி.



• ராக்கெட்

**03:** எட்டாம் எட்வர்டு இந்தியாவின் சக்ரவர்த்தியானார். ஆஸ்திரேலியாவுக்கு எதிரான கிரிக்கெட் மேட்ச்சில், இங்கிலாந்து அபார ரன் குவிப்பு(769ரன்கள்). **எச்சில் துப்பியதற்காக அமெரிக்காவில் ஒருவர் கைது.** பாரிஸ், மருத்துவ



• விவேகானந்தர்

அகாடமி மது, உடல் நலத்துக்குக் கேடு இல்லை என அறிவித்தது! தென் ஆப்ரிக்காவில் காந்திஜி வழக்கறிஞராக பிராக்டீஸ் ஆரம்பித் தார். 'தி கிரேட் டிரெய்ன் ராபரி' என்கிற எட்டு நிமிடப் படம் திரை யிடப்பட்டது. மேரி கியூரி அம்மை யாருக்கு அவருடைய கணவர் மற்றும் ஹென்றி பெக்யூரல் இருவருடனும் சேர்ந்து நோபல் பரிசு கிடைத் தது. நோபல் பரிசு பெற்ற முதல் பெண்மணி! ரைட் சகோதரர்கள் விமானத்தைக் கண்டு பிடித்தனர்.



• கோர்ப்பசேவ்

**04:** பிரிட்டனின் டெய்லி மிரர் பத்திரிகையில் கலர் போட்டோ வெளியாகி, வாசகர்களுக்கு இனிய அதிர்ச்சி! பிளைமோத்-லண்டன் இடையில் நிற்காத ரயில் அறிமுகம். நாலரை மணிநேரப் பயணம். சார்லஸ் ரோல்ஸ், ஹென்றி ராய்ஸ் சேர்ந்து ரோல்ஸ் ராய்ஸ் கார் உருவானது. ரெட்கிளிப் கல்லூரியில், இரண்டு வயது முதல் கண் பார்வை இல்லாத, காது கேளாத பெண் பட்டப் படிப்பு முடித்தார். அவர் தான் ஹெலன் ஹெல்லர். கம்பி யில்லாத் தந்தி பயன்படுத்தி வானிலை அறிவிப்பு.

**05:** பிரான்ஸ்-ருஷ்யா இடையில் நீளமான டிரான்ஸ் சைபீரியன் ரயில் பாதை துவக்கம். பயண காலம் இருபத்தியொரு நாட்கள். அமெரிக் காவின் விஸ்கான்சின் மாநிலத்தில், முப்பது வயதுக்கு மேற் பட்ட பிரம்மச்சாரி களுக்கு வரி. லாகூரில் பூகம்பம். பத்தாயிரம் பேர் பலி! ஆல்பர்ட் ஐன்ஸ்டின், வேகம், நேரம் இவற்றுக்கு இடையிலான உறவைக் கண்டுபிடித்துப் பரபரப் பூட்டினார்.

**06:** ரைட் சகோதரர்



• மண்டேலா

களின் விமானம் 38 நிமி டத்தில் 24 மைல் தூரம் பறந்து சாதனை. டொரான் டோவில் பரீட்சார்த்த ரீதி யில் பூனைக்கும், நாய்க்கும் சிறுநீரக மாற்று ஆபரே ஷன் நடந்தது. அமெரிக்க ஜனாதிபதி தியோடர் ரூஸ்வெல்ட்டுக்கு அமை திக்கான நோபல் பரிசு. பிரிட்டனில் ஆஸ்பிரின் மாத்திரை விற்பனைக்கு அனுமதி!

**07:** உலகில், முதல் தட வையாக பின்லாந்து



• காந்தி



• நேரு

நாட்டில் **பெண்கள் எம்.பிக்கள் ஆனார்கள்.** தென் ஆப்ரிக்காவில் காந்திஜியின் ஒத்துழை யாமை இயக்கம். ஹெலி காப்டர் கண்டுபிடிப்பு.

**08:** கைதான மகாத்மா காந்தி, தென் ஆப்ரிக்கா சிறையிலிருந்து விடுதலை. நியூயார்க்கில், **பள்ளிகளில், குழந்தைகளை கொம்பால்**



• மர்லின் மன்ரோ

**அடிப்பது தடை செய்யப் பட்டது.**

**09:** லண்டன், இந்தி யாவுக்கு இடையே ஏழா யிரம் மைல் தொலைவு தந்தி தொடர்பு ஏற்படுத்தப் பட்டது. அமெரிக்காவின் பல மாநிலங்களில் மது விற்பனைக்குத் தடை. கம்பி யில்லா தந்தி கண்டு பிடித்த மார்க்கோனிக்கு நோபல் பரிசு.

**10:** சீன ராணுவம், லாசாவைப் பிடிக்க, தலாய் லாமா, இந்தியாவில் தஞ்சம். பாரோனெஸ் டி லாரோ, விமானம் ஓட்டும் முதல் பெண் என்ற சிறப்பினைப் பெற்றார். ரயில்களின் கால தாமதத்துக்குக் காரணமாவ தாகக் கூறி, பிரான்ஸ் தேசத்து **ரயில்களில் முத்த மிட்டுக்கொள்ளுவது தடை செய்யப்பட்டது.** அன்னை தெரசா அல்பேனியப் பெற் றோருக்கு மகளாக ஜன னம். தாமஸ் ஆல்வா எடிசன் செயல் முறை விளக்கத்துடன் சினி மாவை அறிமுகப் படுத்தினார். லியோ டால்ஸ்டாய் மரணம். இந்த வருடத்தின் நோபல் பரிசுகளில் ஐந்தில் மூன்றை ஜெர்மனி தட்டிச் சென்றது.



• ஐன்ஸ்டீன்

**11:** உலகப் புகழ்பெற்ற மோனாலிசா ஓவியம் பாரிசில், கண்காட்சியிலிருந்து காணாமல் போனது. இத்தாலியில் முப்பதாயிரம் பேர் காலராவால் மரணம். மேரி கியூரிக்கு இரண்டாம் தடவையாக நோபல் பரிசு. சன்-யாட்-சன் சீனக் குடியரசின் முதல் ஜனாதிபதியானார்.



• லெனின்

**12:** பெருமைக்குரிய டைடானிக் கப்பல் வடஅட் லாண்டிக்கில் மூழ்கியதால் 1513பயணிகளும் பலி. ஹாலிவுட் டில் சினிமாவுக்கு அதுவே கதைத் தீனியானது.

**13:** நியூயார்க்கில் கிராண்ட் சென்ட்ரல் ஸ்டேஷன் துவக்கம். உலகின் பெரிய ரயில் நிலையம் என்ற பெருமை! மிசிகன் நகரில், **நாயின் மூளையை, மனிதனுக்குப் பொருத்தும் சோதனை ஆபரேஷன் நடந்தது.** தோல்வி. மாபெரும் பொறியியல் சாதனையான 51 மைல் நீள பனாமா கால்வாய் துவக்கம். **தாகூருக்கு நோபல் பரிசு.**

**14:** இது ஒரு சண்டை ஆண்டு! ஆஸ்திரியா, சைபீரியா மீது படையெடுப்பு. ஜெர்மனிக்கும், பிரான்சுக்கும் சண்டை. பிரிட்டனுக்கும் ஜெர்மனிக்கும் போர். ஆஸ்திரியாவுக்கும், ருஷ்யாவுக்கும் சண்டை. ஜப்பானுக்கும் ஜெர்மனிக்கும் போர். ருஷ்யா, ஆர்மேனியாவைப் பிடித்தது. முதல் உலக யுத்தம். போதுமடா சாமி!

**15:** இத்தாலியில் பூகம்பம். இருபத்தி ஒன்பதாயிரம் பேர் பலி! பிரிட்டனில் வரலாறு காணாத வகையில் பிரெட் விலை ஏற்றம்.

**16:** எக்ஸ்-ரே கண்டு பிடிப்பு.

**17:** முப்பது வயதைக் கடந்த **திருமணமான**

# பருந்துப் பார்வையில் கடந்த நூற்றாண்டு!

பெண்களுக்கு பிரிட்டனில் வாக்குரிமை. அழகுப் பதுமையான டச்சு ஆட்டக்காரி மாதாஹரி, வேஷக்காரி என்பது கண்டுபிடிக்கப்பட்டு, தூக்கிலிடப்பட்டாள். செஞ்சிலுவைச் சங்கத்துக்கு நோபல் பரிசு.

**18:** முதல் உலக யுத்தம் முடிவுக்கு வந்தது. பிரான்ஸ் மக்களுக்கு குதிரை இறைச்சி மீது புது மோகம். உலக யுத்தத்தில் மொத்தம் ஒரு கோடி பேர் உயிரிழந்ததாக புள்ளி விவரம்.

**19:** **ரூத்தர் போர்டு அணுவைப் பிளந்து புரட்சி செய்தார்.** முசோலினி பாசிசக் கட்சி துவக்கினார்.

**20:** மது உற்பத்தி மற்றும் விற்பனைக்கு அமெரிக்காவில் தடை. **ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தில் முதல் தடவையாக நூறு பெண்களுக்கு அட்மிஷன்.** அமெரிக்காவில், முதல் தடவையாக ரேடியோ மூலம் தேர்தல் ஒளிபரப்பு. ஆதாமும், ஏவாளும் ஆடையின்றித் தோன்றிய புனித பைபிள் படம், போப் ஆண்டவரின் உத்தரவின் படி, தடை செய்யப்பட்டது.



• பெர்னார்ட் ஷா

**21:** ஸ்வீடனில் மரண தண்டனை ரத்து. **குட்டை பாவாடை, கை வைக்காத மேல் ஆடை அணியும் பெண்களுக்கு பத்து முதல் நூறு டாலர் வரை அபராதம் என்று சிகாகோவில் சட்டம். வாஷிங்டனில், பெண்கள் சிகரெட் பிடித்தால் இருபத்தி ஐந்து டாலர் அபராதம்.** சீனாவில் கம்யூனிஸ்ட் கட்சி உதயம். பிரான்சில், முதல் முறையாக பி.சி.ஜி. தடுப்பு மருந்து ஒரு குழந்தைக்குத் தரப்பட்டது. உலகப் புகழ்பெற்ற விஞ்ஞானி ஆல்பர்ட் ஐன்ஸ்டினுக்கு நோபல் பரிசு. வருடத்தின் கடைசி நாளில் கிடைத்த இனிப்பான செய்தி : **இன்சுலின் கண்டுபிடிப்பு.**



• பிகாஸோ

**22:** ரீடர்ஸ் டைஜஸ்ட் பத்திரிகையின் முதல் இதழ் வெளியீடு. ருஷ்யாவில் ஸ்டாலின், கம்யூனிஸ்ட் கட்சியின் செயலாளர் ஆனார். தீவிரவாதிகளின் அச்சுறுத்தலுக்கு பயந்து, விஞ்ஞானி ஐன்ஸ்டின் ஜெர்மனியிலிருந்து வெளியேறினார். அமெரிக்காவில், முதல் விளம்பரம் ரேடியோவில் ஒலிபரப்பானது. பி.பி.சி. நிறுவனத்தின் தோற்றம். முசோலினி, இதாலியின் சர்வாதிகாரியானார். **பி.பி.சி.யின் முதல் செய்தி ஒலிபரப்பு.**

**23:** பக்கவாத நோய் தாக்குதலால், ருஷ்யாவில் லெனின் பதவி விலகினார். பிறன் மனை தொடர்பு காரணமாக, மனைவிமார்கள், தம் கணவரை விவாகரத்து செய்ய லண்டனில் சட்ட வழிவகை செய்யப்பட்டது. இங்கிலாந்தில் பதினெட்டு வயதுக்குட்பட்டவர்களுக்கு மது விற்பனை செய்யத் தடை. ஜப்பானிய நிலநடுக்கத்துக்கு மூன்று லட்சம் பேர் பலி.

**24:** விஷவாயு சேம்பர்

மூலம் மரண தண்டனை நிறைவேற்றப்பட்டது. கைது செய்யப்பட்ட **ஹிட்லருக்கு ஐந்தாண்டு சிறைத் தண்டனை.** பிரபல அமெரிக்க திரைப்பட நிறுவனமான எம்.ஜி.எம். துவக்கம். திரையில் சிங்கத்தின் உறுமல்.


• சர்ச்சில்

ஸ்டாலின் ருஷ்யாவின் பெருந்தலைவரானார். சீனாவில வெள்ளம். ஐம்பதாயிரம் பேர் பலி.

**25:** முசோலினி வானளாவிய அதிகாரம் படைத்த சர்வாதிகாரியானார். பீசா நகரின் சாய்ந்த கோபுரத்தின் சாய்வு கூடுவதாக அறிவிப்பு வந்தது. மனித இனத்தின் பரிணாம வளர்ச்சி பற்றி பள்ளிகளில் சொல்லித்தரக் கூடாது என்று அமெரிக்காவில் சட்டம். **ஜான் லோகி பேயர்டு, டெலிவிஷனை உருவாக்கினார்.** சார்லி சாப்ளினின் புகழ்பெற்ற கோல்டு ரஷ் படம் வெளியிடப்பட்டது. அமெரிக்காவில் முதல் சாலையோர உணவகம் 'மோட்டல்' துவக்கம். ஜார்ஜ் பெர்னாட்ஷாவுக்கு நோபல் பரிசு.

**26:** திரவ எரிபொருள் கொண்டு இயங்கும் ராக்கெட் உருவாக்கப்பட்டது. **இந்தியாவில் பெண்கள் தேர்தலில் நிற்பதற்கு அனுமதி வழங்கப்பட்டது.** லண்டனில், போக்குவரத்து சிக்னல் அமைக்கப்பட்டது, சாலைப் போக்குவரத்தின் மைல் கல். உலகப் புகழ்பெற்ற கலைக் களஞ்சியத் தொகுப்பு, என்சைக்ளோபீடியா பிரிடானிகாவின் பதின்மூன்றாவது பதிப்பு வெளியீடு. உலகத்தை ஆச்சரிய வெள்ளத்தில் ஆழ்த்திய மாயாஜால நிபுணர் ஹாரி ஹூடினி மரணம்.

**27:** உலகின் முதல் பெண் ஜாக்கிகளுக்கான பிரத்யேக குதிரை ரேஸ் நடந்தது. ஈராக்கில் முதல் எண்ணெய்க் கிணறு கண்டுபிடிக்கப்பட்டது.


• சார்லி சாப்ளின்

**28:** புகழ்பெற்ற ஆக்ஸ்போர்டு ஆங்கில அகராதி வெளியிடப்பட்டது. ராமன் விளைவு : இந்திய விஞ்ஞானி சி.வி. ராமனின் கண்டுபிடிப்பு. முழுமையான பேசும் படமான 'தி டெரர்' திரையிடப்பட்டது. ஆஸ்திரேலியாவுக்கு எதிரான கிரிக்கெட் டெஸ்ட்டில், முதல் தடவையாக 675 ரன் வித்தியாசத்தில் இங்கிலாந்து வெற்றி.

**29:** ஹெர்ஜ் என்பவரது படைப்பான 'டின் டின்' கார்ட்டூன் கதாபாத்திரம் அறிமுகமானது. அமெரிக்காவில், விமானத்துக்கு உள்ளே, பொழுதுபோக்குக்காக சினிமா காட்டுவது ஆரம்பம். ஹாலிவுட் படங்களுக்கு ஆஸ்கார் விருது அறிமுகம். போப் ஆண்டவரின் வசிப்பிடமான 'வாடிகன்' நகரம், தனிநாடானது. **வரலாறு காணாத விதமாக, ஸ்டாக் மார்க்கெட்டில் பங்குகளின் விலைகளில் சரிவு.** இது நடந்த வியாழக் கிழமை, இன்றளவும் 'கறுப்பு வியாழன்' என்று குறிப்பிடப்படுகிறது. **துருக்கியில் பெண்களுக்கு வாக்குரிமை.** ஜே.ஆர்.டி. டாடா விமான ஓட்டிக்கான லைசென்ஸ் பெற்றார். இந்த லைசென்ஸ் பெற்ற முதல் இந்தியர் அவர்தாம்.

**30:** ஒரே இன்னிங்சில், 452 ரன்கள் விளாசி, டொனால்டு பிராட்மென் சாதனை. சீனாவில கடும் பஞ்சம். இருபது லட்சம் பேர் பலி. கிளைடு டாம்பஃப் என்பவர், புளூட்டோ கிரகத்தைக் கண்டுபிடித்தார். விஞ்ஞானிகள் (தப்புக்) கணக்குப் போட்டு, மனிதன் 2050ம் ஆண்டில், சந்திரனுக்குப்


• ஹெலன் ஹெல்வர்



• ரூஸ்வெல்ட்



• எலிசபெத் டெய்லர்

# பருந்துப் பார்வையில் கடந்த நூற்றாண்டு!

போவான் என்று கூறினார்கள். **தென் ஆப்பிரிக்காவில், வெள்ளை இனப் பெண்களுக்கு வாக்குரிமை.** சீனாவில், பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த மனிதனின் மண்டை ஓடு கண்டுபிடிக்கப்பட்டது. சி.வி. ராமனுக்கு நோபல் பிரசு. திகில் மன்னன் ஹிட்ச் காக்கின் முதல் பேசும் திகில் படம் : பிளாக் மெயில். நவீன கம்ப்யூட்டரை வடிவமைத்தனர்.

**31:** இங்கிலாந்தில் சினிமா தியேட்டர்களுக்கு ஞாயிற்றுக் கிழமை விடுமுறை என்பதை மாற்றி சினிமா காட்ட முடிவு. நியூயார்க்கில் உலகின் மிக உயரமான கட்டடம் 'எம்பயர் ஸ்டேட் பில்டிங்' (ஜீன்ஸ் : அதிசயம் பாடலில் பார்த்திருப்பீர்களே!) திறப்பு. சீனாவில், சியாங் ஆற்று அணை உடைந்து நூற்றுக் கணக்கானவர்கள் பரிதாப மரணம். உலகப் புகழ்பெற்ற வயலினிஸ்ட் யகுதி மெனுஹினின் முதல் இசை நிகழ்ச்சி லண்டனில். **இந்தியாவின் முதல் சினிமாவான 'ஆலம் ஆரா' வெளியீடு.**



• தாமஸ் ஆல்வா எடிசன்

**32:** பாலஸ்தீனத்தில் நியாண்டர்தால் மனிதர்கள் மூவரின் எலும்புக் கூடு கண்டுபிடிப்பு. பிரெஞ்சு ஜனாதிபதி பால் டௌமர் படுகொலை. காமெடி இரட்டையர் லாரல் – ஹார்டி சினிமா பிரவேசம்.

**33:** ஹிட்லர், ஜெர்மனியின் சான்சலர் (ஜனாதிபதி) ஆனார். அத்தனை எதிர்க்கட்சிகளுக்கும் தடை. சகட்டு மேனிக்கு பந்து வீசி, சர்ச்சை ஏற்படுத்திய 'பாடி லைன்' கிரிக்கெட் போட்டித் தொடரில் இங்கிலாந்து வெற்றி. ஜெர்மானிய நடிகை மர்லின் டய(ட்)ரிச் சைப் பின்பற்றி, **பெண்கள், ஆண்களின் உடைகளை அணியத் தொடங்கினர்.** 1936ல் நடக்கவிருந்த ஒலிம்பிக் போட்டிகளில் பங்கேற்க, ஜெர்மன் யூதர்களுக்குத் தடைவிதிக்கப்பட்டது. **பார்வையற்ற, காது கேளாத, உடல் ஊனமுற்றவர்களுக்கு கட்டாய கருத்தடை என்ற ஹிட்லரின் அறிவிப்பு ஆண்டின் கிளைமாக்ஸ்.** தொழில்மயமாகிவிட்ட நாடுகளில், வேலை இல்லாத் திண்டாட்டம், வரலாறு காணாத அளவு எட்டியது.

**34:** விம்பிள்டன் டென்னிஸ் போட்டியில், பெண்கள் ஷார்ட்ஸ் அணிந்து ஆட அனுமதி. ஹிட்லரை பதவியிலிருந்து இறக்க சதிசெய்ததாகக் குற்றம்சாட்டப்பட்டு, மியூனிச் நகரில் பல நூறு பேருக்கு மரண தண்டனை. முசோலினி, இதாலியில் எட்டு வயது முதல் ஐம்பத்து ஐந்து வயது வரையானவர்களுக்குக் கட்டாய ராணுவப் பயிற்சிக்கு உத்தரவிட்டார். ஒலிம்பிக் நீச்சல் சாம்பியன் ஜானி விஸ்முல்லர். 'டார்சன் அண்டு தி ஏப்' படத்தில் டார்சனாக நடித்தார். நைலான் உருவாக்கப்பட்டது. பெர்ஷியாவுக்குப் புதுநாமகரணம் : ஈரான். காமிக் புத்தகங்களின் வரவு!

**35:** பெர்லினில் ஹைடெக் முறையில் டெலிவிஷன் ஒளிபரப்பு. அலபாமா மாகாணத்து மாணவன் ஒருவன், ஐந்து புதிய உலக சாதனைகளை நிகழ்த்தி, ஆறாவதாக நூறு கெஜ தூர ஓட்டத்தில் முந்தைய சாதனையான 9.4 விநாடியிலேயே வெற்றி பெற்றான். இப்படிப்பட்ட வியக்கத்தகு சாதனை படைத்த மாணவன்: ஜெசி அவன்ஸ். ஜெர்மனியின் தேசியக் கொடியில், நாஜிகளின் ஸ்வஸ்திக் இடம்

பெற்றது.

**36:** ஜெர்மனியில், 'மக்கள் கார்' என்ற சிறப்புப் பெற்ற 'வோக்ஸ் வாகன்' அறிமுகம். **பி.பி.சி.யில் முதல் தடவையாக இரண்டு பெண்கள், அறிவிப்பாளர்களானார்கள்.** கம்யூனிச தத்துவத்தில் ஊறியவரான மாக்சிம் கார்கி மரணம். பெர்லின் ஒலிம்பிக்கில், ஜெசி அவன்ஸ் நாலு தங்கம் வென்றார்.

**37:** 'நைலான்' காப்புரிமை பெறப்பட்டது. பர்மா தனிநாடானது.

**38:** வால்ட் டிஸ்னியின் முதல் கார்ட்டூன் படமான ஸ்னோ ஒயிட்டும், ஏழு சித்திரக் குள்ளர்களும் உருவாக்கப்பட்டது. **நைலான் கொண்டு பல் துலக்கும் பிரஷ் உருவாக்கப்பட்டது.** ஹிட்லர் – முசோலினி நெருங்கிய நண்பர்களாக அறிவித்துக் கொண்டனர். ஆஸ்திரேலியாவின் டான் பிராட்மன், எழுபத்து மூன்று நிமிடங்களில் சதம் அடித்து சாதனை. அமெரிக்காவில், சூப்பர்மேன் படக்கதை ஆரம்பம். மிகப் பெரிய பயணிகள் கப்பலான குவீன் எலிசபெத் வெள்ளோட்டம்.

**39:** இரண்டாம் உலகப் போர் துவக்கம். ஜெர்மனி, போலந்தைத் தாக்கியது. பிரிட்டனும், பிரான்சும், ஜெர்மனியோடு போரிட்டன. சோவியத் துருப்புகள், போலந்தில் நுழைந்தன. டமால், டுமீல்...

**40:** பொதுவான பணிகளுக்கான வாகனம் என்ற பொருளில், (ஜெனரல் பர்ப்பஸ்) GP என்று சுருக்கமான பெயரில் உருவானது ஜீப். ராணுவ உபயோகமே பிரதானம்.

**41:** நாற்பத்து இரண்டாயிரம் டன் எடை கொண்ட போர்க் கப்பல் 'பிஸ்மார்க்' கடலில் மூழ்கியது. வர்த்தக ரீதியிலான டெலிவிஷன் உற்பத்தி ஆரம்பம். ஹிட்லரும், முசோலினியும் அமெரிக்காவுக்கு எதிராகப் போர் முழக்கமிட்டனர். **பென்சிலின், ஒரு மருந்தாக உபயோகிக்கப்பட்டது.**

**42:** அமெரிக்காவில் ராணுவத்துக்கு உதவ, **பெண்கள் ராணுவம் துவக்கம்.** அமெரிக்க கப்பற்படையில், கறுப்பு இனத்தவர்கள் சேர்த்துக் கொள்ளப்பட்டதென்பது தேவை கருதி எடுக்கப்பட்ட, மரபு மீறிய முடிவு.

**43:** முசோலினி பதவியிலிருந்து தூக்கி எறியப்பட்டார். இதாலி சரண். சர்ச்சில் (பிரிட்டன்) ரூஸ்வெல்ட் (அமெரிக்க அதிபர்) ஸ்டாலின் பிரதமர் (ருஷ்ய அதிபர்) மூவரின் அதிமுக்கிய சந்திப்பு – டெக்ரானில்.

**44:** டியாக்சிரிபொ நியூக்ளிசிக் ஆசிட்– (சுருக்கமாக டி.என்.ஏ) இதிலிருந்துதான் மரபணுக்கள் உருவாகின்றன என்று கண்டுபிடிப்பு. நியூயார்க்கில் முதல் கண் வங்கி திறப்பு. உலகின் மிகப் பெரிய கணக்கீடு இயந்திரம் ஹார்வர்டு பல்கலைக் கழகத்தில் நிறுவப்பட்டது. நான்காம் முறையாக ரூஸ்வெல்ட் அமெரிக்க ஜனாதிபதியானார்.



• ஸ்டாலின்

**45:** ரூஸ்வெல்ட் மரணத்தையடுத்து, ஹாரி ட்ருமன் அமெரிக்க ஜனாதிபதியானார். முசோலினியும் அவரது சக பெண்மணி கிளாரட்டாவும் கொல்லப்பட்டனர். ஹிட்லரும் அவரது சக பெண்மணி ஈவா பிரவுனும் தற்கொலை. ஜெர்மனி சரண். ஐக்கிய நாடுகள் சபை உருவாக்க ஆயத்த முயற்சி. ஐம்பது நாடுகள் கையெழுத்திட்டன. **ஐ.நா. சபை உதயம்.** பிரிட்டனில் லேபர் கட்சி ஆட்சியைப் பிடித்தது. அமெரிக்கா, ஜப்பான் நாட்டின் ஹிரோஷிமா மீது 'சின்னப் பையன் (லிட்டில் பாய்) என்கிற

• மேரிக்யூரி



• ஹிட்லர்





• கென்னடி

# பருந்துப் பார்வையில் கடந்த நூற்றாண்டு!

யுரேனியம் 235 வகை அணு குண்டை வீச, உடனடியாக எழுபதாயிரம் பேர் மரணம். அடுத்த மூன்றாவது நாளில் நாகசாகி மீது புளூடோனியம் ரக அணுகுண்டை வீசியது. நாற்பதாயிரம் பேர் உடனடி மரணம். ஜப்பான் அலறிக் கொண்டு சரணடைந்தது. மொத்தத்தில் ஐந்தரைக் கோடி பேரை இரண்டாம் உலகப் போர் பலி வாங்கிய கொடூரம். **உலக வங்கியும் உருவானது.**

**46:** ENIAC என்ற பெயரில் அமெரிக்காவின் ஐ.பி.எம். நிறுவனம், உலகின் அதிவேக கால்குலேட்டர் வடிவமைப்பு. **யுனெஸ்கோ தொடக்கம்.**

**47:** இந்த நூற்றாண்டின் முக்கியச் சம்பவங்களைப் பட்டியல் போடுபவர்கள், இந்தியாவைப் பற்றிக் குறிப்பிடுவது, இந்திய சுதந்திரம், பாகிஸ்தான் பிரிவினை, இவைகளை மட்டுமே குறிப்பிடுகின்றன. **மனிதர்கள் என்ற வகையில் காந்திஜி மட்டுமே இடம்பெறுகிறார். பி.பி.சி. கணக்கெடுப்பில் பெண்மணிகளில் இடம்பிடித்திருப்பவர் இந்திராகாந்தி.**

**48:** இன்று பிரபலமாக பேசப்படும் GATT (General Agreement on Tariffs and Track) உதயம். காந்திஜி சுட்டுக் கொலை. இலங்கை சுதந்திரம் அடைந்து, காமன் வெல்த் அமைப்பில் சேர்ந்தது. டான் பிராட்மன் ஓய்வு பெற்றார். இன்னும் நாலே நாலு ரன்கள் எடுத்திருந்தால், ஆடின கிரிக்கெட் டெஸ்ட் ஒவ்வொன்றிலும் சராசரியாய் சதம் அடித்த பெருமை பெற்றிருப்பார். முகமது அலி ஜின்னா மரணம்.

**49:** விமான விபத்து ஒன்றில் இதாலியின் தேசிய கால்பந்து அணி, கூண்டோடு கைலாசம் போன பரிதாபம். சோவியத் யூனியனின் அணுகுண்டு சோதனை. ஜெர்மன் ஜனநாயகக் குடியரசு உதயம்.

**50: ஒன்றுக்கு மேற்பட்ட திருமணம் புரிதல், சிசுக் கொலை, குழந்தைத் திருமணம் ஆகியவற்றை சீனா தடை செய்தது.** அமெரிக்காவில், உலகின் முதல் சிறுநீரக மாற்று ஆபரேஷன். தென் கொரியா மீது வடகொரியா படையெடுப்பு. திபெத் மீது சீனா ஆக்கிரமிப்பு.

**51:** அமெரிக்காவின் அணு ஆயுத பரிசோதனை. ஐ.நா. சபைக்குப் போனது காஷ்மீர் பிரச்னை. புதுடில்லியில் முதலாவது ஆசிய விளையாட்டு. பாகிஸ்தான் பிரதமர் லிகாத் அலிகான் படுகொலை.

**52 :** அமெரிக்காவின் பென்சில்வேனியா மருத்துவமனையில் செயற்கை இதய அறுவைச் சிகிச்சை. பயணிகள் விமானத்தில் புதிய சகாப்தம் : ஜெட் விமானம். குழந்தை சார்ந்த கல்வி முறையை அறிமுகப் படுத்திய மரியா மாண்டிசோரி மரணம். பிரிட்டனில், **பெண்களுக்கு, ஆண்களுக்கு இணையான ஊதியம் அமல்.** பிரிட்டனின் முதல் அணுகுண்டு சோதனை.



• மார்டின் லூதர்கிங்

**53 :** ஹாலிவுட் படத் தயாரிப்பு நிறுவனமான ட்வென்டியத் செஞ்சுரி பாக்ஸ். சினிமாஸ்கோப் படம் தயாரிப்பு. டென்சிங்,

ஹில்லாரி இருவரும் எவரெஸ்ட் சிகரத்தைப் பிடித்தல். இரண்டாம் எலிசபெத், பிரிட்டிஷ் மகாராணியாகி முடிசூட்டிக் கொண்டார். முடிசூட்டு விழாவை பன்னாட்டினரும் டெலிவிஷனில் கண்டுகளித்தனர். சோவியத் யூனியன் ஹைட்ரஜன் குண்டு சோதனை. கென்னடி - ஜாக்குலின் மணம். பாகிஸ்தான் இஸ்லாமியக் குடியரசானது. **போலியோவுக்கு தடுப்பு மருந்து கண்டுபிடிப்பு.** சர்ச்சிலுக்கு இலக்கியத்துக்கான நோபல் பரிசு.

**மறக்க முடியுமா!**



**ஸ்ரீபெரும்புதூரில்**
**சதைத் துணுக்குகளாய் ராஜீவ்**
**RDXக்குப் பின்னால்**
**ஆயிரம் மர்மங்கள்**
**தன்மகளை**
**சோனியாவுக்கு அறிமுகப்படுத்துகையில்**
**நளினியின் முகம்**
**எப்படியிருக்குமோ?...**

**54:** குடும்ப உறவுகளைப் பெரிய அளவில் எதிர்காலத்தில் டெலிவிஷன் பாதிக்கப் போகிறது என்று பன்னிரெண்டாவது போப் ஆண்டவர் எச்சரிக்கை. புகை பிடிப்பதற்கும், கேன்சருக்கும் தொடர்பு உண்டு என்று ஆய்வில் கண்டுபிடிப்பு. அணு ஆயுதங்களைக் குவிக்க வேண்டாமென்று, உலக நாடுகளுக்கு நேருஜி அறைகூவல்.

**55:** சீனாவில் கட்டாய ராணுவச் சேவை அறிமுகம். விஞ்ஞானி ஐன்ஸ்டின், அணு ஆயுதத்தை எதிர்த்துக் குரல் கொடுத்தார். ஹிரோஷிமாவில் அணு ஆயுத தாக்குதலுக்குள்ளாகி, உயிர் பிழைத்தவர்கள் பலர் அமெரிக்காவுக்கு பிளாஸ்டிக்-சர்ஜரி சிகிச்சைக்காக வருகை. அமெரிக்காவின் கலிபோர்னியாவில் 'டிஸ்னி உலகம்' உதயம். உடலைக் கவ்விப் பிடிக்கும்படியாக ஜீன்ஸ் அணிவது அமெரிக்காவில் ஃபாஷனானது.

**56:** அமெரிக்காவில், மார்டின் லூதர்கிங் போராட்டம் வலுத்தது. பிரிட்டிஷ் ரயில்களில் மூன்றாம் வகுப்புப் பெட்டிகள் ஒழிப்பு. **மர்லின் மன்றோ திருமணம்.** சூயஸ் கால்வாய் தேசியமயமாக்கப்பட்டது. அணி சேரா நாடுகள் அமைப்பு உதயம்.

**57:** லாரல் - ஹார்டி இரட்டையரில் ஹார்டி மரணம். குடிகாரரின் மூச்சில், மதுவின் அளவைக் கண்டுபிடித்துச் சொல்லும் 'டிரங்கோ மீட்டர்' கண்டுபிடிப்பு. அகதா கிறிஸ்டியின் நாடகமான 'எலிப் பொறி' 2000 தடவை மேடையேறிய சாதனை. ருஷ்யா, ஸ்பூட்னிக்-1 செயற்கை கோளை அனுப்பியது. அடுத்து, 'லைகா' என்ற நாயுடன் இன்னொரு செயற்கைக் கோள் ஏவப்பட்டது.

**58:** நுரையீரல் புற்றுநோய்க்கு, புகை பிடிப்பதே மூலகாரணம் என்று பிரிட்டிஷ் மருத்துவக் கழகம் அறிவிப்பு. எக்ஸ் புளோரர்-1 கலத்தை அனுப்பியதன் மூலம் அமெரிக்காவின் வான்வெளி சரித்திரத்தில் பிள்ளையார் சுழி. **இங்கிலாந்தின் சர்ச் சபை, குடும்பக் கட்டுப்பாட்டுக்கு ஆதரவு.**

**59:** தலாய் லாமா, திபெத்திலிருந்து தப்பியோடி, இந்தியாவில் தஞ்சம். பிகாசோவின் ஓவியம் ஒன்று ஐம்பத்தையாயிரம் டாலருக்கு விற்று சாதனை. ஏபின், பேக்கர் என்ற இரு குரங்குகள் விண்வெளியில் பறந்து விட்டு, உயிருடன் பூமிக்குத் திரும்பி வந்தன. உலக அகதிகள் ஆண்டு. லண்டன் மருத்துவமனை ஒன்றில் மனித உடல் உறுப்பு வங்கி துவக்க முயற்சி. **சாலைகளில் சோடியம் விளக்குகள் பொருத்தும் பரீட்சார்த்த முயற்சி. டிரான்சிஸ்டர் ரேடியோ அறிமுகம்.** இலங்கை பிரதமர் சாலமன் பண்டார நாயகே படுகொலை. **இந்தியாவில் முதல் தொலைக்காட்சி நிலையம் உருவானது.**

**60:** அமெரிக்காவின் எதிர்ப்பை மீறி பிரான்ஸ் அணு ஆயுத சோதனை. பென்ஹர் திரைப்பட்டத்துக்கு பத்து ஆஸ்கார் விருதுகள். உலகின் முதல் பெண் பிரதமராக ஸ்ரீமாவோ பண்டாரநாயகா ஸ்ரீலங்காவில் பதவியேற்றார். கென்னடி அமெரிக்க ஜனாதிபதி. மிகக் குறைந்த வயதில் (43) ஜனாதிபதி என்ற பெருமை.

**61:** பிரிட்டனில் கருத்தடை மாத்திரைகள் விற்பனைக்கு

அறிமுகம். மெர்குரி கிரகத்துக்கு அனுப்பப்பட்ட விண்வெளிக் கலத்தில் ஒரு மனிதக் குரங்கு. சோவியத் யூனியனின் யூரிகேகரி

# பருந்துப் பார்வையில் கடந்த நூற்றாண்டு!

கன், விண்வெளியில் பறந்த முதல் மனிதர். கிழக்கு, மேற்கு ஜெர்மனிகளுக்கு இடையே சுவர் கட்டும் பணி.

**62:** பிரிட்டன், ஏரியல் என்ற விண்கலம் செலுத்தியது. ஜப்பானில் பயன்படுத்தியதை விட ஐந்து மடங்கு சக்தி கொண்ட அணுகுண்டு வெடித்து அமெரிக்கா சோதனை.

**63:** வாஷிங்டன் கண்காட்சியில் புன்னகை அரசி 'மோனாலிசா' ஓவியம். இறந்த மனிதனின் சிறுநீரகத்தை உயிரோடு இருப்பவருக்கும் பொருத்த முயற்சி. லாரன்ஸ் ஆப் அரேபியா படத்துக்கு ஏழு ஆஸ்கார் விருதுகள். வாஷிங் டன்னில் மனித உரிமைப் பேரணி. **"என் இனிய நண் பர்களே! எனக்கு ஒரு கனவு இருக்கிறது" என்ற மார்ட்டின் லூதர் கிங்கின் புகழ்பெற்ற சொற்பொழிவு.** கருவில் இருந்த குழந்தைக்கு வெற்றிகரமாய் ரத்தம் செலுத்தப்பட்டது. கென் னடி கட்டுக் கொலை. செஞ்சிலுவை சங்கத்துக்கு நோபல் பரிசு.

**64:** ரிச்சர்டு பர்டன் - எலிசபெத் டைலர் திருமணம். **நெல்சன் மண்டேலாவுக்கு ஆயுள் தண்டனை விதிப்பு.** நிறவெறி காரணமாக, தென்னாப்ரிக்காவுக்கு ஒலிம்பிக்கில் பங்கேற்கத் தடை. சீனாவின் அணுகுண்டு வெடிப்பு சோதனை. நேருஜி மரணம்.

**65:** சர்ச்சில் மரணம். **பிரிட்டிஷ் டெலிவிஷனில் சிகரெட் விளம்பரங்களுக்குத் தடை.** யூனிசெப் அமைப்புக்கு நோபல் பரிசு. புகழ்பெற்ற சவுண்டு ஆப் மியூசிக் படம் வெளியீடு.

**66: இந்தியாவைச் சேர்ந்த மருத்துவக் கல்லூரி மாணவி ரீடா பெரியா 'மிஸ் வோர்ல்டு' பட்டம் பெற்றார்.** வால்ட் டிஸ்னி மரணம். ஆனால் அவரது மிக்கி மவுஸ் சிரஞ்சீவியாய் இன்னும் வாழ்கிறது.

**67:** அப்போலா-1 விண்கலத்தின் கேபின் கென்னடி விண் வெளியை ஏவு தளத்தில் வெடித்துச் சிதறி மூவர் மரணம். எலிசபெத் டெய்லருக்கு ஆஸ்கார் விருது. சீனா ஹைட்ரஜன் குண்டு தயாரிப்பு. தென்னாப்பிரிக்காவில், டாக்டர் கிறிஸ்டி யன் பெர்னார்டு, வெற்றிகரமாய் இதய மாற்று ஆபரேஷன் செய்தார்.

**68:** மார்ட்டின் லூதர் கிங் படுகொலை. தாராசிங், உலக மல்யுத்த சாம்பியன். பிறப்பால் இந்தியரான விஞ்ஞானி ஹர்கோவிந்த குரானாவுக்கு நோபல் பரிசு.

**69: டெஸ்ட் டியூப் குழந்தைக்கான ஆராய்ச்சிகள் தீவிரம்.**

**70:** நோபல் பரிசு பெற்ற இந்திய விஞ்ஞானி சி.வி. ராமன் மரணம். கிழக்கு பாகிஸ்தானில் புயல். ஒன்னரை லட்சம் பேர் பலி.

## மறக்க முடியுமா!



***பத்மினி வழக்கு- 'சிதம்பர ரகசியம்' அம்பலமானது காவலர்களே கைதிகளாயினர்! கற்புள்ள தீர்ப்பு! பத்மினிக்கு- மாதர் சங்கத்தால் மறுவாழ்வு மார்க்சிஸ்ட் அலுவலகத்தில் மணவாழ்வு!***

**71:** வியட்நாம் போர் முடிந்தது. பங்களாதேஷ் தனிநாடு என்று முஜிபுர் ரஹ்மான் அறிவிப்பு.

**72:** உலகில் மிக அதிக மாய் சினிமா தயாரிக்கும் நாடு என்று இந்தியாவுக் குப் பெருமை. (1971ல் 433 படங்கள்) சுற்றுச்சூழல் தினமாக ஜூன் 5 அறி விப்பு. மியூனிச் நகரில் ஒலிம்பிக் விளையாட்டு கள் ஆரம்பம். அரேபிய கொரில்லாக்கள் ஒலிம்பிக் கிராமத்தில் புகுந்து இஸ் ரேலிய விளையாட்டு வீரர் களைச் சுட்டு வீழ்த்திய கொடூரம். ஒலிம்பிக் சரித் திரத்திலேயே ஒரு கரும் புள்ளி. ஏ300 ஏர் பஸ் வெள்ளோட்டம்.

**73:** ஓவியர் பிகாசோ மரணம். எகிப்து, சிரியா மீது இஸ்ரேல் படை யெடுத்தது.

**74:** இந்தியாவின் முதல் அணுகுண்டு சோதனை. இடம் : ராஜஸ்

தான் மாநிலம் போக்ரான். வாட்டர் கேட் ஊழல் காரணமாக அமெரிக்க அதிபர் நிக்சன் பதவி விலகல்.

**75: ஜப்பானியப் பெண் திருமதி ஜிங்கோடபை, எவரெஸ்ட் சிகரத்தில் ஏறினார்.** பாங்களாதேஷில் ராணுவ நடவடிக்கை. முஜிபுர் ரஹ்மான் கொலை. சோவியத் யூனியனின் ஹைட்ரஜன் குண்டு தயாரிப்பில் முக்கிய பங்குவகித்த விஞ்ஞானி டாக்டர் சுக்கரோவுக்கு நோபல் பரிசு.

**மறக்க முடியுமா!**



**1959- சென்னை மாநகராட்சித் தேர்தலில் முதன்முதலாய் தி.மு.க பிள்ளையார் சுழி போட்டது இல்லை... இல்லை பெரியார் சுழி போட்டது!**

**76:** நட்புறவு மற்றும் ஒத்துழைப்பு ஒப்பந்தத்தில் இந்திராகாந்தியும் ருஷ்ய அதிபர் பிரஷ்னேவும் கையெழுத்திட்டனர். அமெரிக்கா வியாழன் கிரகம் பற்றிய ஆராய்ச்சியில் ஆர்வம் காட்டியது. சினாவில் மாசேதுங் மரணம்.

**77:** அமெரிக்க ஜனாதிபதியானார் ஜிம்மி கார்ட்டர். இரண்டு போயிங் விமானங்கள் மோதி 582 பேர் பரிதாப மரணம். பாகிஸ்தானில் ராணுவ அதிரடி நடவடிக்கை. ஜியாவுல் ஹக் தலைவராகி, புட்டோ பதவி இழந்தார்.

**78: உலகின் முதல் சோதனைக் குழாய் குழந்தை லூசி பிரவுன் பிறந்தது.**

**79:** அனைத்துலக குழந்தைகள் ஆண்டு. புட்டோ தூக்கில் இடப்பட்டார். இந்தியாவின் கடைசி பிரிட்டிஷ் கவர்னர் ஜெனரல் மவுண்ட் பேட்டன் பிரபு, ஒரு வெடி குண்டு விபத்தில் மரணம். ஸ்கைலாப் பூமியில் விழுந்தது. அன்னை தெரசாவுக்கு நோபல் பரிசு.

**80:** அமெரிக்க ஒலிம்பிக் சாம்பியன் ஜெஸி அவன்ஸ் மரணம். சீனா ஏவுகணைப் பரிசோதனை.

**81:** ரோனால்டு ரீகன் அமெரிக்க ஜனாதிபதி. டெஹ்ரானில் பிணைக் கைதிகளாக இருந்த அமெரிக்கர்கள் 444 நாள்கள் கழித்து விடுவிக்கப்பட்டனர். ரீகனை சுட முயற்சி. **உலகமே சந்தோஷப்பட்ட இளவரசர் சார்லஸ்-டயானா திருமணம்.**

**82:** இருபத்தியொரு பேர் கொண்ட இந்திய அணி அன்டார்டிகாவை அடைந்தது. ருஷ்யாவின் வீனஸ் 13 விண்கலம், வீனஸ் கிரகத்தில் இறங்கியது. பங்களாதேஷில் எர்ஷாத் பதவி இழப்பு. 1910க்குப் பின் இந்த நூற்றாண்டில் முதல் தடவையாக **ஹாலிவால் நட்சத்திரம் தெரிந்தது.** ரிச்சர்டு அட்டன் பரோவின் காந்தி படம் வெளியானது. முதல் தடவையாக **செயற்கை இதயம். மனிதனுக்குப் பொருத்தப்பட்டது.**

**83:** பெர்னி கிளார்க் என்ற செயற்கை இதயம் பொருத்தப்பட்ட மனிதர் இறந்தார். காந்தி படத்துக்கு எட்டு ஆஸ்கார் விருது. விஞ்ஞானி சந்திரசேகருக்கு நோபல் பரிசு.

**84:** இந்திய விண்வெளி வீரர் ராகேஷ் சர்மாவின் விண்வெளிப் பயணம். ஆக்ஸிஜன் இல்லாமல் எவரெஸ்ட் சிகரத்துக்கு செல்லும் சாதனை.

**85:** மும்பையில், **ஒரு ஓவரின் ஆறு பந்துகளிலும் சிக்சர் அடித்து ரவி சாஸ்திரி சாதனை.** எதியோப்பியாவில் பசியில் வாடும் குழந்தைகளைக் காக்க உலகெங்கும் இசை நிகழ்ச்சி மூலம் நிதி திரட்டும் முயற்சிக்கு பலத்த ஆதரவு. கொலம்பியாவில் ஒரு எரிமலை சீற்றத்தால் 13 ஊர்கள் தீப்பிழம்பில் மூழ்கின. இருபத்தி ஐயாயிரம் பேர் மரணம்.

**86:** ருஷ்யாவின் செர்னோபைல் அணு நிலையத்தில் கசிவு. பலத்த சேதம். உலகமெங்கும் பரபரப்பு. அணு சக்தி நிலையங்கள் பற்றிய விவாதம் சூடேறியது. வடதுருவத்தை அடைந்த முதல் பெண்மணி: ஆன்பான்கிராப்ட்.

நார்வேயில் 'க்ரோ ஹெர்லம் ப்ருண்ட்லாண்டு' என்ற பெண் மணி பிரதமரானார். மார்டினா நவரத்திலோவா, அகில உலக டென்னிசில் ஆயிரமாவது வெற்றிக் கனியைப் ஆடிப் பறித்தார்.

# பருந்துப் பார்வையில் கடந்த நூற்றாண்டு!

**87:** ஹாலிவுட்டுக்கு நூறாவது பிறந்த நாள். பங்களாதேஷில் புயல். இரண்டரை கோடி பேர் வீடு இழந்தனர். அமெரிக்க ஸ்டாக் மார்க்கெட்டில் பாதாள வீழ்ச்சி. 'கறுப்பு திங்கள்' என்று இப்போதும் குறிப்பிடப்படுகிறது.

**88:** அதிக காலம் பிரிட்டிஷ் பிரதமராக இருந்தவர் என்ற பெருமை மார்கரெட் தாட்சருக்குக் கிடைத்தது. வளைகுடாப் போர். லாஸ்ட் எம்பரர் படத்துக்கு ஒன்பது ஆஸ்கார் விருது. பாக். ஜனாதிபதி ஜியாவுல் ஹக், விமான விபத்தில் மரணம். சதி என்ற சந்தேகமும் உண்டு. சியோலில் ஒலிம்பிக்ஸ். நூறு மீட்டர் ஓட்டத்தில் தங்கம் வென்ற பென் ஜான்சனிடமிருந்து அது பறிக்கப்பட்டு, கார்ல் லூயிசுக்கு அளிக்கப்பட்டது. சோவியத் யூனியனின் அதிகாரம் படைத்த பெரும் தலைவரானார் கோர்பசேவ். அமெரிக்க ஜனாதிபதி ஜார்ஜ் புஷ். கிரிக்கெட் வரலாற்றில் அதிக ரன் எடுத்த பெருமை ரிச்சர்டு ஹாட்லிக்கு.

**89:** தென் துருவத்தில் இந்திய தேசியக் கொடி. சீனாவின் டினாமென் சதுக்கத்தில் மாணவர் புரட்சி. வரலாறு காணாத ரத்த வெள்ளம். ஓவியர் பிகாசோ வரைந்த சுய ஓவியம் நாலே முக்கால் கோடி டாலருக்கு விற்பனை. ஈரானில் கோமெனி மரணம். தலாய் லாமாவுக்கு நோபல் பரிசு. **பெர்லின் சுவர் தகர்ப்பு.** சுவரிலிருந்து எடுக்கப்பட்ட சின்ன கற்கள் நினைவுப் பொருளாக விற்பனை.

**90:** தென் ஆப்ரிக்காவில், ஆப்ரிக்க தேசிய காங்கிரஸ் மீதான தடை விலகியது. இருபத்தெட்டு வருட சிறை தண்டனை முடிந்து **நெல்சன் மண்டேலா விடுதலை.** ருஷ்யாவின் ஜனாதிபதியானார் யெல்சின். **சோவியத் யூனியன் சிதறியது.** ஜுராசிக் பார்க்கிற்கு அமோக வரவேற்பு. பிரிட்டன் பிரதமர் ஜான்மேஜர். ஜெர்மனிகள் ஜெர்மன் குடியரசு கூட்டமைப்பு என இணைப்பு.

**91:** வளைகுடாவில் போர். இஸ்ரேல் மீது ஈராக் ராக்கெட் வீச்சு. ஈராக்கிற்கு சொந்தமான நூறு டாங்குகள் அழிக்கப்பட்டன. டெல்அவிவில், ரியாத் மீது ராக்கெட் அட்டாக். வளைகுடா நாடுகளிலிருந்த ஒன்னேகால் லட்சம் இந்தியர்கள் இந்தியா திரும்பினர். ஏர் இந்தியாவின் இமாலய சாதனை. குவைத் எண்ணெய் கிணறுகளுக்கு ஈராக் தீ வைப்பு. 86 நாட்கள் பலத்த சேதம். வளைகுடா போர் முடிவுக்கு வந்தது. பிரான்சின் முதல் பெண் பிரதமர் எடித் கிரசென். வங்கதேச முன்னாள் பிரதமர் எர்ஷாதுக்கு பத்து வருட சிறை தண்டனை. ராஜீவ் படுகொலை.

**92:** அபரிமிதமாக சொத்து சேர்த்த வழக்கில், பங்களாதேஷ் ஜனாதிபதி எர்ஷாதுக்கு மூன்று வருட ஜெயில். வங்க இயக்குனர் சத்யஜித்ரேவுக்கு கௌரவ ஆஸ்கார் விருது.

## மறக்க முடியுமா!



**1967-**
**இவரால் எத்தனையோ மாணவர்கள் தேர்வில் வென்றார்கள் இவரை ஒருமாணவன் தேர்தலில் வென்றான்**

**93:** கிரிக்கெட்டர் ஆலன் பார்டரின் பத்தாயிரம் ரன் சாதனை. எய்ட்ஸ் காரணமாக, பிரபல பாலே டான்சர் ருடால்ப் நியூரெவ் மரணம். அமெரிக்காவின் தொழில் துறை வட்டாரத்தில், பிரபல கம்ப்யூட்டர் நிறுவனமான ஐ.பி.எம். சுமார் ஐந்து பில்லியன் டாலர் நஷ்டம் என்ற செய்தி பரபரப்பு ஏற்படுத்தியது. நியூயார்க் உலக வர்த்தக மையத்தில் மாபெரும் வெடிகுண்டு சதி. ஸ்டிராய்டு பயன்படுத்தியதற்கு தண்டனையாக, பென் ஜான்சனுக்குப் போட்டிகளில் பங்கேற்கத் தடை. இலங்கைப் பிரதமர் பிரேமதாசா மனித வெடிகுண்டு சதியில் படுகொலை. யாசர் அராபத்துக்கும் இஸ்ரேல் பிரதமர் ராபினுக்கும் நோபல் பரிசு.

**94:** ஒருவர் மீது

# பருந்துப் பார்வையில் கடந்த நூற்றாண்டு!

ஒருவர் அணுகுண்டு தாக்குதல் நடத்துவதில்லை என அமெரிக்க, ருஷ்யா உடன்பாடு. ஸ்டீவன் ஸ்பீல்பர்க்கின் ஷிண்ட்லர்ஸ் லிஸ்ட் படத்துக்கு ஏழு ஆஸ்கார். GATT உடன் படிக்கையில் 125 நாடுகள் கையெழுத்து. ஹஜ் பயணிகள் 250 பேர் நெரிசலில் சிக்கி மரணம். ஷுமேக்கர்லெவி வால் நட்சத்திரத்தின் ஒரு பகுதி சிதறி ஜூபிடரைத் தாக்கி யது. ஆபத்து ஏதுமில்லை. சந்திரிகா குமார துங்கா ஸ்ரீலங்கா ஜனாதிபதி. **சுஷ்மிதாசென், ஐஸ்வர்யா ராய் இருவரும் அழகு ராணிகளாகத் தேர்வு.**

**95:** ஒக்லஹோமா நகரின் முக்கிய கட்டடத்தில் குண்டு வெடித்ததில் நூறுபேர் மரணம். பிரான்சில் மீண்டும் அணு குண்டு சோதனை.

**96:** டீப் புளு என்ற கம்ப்யூட்டரை, செஸ் விளை யாட்டில் வென்றார் கேரி காஸ்பரோப். **நெல்சன் மண் டேலா, மனைவி வின்னியை விவகாரத்து செய்தார்.** ஒலிம் பிக் விளையாட்டுகளின் நூற்றாண்டு அட்லாண்டாவில் நடந்தது. ஒலிம்பிக் வளாகத்தின் மத்திய பூங்காவில் வெடி குண்டு வெடித்தது. சீனா அணுகுண்டு சோதனை. **சார்லஸ்–டயானா விவாகரத்து.** காபுல் நகரை தாலிபன் மதவாத அமைப்பு கைப்பற்றியது.

**97:** **குளோனிங் முறையில் 'டோலி' ஆட்டுக்குட்டி உரு வாக்கம்.** வியாழனில், நாசா விண்வெளி ஆய்வு நிலையத்தின் 'பாத் பைண்டர்' தரை இறங்குதல். சீனா அணுகுண்டு சோதனை. டயானா, கார் விபத்தில் கோர மரணம்.

**98:** பதினாலு ஆஸ்கார் வென்று, வசூலிலும் டைடானிக் படம் உலகையே கலக்கியது. ஈராக்கில் ஆயுத பரிசோதனை விவகாரம் பெரிதாகி, போரில் முடிவடையாமல், தவிர்க்கப் பட்டதற்கு ஐநாசபை பொதுச் செயலர் கோபி ஆனன் முக்கிய காரணம். **டெங்கு ஜுரத்துக்குத் தடுப்பு மருந்து கண்டுபிடிப்பு.** டைம் இதழின் நூற்றாண்டின் மாமனிதர்கள் இருபது பேர் பட்டியலில் **காந்திஜிக்கு இடம்.** பள்ளிச் சிறுவன் ஒருவன் துப்பாக்கியால் தம் பெற்றோரைக் கொன்றுவிட்டுப் பள்ளி வளாகத்திலும் தாறுமாறாக சுட்டு, பலரை காயப்படுத்திய கொடூரம் அமெரிக்காவையே உலுக்கியது. செயற்கைக் கால் பொருத்தப்பட்ட டாம் விட்டேகர் (அமெரிக்கா) எவரெஸ்ட் சிகரத்தை அடைதல். டயானா புதைக்கப்பட்ட இடத்தில் டயானா மியூசியம் திறக்கப்பட்டது. **கிளின்டன்–மோனிகா லெவன்ஸ்கி விவ காரம் உலகையே பரபரபாக்கியது.** உலகின் டாப் செல்வந்தர் கம்ப்யூட்டர் சக்ரவர்த்தி பில்கேட்ஸ். இந்தியர் அமர்தியா சென்னுக்கு நோபல் பரிசு.

**99:** இந்திய அழகி யுக்தா முகிக்கு உலகக் கிரீடம். ஸ்ரீலங்காவில் தேர்தல் பிரச்சாரத்தின்போது மனித வெடி குண்டு தாக்கி ஜனாதிபதி சந்திரிகா படுகாயம். தேர்தலில் வெற்றி...

## மறக்க முடியுமா!



**1938-**
**இராஜதானிப்**
**பிரதமராய் இருந்த**
**இராஜாஜி காலம்–**
**உயர்நிலைப்பள்ளிகளில்**
**இந்தி கட்டாயப்பாடம்**
**பிறகு–**
**தேர்தல்**
**தேர்வெழுதும்போது**
**காங்கிரஸ் தோற்றது**

• • •

**1921-**
**நீதிக் கட்சியின்**
**இராம ராய நிஸ்கரால்**
**முதன் முதலாய்ப்**
**பிறந்தது**
**வகுப்புரிமை ஆணை**
**பெண்களுக்கு**
**வோட்டுரிமை**

• • •

**பெரியார்**
**மணியம்மையை**
**மணந்தபிறகு**
**தி.கவிலிருந்து**
**தோன்றியது**
**தி.மு.க.**
**பிரச்னை எப்படியோ**
**பெரிதாகிவிடுகிறது**
**அன்று–வாரிசு**
**இன்று–வளர்ப்புமகன்**




2000 ஜனவரி 2
பிரமாதி மார்கழி 18
மலர் : 58
இதழ் : 23

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




## புலி வாலைப் பிடிக்கலாமா?

**வி**டுதலைப் புலிகள் இலங்கை அதிபரைக் கொல்ல முயன்றது வடி கட்டிய கோழைத்தனம். பேச்சு வார்த்தைக்கு இணங்கி, பிரச்னைகளைப் படிப்படியாக, சுமுகமாகத் தீர்த்துக் கொள்ளும் பக்குவமும் இன்றி, நேருக்கு நேர் யுத்தம் நடத்தவும் இயலாது என்கிற நிலையில் தந்திரமாகக் கொலை செய்து சந்திரிகாவை ராஜீவ் வழி அனுப்ப முயன்றது கேவலமான கோழைத்தனம் அன்றி வேறென்ன?

இந்தக் கோழைத்தனத்தோடு போட்டி போடுகிறார்கள் நமது தமிழக அரசியல் தலைவர்கள்.

தமிழர் அமைப்பு என்று ஏற்கப்பட்ட ஒரு குழு, திட்டமிட்ட வெறித்தனமான கொலையில் ஈடுபடும்போது, அதைக் கண்டிக்கும் நெஞ்சுரம் ஒரு தமிழகத் தலைவருக்குக்கூட இல்லை. மாறாக, அக் கோர சம்பவம் நடந்து முடிந்த பிறகும் ராஜீவ் கொலை வழக்கில் தூக்கு தண்டனை விதிக்கப்பட்டோருக்குத் தண்டனைக் குறைப்பு வேண்டும் என்று பொதுக்கூட்டம் போட்டுப் பேசுகிறார் வைகோ! இந்த தேசத் துரோகத்தை தி.மு.க.விடம் வலியுறுத்தப் போவதாகவும் பேசுகிறார்!

இதையெல்லாம் கேட்ட பிறகும் தமிழக முதல்வர் மௌனம் சாதிக்கிறார்! தினமொரு அறிக்கை விடும் ஜெயலலிதா கூட எதுவுமே கூறவில்லை. மூப்பனாரும் அவ்வாறே!

ஜனநாயக முறைப்படி பதவிக்கு வந்துள்ள ஓர் அதிபரை பயங்கரவாதத் தந்திரம்




மூலம் ஒழிக்க முற்பட்ட தமிழ் அமைப்பை, தமிழக அரசியல் தலைவர்கள் அனைவரும் இணைந்து கூட்டறிக்கை வெளியிட்டல்லவா கண்டித்திருக்க வேண்டும்!

அவ்வாறு அவர்கள் செய்யத் தவறியது தமிழகத்துக்கே தலைகுனிவு. தமிழர் இனமானத்துக்கு விளைந்த பேரிழுக்கு!

உலகப் பார்வையில் 'தமிழர்' என்பது ஓர் இனம்தான். அது இலங்கைத் தமிழர்களையும் அவர்களுள் வன்முறையாளர்களான புலிகளையும் உள்ளடக்கியதே. எனவே புலிகள் செய்யும் அக்கிரமங்களின் பழி பாவங்களை ஒட்டுமொத்தத் தமிழினமும் சுமந்தாக வேண்டும்.

இதை உணராமல், நமது தலைவர்கள் எப்போதும் போல் இலங்கைப் பிரச்னையை உணர்ச்சி பூர்வமாக மட்டுமே அணுகி 'தமிழர்' ரத்தத்தைச் சூடேற்றி வருவது மகா கேவலம்!

தமிழகத்தில் கூட்டறிக்கை மட்டும் வெளியிடப்பட்டிருக்குமானால் அது இலங்கை அதிபரின் கரங்களைப் பலப்படுத்தியிருக்கும். தேர்தலுக்குப் பின் புலிகளைப் பேச்சுவார்த்தை குறித்து சிந்திக்கும்படிகூட செய்திருக்கும்.

இந்த விபரீத சூழலிலும் சந்திரிகா குமாரதுங்கா தேர்தல்களை ஒத்திப் போடாமல் வெற்றிகரமாக நடத்தி முடித்திருக்கிறார். 75 சதவிகிதம் வாக்குப்பதிவு நடைபெற்று, ஏழு லட்சம் வாக்குகள் வித்தியாசத்தில் வென்றுள்ளார்.

வெற்றிக்குக் காரணம் 'அனுதாப அலை' என்று மட்டுமே சொல்லி விட முடியாது. இலங்கை அதிபரின் மன உறுதிக்கும் துணிவுக்கும் கிடைத்த அங்கீகாரமாகவும் அந்த வெற்றி அமையும். புலிகளின் வன்முறையை வாக்காளர்கள் வெறுத்து நிராகரித்திருப்பதையும் இந்தத் தேர்தலும் அதன் முடிவுகளும் உணர்த்துகின்றன.

சந்திரிகா இந்தக் கொலை முயற்சியிலிருந்து தப்பி விடுவார் என புலிகள் தலைவர்




பிரபாகரன் சற்றும் எதிர்பார்த்திருக்க மாட்டார். சந்திரிகாவைக் குறி வைத்த அதே நேரத்தில், எதிர்க்கட்சித் தலைவர் அனில் விக்ரமசிங்கே நடத்திய தேர்தல் கூட்டத்திலும் மனித வெடிகுண்டு கோரம் நிகழ்ந்துள்ளது. புலிகளின் வெறுப்பைச் சம்பாதித்த ராணுவ அதிகாரி அலகாமா அதில் கொல்லப்பட்டிருக்கிறார்.

தேர்தல் சமயத்தில் முக்கிய தலைவர்களை ஒழித்துக்கட்டி, நாட்டில் ஒரு பதற்ற நிலையை உருவாக்கி, அதைச் சாதகமாக்கிக்கொண்டு அதிகாரத்தைக் கைப்பற்றுவதே பிரபாகரனின் திட்டமாக இருந்திருக்க வேண்டும். அது எவ்வளவு காரிய சாத்யமற்ற திட்டம் என்பதை அறியவிடாமல் அவரது அகந்தையும் சர்வாதிகாரப் போக்கும் திரை போடுகின்றன.

பயங்கரவாதம் வெற்றி பெற்று ஆட்சி அமைக்கக்கூட மக்கள் ஆதரவு தேவை. இலங்கை மக்களின் அச்சத்தைச் சம்பாதித்திருக்கும் பிரபாகரன் அவர்களது நம்பிக்கையை வென்றவரல்ல.

வடகிழக்கு மாகாணத் தமிழர்கள் இலங்கை ஆட்சியாளர்களிடம் அதிருப்தி கொண்டிருக்கலாம்; ஆனால் அந்த அதிருப்தியை பிரபாகரனிடம் கொண்ட அபிமானமாகக் கருத முடியாது.

துடிப்புள்ள இளைஞர்களை மூளைச் சலவை செய்து, மனித வெடிகுண்டுகளாகப் பயன்படுத்தும் மிருகத்தனம் ஒரு நாகரிகமான அரசியல் அமைப்புக்கு வழிகோலவே முடியாது! இதற்கு சரித்திரச் சான்றுகள் நிறைய உள்ளன. இந்த உண்மையைச் சராசரி மக்களும் நன்கு உணர்ந்திருக்கிறார்கள்.

பிரபாகரனுக்கு இவ் விஷயத்தில் மெய்ஞானம் உண்டாகவில்லையானால் ஈழப் பிரச்னை தீரப் போவதில்லை.

மீண்டும் அதிபரான சந்திரிகா குமாரதுங்காவுக்குச் சவால்கள் காத்திருக்கின்றன

அவற்றைப் புதிய பலத்துடன் சந்திக்க அவரை வாழ்த்துவோம்.

# திருச்சி மாநகராட்சி விஸிட்



திருச்சிக்கு வந்து விளையாடிவிட்டுப் போன பெருமழையும் வெள்ளமும் லட்சக்கணக்கான மக்களின் நிலங்களையும் பிற சொத்துக்களையும் மட்டும் கொண்டு போகவில்லை; அவர்களது பொறுமையையும் கொள்ளை கொண்டு போய்விட்டது!

"இந்த வருஷம் மழை அளவு அதிகம். வெள்ள பாதிப்பு அதிகம். அதனால் செய்தி பெரிதாகி விட்டது. ஆனால் வருடம் தவறாமல் மழையும் விளைவாக வெள்ளமும் கணிசமான இழப்புகளும் திருச்சி நகருக்குப் பழகிப் போன விஷயந்தான். எத்தனையோ அதிகாரிகளும் அமைச்சர்களும் எம்.எல்.ஏக்களும் வந்து வந்து பார்த்துப் போய்க் கொண்டேதான் இருக்கிறார்கள். ஆனால் அக்டோபர், நவம்பர், டிசம்பரில் எங்களுக்கு ஏற்படும் வெள்ளப் பீதிக்கு இதுவரை யாருமே நிரந்தரமாக ஒருவழி செய்து தர முன்வரவில்லை. அவ்வப்போது அரசு ஒதுக்கும் நிதி என்ன ஆகிறது, யாருக்குப் போகிறது என்பதும் தெரியவில்லை!" - இதுதான் நமது மூன்று நாள் திருச்சி பயணத்தில் சந்தித்த அத்தனை மக்களும் முன் வைத்த பிரச்னைகளின் சாரம்.



• எடமலைப்பட்டிபுதூர்: கோரையாற்றின் நடுவே கடுகாடு

மழை நின்று, வெயிலடிக்கத் தொடங்கிய நேரத்தில்தான் நாம் திருச்சியில் இருந்தோம். ஆனாலும் பல இடங்களில் வெள்ள நீர் தேங்கி குட்டைகளாகவும் குளங்களாகவும் சில இடங்களில் ஏரிகளாகவும் இன்றும் காட்சியளிக்கிறது.

கிராப்பட்டி - காந்தி நகரின் நிலைமை படு மோசம். நாம் பயணம் செய்த ஆட்டோ திடீர் திடீரென பள்ளங்களில் விழுவதும் மேடேற முடியாமல் மூச்சிரைத்து நின்று விடுவதுமாக பயமுறுத்த, இறங்கி நடக்கலாமென்றால் அதற்குக் குறைந்த பட்சத் தகுதியாக சர்க்கஸ் தெரிந்திருக்க வேண்டும்.

"நீங்களே பாருங்கள் எங்கள் நிலைமையை! லேசாக மழை பெய்தாலே நாலடி உயரத்துக்கு இந்தப் பிராந்தியமே நிரம்பிவிடும். சாலை கிடையாது. சாக்கடை கிடையாது. இந்த லட்சணத்தில் பெரிய மழை வந்தால் நாங்கள் எங்கே போவது?" என்று புலம்பினார்கள் கிராப்பட்டி வாசிகளான முத்துவேல், உதயகுமார், நாகராஜ் ஆகியோர்.

தாழ்வான நிலப் பகுதியான இந்த காந்திநகர், சுற்று வட்டார ஊர்களில் பெய்யும்



• காந்திநகர்: வடியாத வெள்ளம்

மழை நீரெல்லாம் ஓடி வந்து தஞ்சம் புகும் ஒரு 'பெரிய ஏரி' என்றால் மிகையல்ல.

"கே கே நகர், குண்டூர் ஏரி, ஏர்போர்ட் பகுதி நீரெல்லாம் இங்குதான் வருகிறது. இந்த வெள்ளத்தின்போது கனமான காம்பவுண்டு சுவர்களே பல இடிந்து விட்டன" என்கிறார்கள் இப் பகுதி மக்கள்.

"தண்ணி வர்றதோட கூட பாம்புகளும் ஏராளமா வருதுங்க. ராத்திரி, பகல்னு இல்லாம இருவத்தி நாலு மணி நேரமும் வீட்டுக் கதவு, சன்னல்களை மூடியே வைக்க வேண்டியிருக்குது" என்றனர் இந்தப் பகுதிப் பெண்கள்.

"வெள்ளம் வரும்போதெல்லாம் அதிகாரிகள் மெயின்ரோடு வரை மட்டும் வந்து பார்த்துத் திரும்பி விடுகிறார்கள். நாங்களெல்லாம் இருக்கிறோமா இல்லையா என்றே அவர்கள் கவனிப்பதில்லை. விளக்கு கிடையாது. போக்குவரத்து வசதிகள் கிடையாது. ஆனால் வருஷம் தவறாமல் மாநகராட்சி அதிகாரிகள் டாக்ஸ் கேட்க மட்டும் வந்து விடுவார்கள்!" என்று பொறிந்து தள்ளி விட்டார் முத்துவேல்.



• ஆல்பா நகர்வாசிகள்: எங்கே அடிப்படை வசதிகள்?

# "இடைத்தேர்தலைப் புறக்கணிப்போம்!"

திருச்சி, வெள்ளக் காடாக ஆனதில் கோரையாறுக்குப் பெரும்பங்கு உண்டு. இடமலை பட்டிபுதூர், கருமண்டபம் போன்ற பகுதிகள் மிக அதிகம் பாதிக்கப்பட்ட இடங்கள் என்கின்றனர் மக்கள். புதிய குடியிருப்புப் பகுதிகளுள் ஒன்றான ஆல்பா நகருக்குள் நாம் நுழைய முயன்றபோது வீடுகளெல்லாம் தெப்பமாக மிதக்கிற காட்சியைக் காண நேரிட்டது. வெள்ளம் இன்னும் வடியாமல் - வெள்ளநீர் வெளியேற வழியே இல்லாமல் மக்கள் நிரந்தர படகுச் சவாரியை எதிர்பார்த்திருக்கும் அவலம் கண் முன் தெரிந்தது.

"இதெல்லாம் அப்ருவ்ட் லே - அவுட்தான் சார். இருந்தாலும் ரோடு, சாக்கடை கிடையாது. அது பரவாயில்லைன்னாலும் குடிதண்ணீர்கூட வர்றது கிடையாது. லாரில வாரம் ஒரிரு முறை தண்ணீர் வரும். இப்ப அதுவும் சுத்தமா நின்னு போச்சு. வோட்டுப் போட்டு ஜெயிக்க வெச்சவங்களெல்லாம் எங்க போனாங்கன்னே தெரியலை. எங்க ஏரியா க்வுன்சிலரை வெள்ளத்துக்கு முன்னால பார்த்ததோட சரி" என்கிறார்கள் காத்தலிங்கம், அல்தாப் உசேன் என்ற ஆல்பா

— குமுறும் திருச்சி மக்கள்



• எம்.எம்.நகர்வாசிகள்: தேர்தலைப் புறக்கணிப்போம்

நகர்வாசிகள்.

ராமலிங்கநகர், சுப்பிரமணியபுரம், ரஞ்சிதபுரம் - என கண்ணில் பட்ட அத்தனை இடங்களிலும் இதே பிரச்னை.

**மா**நகரம் முழுவதுமே சாலைகள், சாக்கடைகள், வடிகால் வசதியின்மைதான் பிரதானமான பிரச்னை. உருப்படியாக இருந்த ஓரிரு சாலைகளும் மழையில் பல்லைக் காட்டிக்கொண்டிருக்கின்றன. இந்த லட்சணத்தில், அகலக் குறைவான திருச்சியின் அத்தனை பிரதான சாலைகளிலும் (மார்க்கெட், சத்திரம், பாலக்கரை போன்ற இடங்கள், முக்கியமாக) நடைபாதை வியாபாரிகள் பெருகி, சாலையில் ஒரு சைக்கிள்கூடச் செல்ல முடியாத அளவு இட நெருக்கடி உண்டு பண்ணுவதைக் கண்டோம். மலைக்கோட்டை பகுதியில் ஓர் அரசுப் பேருந்து பத்தடி நகர்வதற்குப் பத்து நிமிடங்கள் பிடிக்கின்றன.

"சுவரன்சிங் கமிஷனரா இருந்தப்ப ஆக்கிரமிப்பு அகற்றுவதில் ரொம்ப தீவிரமா இருந்தார் சார். கூடியவரை திருச்சி நகரப் பிரச்னைகளைத் தீர்க்கவே முயன்றார். ஆனா, திறமையான அதிகாரிகளை டிரான்ஸ்பர் பண்ணிடறதுதானே நம்ம அரசோட தலையாய கொள்கை? அவருக்கப்புறம் இந்த ஊருக்காகக் கவலைப்பட ஒரு நாதி கிடையாது!" என்றனர், உய்யக்கொண்டான் வாய்க்காலோரம் வசிக்கும் எம்.எம். நகர் வாசிகள்.

"ஆறுகளும் கால்வாய்களும் மிகுந்த ஒரு நகரை எப்படிப் பராமரிக்கணும்னு இங்க யாருக்குமே தெரியலை சார். சமீபத்திய மழைல வந்த வெள்ளம் இத்தனை தீவிரமா பாதிச்சிருக்கிறதைக் கண்டிப்பா ஓரளவு தவிர்த்திருக்க முடியும்.

"ஆத்தோரம் ஆக்கிரமிப்புகள் ரொம்ப அதிகம். அதனால தண்ணிப்பாதை அடைபட்டு ஊருக்குள்ள வந்துடுது. அப்படியே வர்ற தண்ணி வடிய ஒரு வழி வேணாமா? சாக்கடை சுத்தமா கிடையாது - பாதாள சாக்கடை? மூச்!

"இந்த வருடம் எங்க எம்.எம். நகர் தான் வெள்ளத்துல அதிகம் பாதிக்கப்பட்டது. பாதி வீடுகள்ல காம்பவுண்ட் விழுந்திருச்சி" என்றார் திலகா என்கிற பெண்மணி.

"மணப்பாறைல மழைன்னா நாங்க பயப்பட வேண்டிய கட்டாயம். காரணம் தண்ணி வர்ற ரூட் இதுதான். உய்யக்கொண்டான் கால்வாயைத் தூர் வாரி எத்தனை வருஷமாச்சுன்னு கேளுங்க! வருஷத்துல மூணு முறை அந்த ஆத்துத் தண்ணி உள்ள வந்துடும். ஏற்கெனவே தேங்கியிருக்கிற சாக்கடை நீருடன் வெள்ள நீரும் சேர்ந்து வீட்டுக்குள்ள பூந்துடும். எத்தனை நோய்கள் வருது! எவ்ளோ கஷ்டப்படறோம்! வோட்டுப் போட்டு ஜெயிக்க வெச்சவங்களும் சரி; அதிகாரிகளும் சரி - வெள்ளம் வந்தா சாம்பார் சாதப் பொட்டலம் தராங்களே தவிர தவிர்ப்பு நடவடிக்கை சுத்தமா இல்லை!" என்கின்றனர் பார்த்தசாரதி, சுவாமிநாதன் ஆகியோர்.

**எ**ம்எம். நகர் வாசிகள் தமக்கென்று ஒரு நலச்சங்கம் வைத்திருக்கிறார்கள். திருச்சி நகர் முழுவதும் உள்ள காலனிகள் ஒவ்வொன்றும் இப்படிச் சங்கம் அமைத்துள்ளன.

இச் சங்கத்தினர், சமீபத்திய வெள்ள நிவாரணப் பணிகளின் மோசமான நிலைமையை முன்னிட்டு வரவிருக்கும் இடைத் தேர்தலை ஓட்டு மொத்தமாகப் புறக்கணிக்க ஆலோசித்து வருகிறார்கள்.

"எல்லா சங்கத்தாரும் பேசி வருகிறார்கள். சுமார் 50,000 பேர் இத் திட்டத்துக்கு சம்மதிச்சிருக்காங்க. மொத்த நகரமும் ஒத்துழைச்சாத்தான் இதுக்குப் பலன் கிடைக்கும். வெள்ளத்தின்போது வந்து பார்க்க வந்த தி.மு.க. எம்.எல்.ஏ. மாயவன் எங்களை எத்தனை கேவலமா பேசினார் தெரியுமா? 'வந்து பாருங்க சார் எங்க நிலைமைய'ன்னு ஏரியாவுக்குள்ள வரச்

சொன்னா, வெள்ளம் வரும்னு தெரிஞ்சி, ஏன் வெளியேறாம இருந்தீங்க? பெண் புத்தி பின் புத்தி'ன்னு திட்டிட்டுப் போனார். இவங்களேதான் எலெக்ஷன் வந்தா 'தாய்க்குலம்'னு வோட்டுக்காகக் கையேந்தறாங்க. இன்னொரு எலக்ஷன் வரட்டும், கவனிச்சிக்கிறோம்" என்று குமுறினார்கள் எம்.எம். நகர் மக்கள்.

எம். எம். நகரில் மட்டுமல்லாமல், வெள்ளம் பாதித்த எல்லாப் பகுதிகளிலும் அமைச்சர்களும் எம்.எல்.ஏ.வும் அதிகாரிகளும் ஒரு கடமைக்காக மெயின்ரோடு வரை மட்டுமே வந்து, போய்விட்டது பற்றிப் புகார் கூறினார்கள். இடைத்தேர்தலைப் புறக்கணிப்பது, இனி வீட்டு வரி கட்டாமலிருப்பது என்று மிக மிக அபாயகரமான யோசனைகளைப் பரிசீலித்து வருவதை அறிய முடிந்தது.

வருடம் தவறாமல் மழையும் வெள்ளமும் வருகிறது திருச்சிக்கு. ஏன் எந்த முன்னெச்சரிக்கை நடவடிக்கையும் மாநகராட்சியால் எடுக்கப்படவில்லை?

நதிப் படுகைகளில் வீடுகளாகவும் தோப்புகளாகவும் ஏராளமாக நிகழ்ந்துள்ள ஆக்கிரமிப்புகளில் கட்சிக்காரர்கள் சம்பந்தப்பட்டிருப்பதால்தான் நடவடிக்கை எடுக்கத் தயங்குகிறார்கள் என்றனர் திருச்சி நகர மக்கள்.

கலெக்டர் மூர்த்தி சுறுசுறுப்பானவர், செயலூக்கம் மிக்கவர் என்று சொல்லும் மக்கள், மேயர் புனிதவள்ளி பழனியாண்டி (த.மா.கா) விவரமறியாதவர், தப்பித் தவறி அரசியலுக்கு வந்து மாட்டிக் கொண்டவர். அவருக்கு எதுவுமே செய்யத் தெரியவில்லை என்று அடுக்கடுக்காகப் புகார் படிக்கிறார்கள். துணை மேயராக இருக்கும் அடைக்கல ராஜின் (காங்) சகோதரி எமிலி ரிச்சர்ட்ஸ்தான் அவரை ஆட்டிப் படைக்கிறார் என்று குமுறும் மக்கள், எமிலியும் தங்களுக்கு ஏதும் செய்யவில்லை என்கிறார்கள்.

இதெல்லாம் உண்மையா? என்ன செய்கிறது மாநகராட்சி, திருச்சியில்?

மாநகர மேயரையும் கமிஷனர் முத்து வீரனையும் பிற அதிகாரிகளையும் சந்தித்துப் பேசினோம்.

பலத்த அதிர்ச்சி!

"மக்களின் இந்த அவல நிலைக்கு மக்களேதான் காரணம்" என்று முகத்தில் அறைந்தது அந்த சந்திப்பின் சாரம்!

அந்த விவரம் - அடுத்த வாரம்!

— **கிருஷ்ணன்**

படங்கள்: **வெங்கடேஷ்**

- **சீரழியும் ஸ்ரீரங்கம்**
- **திருச்சி மக்களின் 'ரஜினி பக்தி!'**

**- மேலும் பல ருசிகரமான திருச்சி ஸ்பெஷல் கட்டுரைகளும் அடுத்த வாரம்!**

## பிழைத்தன செவிப்பறைகள்!

வாகனங்கள் எழுப்பும் ஒலியால் மனிதர்களின் கேட்கும் திறன் பாதிக்கப்பட்டு வருகிறது. உலகமே செவிடாகி விடுமுன் காப்பாற்ற வேண்டும் என்று களத்தில் இறங்கியுள்ள விஞ்ஞானிகளுள் பிரெஞ்சுக்காரர்கள் முக்கியமானவர்கள். அவர்கள் செய்துள்ள முயற்சிகள் :

'ரீஃப்ளெக்ட்' என்ற கெட்டியான பிளாஸ்டிக்கைக் கண்டுபிடித்து, ஆகாய விமானங்களில் அதிகமாக ஒலியெழுப்பும் பகுதிகளில் அதை ஒலி உறிஞ்சியாகப் பொருத்திப் பார்த்திருக்கிறார்கள். பிரெஞ்ச் விமானங்களால் இனி செவிப்பறை கிழிவது குறையுமாம்.

ஒலியை ஒலியாலேயே தாக்கி அழிக்கும் ஒரு யுக்தி கையாளப்பட்டிருக்கிறது. இதற்கான பிரத்யேகக் கருவி, சுற்று வட்டாரத்தில் எப்போது ஒலியளவு விபரீதமாக உயர்ந்தாலும் தானியங்கி முறையில் செயல்பட்டு மாற்று ஒலிக்கதிர்களை அனுப்பி நிசப்தத்தை உருவாக்குமாம். ஜெட் என்ஜினில் இதைப் பொருத்தி வெள்ளோட்டம் விட இருக்கிறார்கள்.

நெடுஞ்சாலைகள், ரயில் பாதைகளில் ஒலி உறிஞ்சும் சாதனங்கள் பொருத்தப்படுமாம். பழைய ரப்பர் டயர்கள் இதற்கு உபயோகமாகும் என்கிறார்கள். இனி டயர்களை ரீ-டிரெடிங் செய்வதற்குப் பதில் பிரான்சுக்கு அனுப்பலாமோ!

— குல்லூ

# பவர்ஃபின்

**ஒளிமயமான எதிர்காலம்.**

**நிலையான வருமானம்.**

## தமிழக அரசு நிதி நிறுவனம்

வழங்குகிறது

# 13.14%

| காலம் | ஆண்டு வட்டி வழங்கப்படுமாயின் | |
|---|---|---|
| | மாதமொரு முறை | மூன்று மாதங்களுக்கு ஒரு முறை |
| 12 மாதங்கள் & 1 நாள் | - | 12.12% |
| 25 மாதங்கள் | - | 12.63% |
| 36 மாதங்கள், 48 மாதங்கள் & 60 மாதங்கள் | 13% | 13.14% |

# 18.18%

60 மாதங்களுக்கு

(மாதாந்திர கூட்டுவட்டி

ஆண்டிற்கு 13%)

- இந்நிறுவனம் வங்கிப்பணி சாராத நிதி நிறுவனமாக ரிசர்வ் வங்கியில் பதிவு செய்யப்பட்டுள்ளது. இதன் பதிவு எண் : 07.00389 ஆகும்.
- முழுமையான பாதுகாப்பிற்கு CRISIL வழங்கியுள்ள FA+ மதிப்பீடு.




மேலும் விபரங்களுக்கு :

**தமிழ்நாடு மின்விசை நிதி மற்றும் அடிப்படை வசதி மேம்பாட்டு நிறுவனம் (பவர்ஃபின்)**

பதிவு அலுவலகம் : 84, டிடிகே. சாலை, ஆழ்வார்ப்பேட்டை, சென்னை - 600 018.

DIPR/1656/DISPLAY/99



# புது மிலெனியத்துக்கு யோபோஸேயோ!

**சமீபத்தில் எல்.ஜி. நிறுவனத்தின் அழைப்பின் பேரில் தென் கொரியா சென்று வந்தார் 'வசந்த் அண்ட் கோ' நிறுவனத்தின் தலைவர் வசந்தகுமார்.**

● *1945* வரை கொரியா ஒரே நாடாகத்தான் இருந்தது. அதன் பிறகுதான் வடகொரியா, தென் கொரியா என்று இரு நாடுகளாகப் பிரிந்தது. வட கொரியாவை விட தென் கொரியா பரப்பளவில் சிறியதாக இருந்தாலும், மக்கள் தொகை அதிகம். ஐந்து கோடி மக்கள் வசிக்கும் தென் கொரியாவின் தலைநகர் சியோல். இங்கு மட்டும் ஒரு கோடிக்கும் அதிகமான மக்கள் வாழ்கிறார்கள். உலகில் மற்றெந்த முன்னேறிய நாடுகளின் தலைநகர்களுக்கும் சற்றும் குறைந்ததல்ல சியோல். அண்ணாந்து பார்க்க வைக்கும் நூற்றுக்கணக்கான வானளாவிய கட்டடங்கள். அதே சமயம் பழைமையை நினைவூட்டும் கோட்டை கொத்தளங்களும் நிறையவே உண்டு. கிட்டத் தட்ட *700* ஆண்டு காலம் சோஸன் மன்னர்கள் ஆண்டு வந்த பூமி சியோல். அவர்கள் காலத்தில் கட்டிய ஐந்து நகர வாசல்கள், 15 கி.மீ. நீள மதில் சுவர், நான்கு கோட்டைகள் ஆகியன இன்று டூரிஸ்டுகள் விரும்பிப் பார்ப்பவை.

● சியோலின் கிம்போ இன்டர்நேஷனல் ஏர்போர்ட்டில் எங்களை வரவேற்க எல்.ஜி. கம்பெனி பிரதிநிதிகள் வந்திருந்தார்கள். எல்லோரும் அறிமுகப்படுத்திக் கொண்டோம். ஒரு எல்.ஜி. பிரதிநிதி திடீரென்று முதுகை வளைத்து ரொம்பவும் பவ்யமாக என் காலைத் தொட்டு வணங்க வந்தார். நான் ஷாக்

• அனைவரையும் கவரும் 'அனிமல் லேண்ட்!'

• பழைமையும் காக்கப்படுகிறது...

• சியோல் கோபுரம்

கடித்தது போல் பின்வாங்கினேன். உடனே மற்றொருவர் ஆங்கிலத்தில் 'நீங்கள் புத்தர் பிறந்த நாட்டிலிருந்து வந்திருப்பதால் உங்களுக்கு ஸ்பெஷல் மரியாதை' என்று விளக்கினார். புல்லரித்துப் போனேன். தென் கொரியாவில் புத்தமதம் மட்டுமல்லாமல், கிறித்துவம், கன்பியூஷியஸ் ஸ்தாபித்த மதம் ஆகியவையும் உண்டு.

● தென் கொரியாவின் மிகப் பெரிய அட்ராக்ஷன் 1500 அடி உயரமுள்ள சியோல் டவர். நாம்சன் என்ற அழகிய குன்றின் மீது அமைந்திருக்கும் இந்த கோபுரத்துக்கு தினசரி ஐயாயிரத்துக்கும் மேற்பட்ட சுற்றுலாப் பயணிகள் விஜயம் செய்கிறார்கள். இதன் உச்சிக்குக் கூட போகாமல் நடுவில் உள்ள காட்சியகத்தில் இருந்து பார்த்தாலே சியோல் நகரம் அழகாகக் காட்சியளிக்கிறது. நாம்சன் மலையைச் சுற்றி ஓடுகிறது ஹான் ஆறு. பழமையும் புதுமையும் கலந்த சியோல் நகரத்தை இரவில் பார்த்தோமானால் ஏதோ சொர்க்கலோகத்தில் இருப்பது போன்ற உணர்வு.

● கென்யா, மற்றும் அண்டார்ட்டிகாவில் வாழும் மிருகங்களைப் பிரதிபலிக்கும் மிருக ரோபோக்கள். இசைக் கருவிகளை வைத்துக் கொண்டு இசை விருந்து வழங்குவதை சியோல் டவரில் உள்ள விலங்குகள் உலகம் என்ற காட்சியகத்தில் கண்டு களிக்கலாம். ஏகப்பட்ட சிறுவர்களைக் கவரும் இந்த விலங்குகள் உலகத்தில், விலங்குகளைப் பற்றியும், சுற்றுச் சூழலைப் பாதுகாக்கும் அவசியம் குறித்தும் நிறையவே சொல்கிறார்கள்.

● அதே சியோல் டவரில் மாய உலகம் என்றொரு காட்சியகம் இருக்கிறது. பளீர் வெண்மையில் பொம்மைகள் ஆட்டம் கண் கொள்ளாக் காட்சி. அந்த பொம்மலாட்டத்தைப் பார்த்துக் கொண்டு நகரும் போது 'ஓ' என்று அலறல் சப்தம். விட்டலாச்சாரியாரின் படங்களில் ஆவிகள் கிறீச்சிட்டுக் கொண்டு ஓடுமல்லவா... அது போன்று ஒரே பயங்கர ஓலம். நமக்குச் சில்லிட்டுப் போய் விடுகிறது. வேர்த்து விறுவிறுக்க அருகில் உள்ளவரின் கைகளைப் பிடித்துக் கொள்கிறோம். சாத்தான்களின் ராஜாவும், கங்ஷி என்ற சினப் பிசாசும் போடும் ஆட்டங்கள் தான் அவை. அசத்தலான காட்சி அமைப்பு! அந்தப் பகுதியை விட்டு வெளிவந்து நீண்ட

நேரம் ஆகியும் படபடப்பு அடங்கவில்லை. சியோல் டவரில் பழங்கால கலை, கை வினைப் பொருள்கள் கண்காட்சி, சுழலும் (உண்மையாகவே!) உணவகம் என்று பல பொழுதுபோக்கு அம்சங்கள் உண்டு. இந்த டவருக்கு மட்டும் டூரிஸ்டுகள் இரண்டு நாட்களை ஒதுக்க வேண்டும்.

● தலைநகர் சியோலிலிருந்து ஒரு மணி நேர விமானப் பயணத்தில் இருக்கிறது செஜு தீவு. கொரியத் தம்பதிகள் தேன் நிலவுக்காக நாடிப் போகும் தீவு. வருடம் முழுவதும் நமது ஏற்காடு கிளைமேட். ஜப்பான் தலைநகர் டோக்கியோவில் இருந்து கூட நேரடி விமான சர்வீஸ் உண்டு. இந்தத் தீவையும் மாயத் தீவு என்று சொல்லலாம். ஒரு நல்ல மேடான இடத்தில் நின்று கொண்டிருந்தோம். பள்ளத்திலிருந்து ஆற்றுத் தண்ணீர் எங்களை நோக்கி வந்தது. மின்சார மோட்டார் மூலம் செலுத்தும் சமாசாரம் கிடையாது. அந்த மேட்டிலிருந்து இறங்கி கடலில் சிறிது தூரம் சென்று மேட்டைப் பார்த்தால், தண்ணீர் பள்ளத்தை நோக்கிப் பாய்வது போலத் தோற்றம். என்ன விந்தை!

● கொரியாவின் பொருளாதாரத்தை நிர்ணயிப்பதில் மூன்று நிறுவனங்களுக்குப் பெரும் பங்கு உண்டு. எல்.ஜி., தேவு, மற்றும் சாம்சங் நிறுவனங்கள்தான் அவை. எல்.ஜி. நிறுவனத்தில் மட்டும் ஐம்பதாயிரம் ஊழியர்கள் வேலை செய்கிறார்கள். பல இடங்களில் தொழிற்சாலைகள் இருக்கின்றன. ஒவ்வொன்றும் குட்டி நகரம். எதிர்காலத்தில் எலெக்ட்ரானிக் சமாசாரங்கள் மனிதனுடைய வாழ்க்கையில் எவ்விதம் பங்குபெற இருக்கின்றன என்பதை விளக்கும் மின்னணு காட்சியகம் ஒன்றை எல்.ஜி. தொழிற்சாலையில் பார்த்தேன். அற்புதம். தினசரி நூற்றுக்கணக்கில் பள்ளி மாணவர்கள் வருகிறார்கள். "துவக்க காலத்தில் நாங்கள் மற்ற நாடுகளின் வளர்ச்சியைப் பார்த்துச் செயல்பட வேண்டியிருந்தது. இப்போது நிலைமையே வேறு. வரும் மிலெனியத்தில் மின்னணுத் துறையில் உலகை ஆளப் போவது நாங்கள்தான்" என்று சொன்னார் எல்.ஜி. நிறுவனத்தின் தலைவரான யங்-சங்-ஜங்.

● அது சரி தலைப்புக்கு வருவோம்! 'யோ... போஸேயோ' என்றால் கொரிய மொழியில் 'ஹலோ' என்று பொருள்.

சந்திப்பு : **ஸ்ரீநிவாசன்**

## ஐயப்பன் கோயிலில் அம்மா சந்நிதி!

"இக்கோயிலின் விசேஷம் ஐயப்ப சுவாமி மட்டுமல்ல; பின்புறம் சென்று 'அம்மா' சந்நிதியை தரிசித்துவிட்டு வாருங்கள்; புரியும்" என்றார் ஒரு பக்தர்.

அதென்ன அம்மா சந்நிதி?

ஒரு குத்து விளக்கு ஆடாமல் எரிகிறது. தாயின் பெருமை குறித்த் பொன் மொழிகள் கற்களில் பொறிக்கப்பட்டிருக்க, அருகிலிருக்கும் ஒரு ஸ்விட்சை அழுத்தினால் 'அம்மா என்றழைக்காத உயிரில்லையே' என்ற மன்னனில் ரஜினி பாடும்



பாடல், மழையாகப் பொழிகிறது.

"சினிமாப் பாடல்தான். அதனாலென்ன? எழுதியவரும் இசையமைத்தவரும் பாடியவரும் எத்தனை அனுபவித்து அனுபவித்து இதைப் படைத்திருக்கிறார்கள். இந்த இடத்தில் கண்ணை மூடிக் கொண்டு இந்தப் பாடலை தியானம் செய்து பாருங்கள். உங்களுக்கு ரஜினி தெரியமாட்டார்; உங்கள் தாய்தான் தெரிவார்" என்றார் இன்னொரு பக்தர்.

இந்தக் கோயில் எங்கே இருக்கிறது என்கிறீர்களா? நாம் ஏற்கெனவே கல்கியில் எழுதிய, திருச்சி கண்டோன்மெண்ட் அருகிலுள்ள ஐயப்பன் கோயில் தான்.

— ஆழ்வார்க்கடியான்

படம்: வெங்கடேஷ்

# ஐந்து விரைச் சக்கரம்

சுப்ரியா சாந்திலால்

ஆந்தை மார்க் பட்டாசுத் தொழிற்சாலை அதிபர் ஜெயராஜ் தொலைபேசி எண்களை வேகமாகத் தட்டினார்.

"ஹலோ, சண்முகம் சாரா? நான் ஜெயராஜ் பேசறேன். ஆமத்தூர்கிட்டே நம்ம பஸ் ஆக்ஸிடெண்ட் ஆயிடுச்சாம். இப்பத்தான் டிரைவர் பேசினான்."

தொழிலாளர் நல அதிகாரி சண்முகத்தின் முகம் வெளிறியது. விரல்கள் லேசாக நடுங்கின. நெற்றியிலிருந்து இறங்கிய வியர்வை மூக்குக் கண்ணாடியில் வழிந்தது. அதைக் கழற்றியபடி, "சைல்ட் லேபரர்ஸ் யாராவது?" என்றார்.

"ஆமாம். மூணு பேர் அந்த இடத்திலேயே இறந்திட்டாங்களாம். பதினாலு பேரை சிவகாசி ஜி.ஹெச்.சிலே அட்மிட் பண்ணிட்டாங்களாம். ஒரு பையனை மதுரைக்குக் கொண்டு போகப் போறாங்களாம். எஃப்.ஐ.ஆர். போட்டுட்டாங்களாம்."

ஒருசில விநாடிகள் யோசித்தபின், "சரி, நீங்க உங்க லாயரைப் பாருங்க. நான் லேபர் இன்ஸ்பெக்டரை அனுப்பி, மைனர்களை மேஜராக்கப் பார்க்கிறேன்" என்றார் சண்முகம்.

அன்றைய மாலை நாளிதழின் முதல் பக்கத்தில், 'சிவகாசி அருகே பேருந்து விபத்து! மூன்று பேர் பலி! பிரபல பட்டாசுத் தொழிலதிபர் தலைமறைவு!' என்று வெளியாகியிருந்தது.

ஓர் அரசியல் பிரமுகரின் விருந்தினர் மாளிகையில் பாதுகாப்பாகத் தங்கியிருந்த ஜெயராஜ் தொலைக்காட்சியில் இந்தியா - நியூஸிலாந்து கிரிக்கெட் போட்டியைப் பார்த்துக் கொண்டிருந்தார். மேஜையின் மீது வெளிநாட்டு மதுவும், சில்லி சிக்கனும் இருந்தன. அவரது சட்டைப் பையிலிருந்த செல்லிடப்பேசி மெதுவாகச் சிணுங்கியது.

பட்டனைத் தட்டிவிட்டு ஹலோ சொல்லாமல் காதில் வைத்துக் கொண்டார்.

"சார்தானே? நான் எல்.ஓ. பேசறேன்!"

"என்ன - ஆச்சி?" என்று கேட்டார் ஜெயராஜ்.

"செத்தவங்க மூணு பேரோட வயசையும் பத்தொன்பது ஆக்கிட்டேன். செலவு கொஞ்சம் அதிகமாயிடுச்சி."

"எவ்வளவு செலவானாலும் பரவாயில்லே. ம்... மேலே சொல்லுங்க!"

"மதுரையிலே இருக்கிற பையன் வயசுதான் இடிக்குது."

"அவன் யாரு, என்னங்கிற விவரத்தை மாரியப்பன்கிட்டே சொல்லுங்க. வேற என்ன?"

"செலவுக்குக் கொஞ்சம் பணம்..." என்று இழுத்தார் சண்முகம்.

"கேஷியர்கிட்டே சொல்றேன், நாளைக்கு வந்து சேரும்."

பட்டனைத் தட்டி லைனை கட் செய்தார்.

**ம**துரை அரசு ராஜாஜி மருத்துவமனை நியூரோசர்ஜரி பிரிவில் உணர்வற்ற நிலையில் இருந்தான் முத்துப்பாண்டி. தலைமுடி முழுவதும் மழிக்கப்பட்டிருந்தது. மூக்கு வழியாகப் பிராணவாயுக் குழாய், வாய் வழியாக இரைப்பைக்குள் செல்லும் உணவுக் குழாய், கையில் குளுக்கோஸ் குழாய் என மூன்று குழாய்கள் செருகப்பட்டிருந்தன.

வார்டுக்கு வெளியே வராந்தாவில் நின்றுகொண்டிருந்த முத்துப்பாண்டியின் தாயார் ராக்கம்மாள், அந்த வழியாகச் செல்லும் எல்லா டாக்டர்களையும், நர்ஸுகளையும் பார்த்து, கைகூப்பிக் கும்பிட்டுக் கொண்டிருந்தாள்.

"ராக்கம்மா!" - தூரத்திலிருந்து வந்த குரலைக் கேட்டுத் திரும்பியவள், "ஐயா, நீங்களா?" என்றாள் முகமலர்ச்சியுடன்.

"இந்த வார்டைக் கண்டுபிடிச்சி வர்றதுக்குள்ளே பாதி உயிர் போயிடுச்சு. முத்துப்பாண்டி எப்படியிருக்கான்?" என்றான் மாரியப்பன்.

"இன்னும் கண்ணு முழிக்கலேய்யா. நீங்கதான் மொதலாளி ஐயாகிட்டே சொல்லி எம் பையன் உசிரைக் காப்பாத்தணும்!" என்று அழுதுகொண்டே கும்பிட்டாள்.

"அழாதே! உன் பையனைக் காப்பாத்தணும்னா நீ ஒரு காரியம் செய்யணும். முத்துப்பாண்டிக்கு வயசு என்னன்னு சொன்னே?"

"பன்னெண்டுன்னு தான்."

"நாசமாப் போச்சு. பதினெட்



டுக்கு மேலே சொல்லியிருக்கணும். உன் ரேஷன் கார்டு எங்கேயிருக்கு?''

"வீட்லேதான் இருக்கு, ஏன்யா?"

"அது எனக்கு வேணும். அதிலே உன் பிள்ளை வயசு எழுதியிருக்கும்!"

"நான் வீட்டுக்குப் போனப்புறம் எடுத்துத் தாரேன்யா!"

"சரி, இனிமே யாராவது முத்துப்பாண்டியின் வயசு கேட்டா, இருபதுன்னு சொல்லு. ரேஷன் கார்டு கேட்டா, தொலைஞ்சு போயிடுச்சின்னு சொல்லணும். புரிஞ்சுதா? உன்னை மாதிரி பொம்பளைகளுக்கு எத்தனை முறை சொல்லிக் கொடுத்தாலும் புரியாது!" என்று சலித்துக் கொண்டு சட்டைப் பையிலிருந்து பணத்தை எடுத்து, ஆயிரம் ரூபாயை எண்ணிக் கொடுத்து, "செலவுக்கு வச்சுக்க, மொதலாளி குடுக்கச் சொன்னாரு!" என்றான்.

"மொதலாளிக்குத் தங்கமான மனசு. அவரு புள்ளை குட்டிங்க நல்லாயிருக்கணும்!" என்று மனசார வாழ்த்தினாள்.

## மறக்க முடியுமா!

**காந்தி கண்டெடுத்த பத்தாம் கிரகம்... சத்தியாகிரகம்!**



"உனக்கு இவன் ஒரே மகன்தானா?"

"சின்னவன் செல்வம் அஞ்சாங் கிளாஸ் படிக்கிறான்யா. நான் இங்கே இருக்கிறதாலே, என் தங்கச்சி வீட்லே இருந்துக்கிட்டு பள்ளிக்கூடம் போயிட்டு வர்றான். எதுக்குக் கேட்கறீங்க?"

"சும்மாத்தான்! நான் அடிக்கடி வர முடியாது. தீபாவளி வரும் நேரம். ஆர்டர் எக்கச்சக்கமா இருக்கு. இந்நேரம் பார்த்து இப்படி ஆயிடுச்சி. சரி, நீ தைரியமா இரு. எதுக்கும் கவலைப்படாதே!"

"அவரு பட்டாசு வெடிச்சுச் செத்த பிறபாடு, முத்துப்பாண்டிக்கு வேலை போட்டுக் குடுத்து, என் வீட்டுக்குப் படி அளக்கிற நம்ம மொதலாளி இருக்கிறப்போ, எனக்கு என்னய்யா கவலை?"

"சரி, நேரமாச்சு. நான் பெரிய டாக்டரைப் பார்த்துப் பேச வேண்டியிருக்கு. வர்றேன் ராக்கம்மா!" என்று சொல்லிவிட்டுச் சென்றான்.

ஜெயராஜ் எதிரில் பத்தடி தள்ளி, கைகளைக் கட்டிக் கொண்டு, தலைகுனிந்தபடி மாரியப்பன், "நான் எவ்வளவோ நயந்து பேசியும் அந்தப் பெரிய டாக்டர் ஒத்துக்கவே இல்லீங்கய்யா! அப்புறம் டீனைப் பார்த்தேன். அவங்க ஒரு பொம்பளை. என்னை 'கெட்-அவுட்'னு திட்டி விரட்டிட்டா. 'மினிஸ்டர் வரைக்கும் போயிடுவாங்களோ'ன்னு பயம்மா இருக்குய்யா!" என்றான்.

"சரி சரி, நீ போ. நான் பெயில்லே வந்து பார்த்துக்கிறேன்!" என்றார் ஜெயராஜ்

ஆந்தை மார்க் அலுவலகத்தில் தமது குளிர்சாதன அறையில் அமர்ந்து சிகரெட் புகைத்துக் கொண்டிருந்தார் ஜெயராஜ்.

உள்ளிடப்பேசி (இன்டர்காம்) மணி அழைத்தது. எடுத்தார். "சார்! உங்களைப் பார்க்க புது லேபர் ஆபீசர் வந்திருக்கார்!"

"ம்... அனுப்பு!"

அடுத்த நிமிடம், "ஐ'ஆம் ராமலிங்கம், டிஸ்ட்ரிக்ட் லேபர் வெல்ஃபேர் ஆபீஸர்!" என்று சொல்லிக் கொண்டே உள்ளே வந்தார். 'கறுப்புப் பூனை'யைப் போல வாட்டசாட்டமாக இருந்தார்.

"உட்காருங்க! என்ன சாப்பிடறீங்க? கூல் ஆர் ஹாட்?"

ஜெயராஜின் மேஜைக்கு எதிரிலிருந்த சோபாவில் அமர்ந்த ராமலிங்கம், "தாங்க்ஸ், ஒண்ணும் வேணாம். மிஸ்டர் சண்முகம் சஸ்பெண்ட் ஆன விஷயம் உங்களுக்குத் தெரியும்னு நினைக்கிறேன்!" என்றார்.

"ஆமா, தெரியும்!"

"குட்! மைனர்களை வேலைக்கு வச்சுக்கக் கூடாதுன்னு சட்டம் இருக்கு. இதுவும் உங்களுக்குத் தெரியும்னு நினைக்கிறேன்."

"தெரியும்."

"உங்க பஸ் ஆக்ஸிடெண்ட் ஆனதிலே மூணு சின்னப் பையங்க இறந்ததும் உங்களுக்குத் தெரியும்னு நினைக்கிறேன்!"

ஜெயராஜின் முகம் இறுகியது. நாக்கு வறண்டது.

"இறந்த மூணு பேரும் அடல்ட்ஸ், சின்னப் பையங்க இல்லே."

"அப்படின்னு நீங்க சண்முகம் சார் மூலமா செட்-அப் செஞ்சது எனக்குத் தெரியும்னு நீங்க தெரிஞ்சுக்குங்க!" என்று முகத்தில் ஏளனப் புன்னகையுடன் சொன்னார் ராமலிங்கம்.

"நோ, இறந்த மூணு பேரும் மேஜர்தான், எங்கிட்டே அவங்க வயசு சர்ட்டிபிகேட் இருக்கு!"

''அது ஒரிஜினலா, போலியான்னு கோர்ட் தீர்மானிக்கும். அதே பஸ் ஆக்ஸி டெண்ட்ல மாட்டிக்கிட்டு, 'ஹெட் இன்ஜுரி' ஆன முத்துப்பாண்டிக்கு வயசு பன்னெண்டுதான், இல்லியா? உங்க சட்டப் படி பன்னெண்டு வயசுப் பையங்க மேஜர் ஆயிடறாங்க, அப்படித்தானே?''

சில விநாடிகள் மௌனமாக யோசனை செய்த ஜெயராஜ், பின் தீர்க்கமான முடி வுக்கு வந்தவராக, "இப்ப நீங்க என்ன செய் யப் போறீங்க? இந்த கேஸ் கோர்ட்டுல இருக்கு. நான் உங்களை அங்கே பார்த்துக் கிறேன்'' என்றார். மீண்டும் தொடர்ந்து ஆவேசமாக, ''நாங்க குழந்தைத் தொழி லாளர்களை வேலைக்கு வச்சுக்கக் கூடா துன்னு சட்டம் பேசுறீங்களே, தமிழ்நாட் டிலே இருக்கிற அத்தனை ஹோட்டல் லேயும் டேபிள் கிளீன் பண்றவங்க எல் லோரும் யாரு? சின்னப் பசங்கதான். உங்க பாஷையிலே சைல்ட் லேபரர்ஸ். சினிமாத் தியேட்டரிலே முறுக்கு, சோடா விக்கிற வங்க எல்லோரும் யாரு? சைல்ட் லேபரர்ஸ் தான். ஒருமுறையாவது நீங்க ஹோட்டலுக் கும், தியேட்டருக்கும் போயி நடவடிக்கை எடுத்திருக்கிறீங்களா? கட்டட வேலைக்குச் செங்கல் தூக்கறதும், சாந்துச்சட்டி தூக்கற தும் யாரு? இதே சைல்ட் லேபரர்ஸ்தான். அதுக்கு என்ன ஆக்ஷன் எடுத்திருக்கீங்க? சினிமா நடிகர், நடிகைகிட்டே டச்-அப் பாய்ஸ், டச்-அப் கேர்ள்ஸ் எல்லோருமே சைல்ட் லேபரர்ஸ்தான், அந்தச் சினிமாக் காரங்ககிட்டே போயி நடவடிக்கை எடுத் திருக்கீங்களா? திருப்பித் திருப்பி தீப்பெட்டி, பட்டாசு இண்டஸ்ட்ரீஸ் மேலேயே குறி வைக்கிறீங்க! நாங்க 'வேணும்'ன்னா சின் னப் பசங்களை வேலைக்கு வச்சுக்கிறோம்? 'நல்ல சம்பளம் கிடைக்குது'ன்னு அவங்க அப்பா, அம்மாவாப் பார்த்து இங்கே வேலைக்கு அனுப்பி வைக்கிறாங்க!'' என்று ஓங்கிப் பேசினார்.

ஜெயராஜின் பேச்சையெல்லாம் பொறு மையுடன் கேட்டபின் ராமலிங்கம் அமைதி யாக, "நீங்க ரொம்ப நல்லாப் பேசறீங்க. இப்ப பேசினதையெல்லாம் அப்படியே கோர்ட்லே பேசுங்க. முடிஞ்சா எம்.எல்.ஏ. ஆகி சட்டசபையிலேயும் பேசுங்க!'' என் றார்.

"கோர்ட்லே கண்டிப்பா பேசத்தான் போறேன். கழுத்தைச் சீவிடுவாங்களா? 'சைல்ட் லேபரர் ஆக்ட்'படி பதினைஞ்சா யிரம் ரூபா அபராதம் போடுவாங்க, அவ் வளவுதானே? பஸ் ஆக்ஸிடெண்ட் ஆன துக்கு டிரைவருக்கு ஐநூறு ரூபா ஃபைன் கட்டச் சொல்வாங்க. கட்டிட்டுப் போறேன். இன்னும் ரெண்டு கோடி ரூபாய்க்கு ஆர்டர் இருக்கு. ஒரு டஜன் பட் டாசுக்கு ஒரு ரூபாவை அதிகமாக்கி ரேட்டை ஃபிக்ஸ் செஞ்சிட்டுப் போறேன்.''

"ரைட்! அப்படியே செய்யுங்க. உங்களை கோர்ட்லே மறுபடியும் சந்திக்கிறேன்" என்று சொல்லிவிட்டு ராமலிங்கம் வெளி யேறினார்.

**ரா**மலிங்கம் மதுரை அரசு ராஜாஜி மருத்துவமனை நியூரோசர்ஜரி வார்டில் நுழையும்போது, ராக்கம்மாள் சாத்துக்குடிப் பழத்தை உரித்து ஒவ்வொரு சுளையாக எடுத்து முத்துப்பாண்டியின் கையில் கொடுக்க, அவன் கட்டிலில் சம்மணம் போட்டு உட்கார்ந்தபடி மென்று, ஒரு தின சரித் தாளில் துப்பிக் கொண்டிருந்தான்.

### மறக்க முடியுமா!

*இனி-*
*தர்பார்களை விசாரிக்கும்*
*தனி நீதிமன்றங்கள்!*
*ஆடுதிருடினால் சிறைச்சாலை*
*நாடு திருடினால் நாற்காலி*
*கண்டு கொள்ளாத குற்றங்கள்!*
*கூப்பிடும் போதெல்லாம்*
*வாய்தாக்கள்!*
*நீதி மன்றத்துக்கே நிபந்தனையா?*
*தனி நீதி மன்றம் தயார்!...*
*எனினும்*
*தண்டிக்கப்படுமா தர்பார்?*

பத்து நாட்களில் ராக்கம்மாளுக்கு ஆஸ் பத்திரி 'வாசம்' நன்றாகப் பழகியிருந்தது. இப்போது இந்த வார்டு டாக்டர்களைத் தவிர, பிற டாக்டர்களைப் பார்த்துக் கும் பிடுவதில்லை. நர்ஸுகளை 'அக்கா தங்கச்சி' என்ற உறவுமுறை வைத்துப் பேசும் அளவுக் குப் பழகி விட்டாள்.

ராமலிங்கம் அந்த வார்டில் படுத்திருந்த நோயாளிகளை நோட்டமிட்டார். பெரும் பாலோரின் தலை மொட்டை அடிக்கப்பட் டிருந்தது.

முத்துப்பாண்டியைப் பார்த்து, "ஆமத் தூர் முத்துப்பாண்டி நீதானே?'' என்று கேட்டார்.



## வாயைக் கட்டி பெற்ற வெற்றி!

**மீ**னாவுக்கு ஒரு வருத்தம். ''பின்ன என்ன சார்? நான் விரும்பிச் சாப்பிடுகிற நான் வெஜ் அயிட்டங்களையெல்லாம் தள்ளி வெச்சுட்டு, வெஜ் மட்டுமே சாப்பிட்டேன். அதுவும் அளவா சாப்பிட்டேன், கூடவே கடுமையா உடற்பயிற்சியும் செஞ்சேன். அதனால்தான் ஸ்லிம்மானேன். இதைப் பார்த்துட்டுச் சிலபேர் நான் ஆபரேஷன் செஞ்சு ஸ்லிம்மானேன்னு ஒரு வதந்தியைப் பரப்பி விட்டிருக்காங்க. என் மனசு எப்படிக் கஷ்டப்படும்னு யாராவது நினைச்சுப் பார்த்தாங்களா?'' என்று அப்பாவியாகக் கேட்டார் மீனா.

– ஆர்.எஸ்.ஏ.

''ஆமா சார்!'' என்றான் கவலையைத் துப்பியபடி.

''நீங்க யாருங்கய்யா?'' என்று பயந்து கொண்டே கேட்டாள் ராக்கம்மா.

''நான் தொழிலாளர் நல அதிகாரி. உங்க பையனைப் பத்தி பெரிய டாக்டர்கிட்டே விசாரிச்சேன். 'நல்லா குணமாயிட்டான்'னு சொன்னாரு.''

''ஆமாங்கய்யா. இன்னும் ரெண்டு மூணு நாள்லே வீட்டுக்குப் போயிடலாம்ன்னு சொல்லியிருக்காங்க. என் பையனைப் பத்தி நீங்க ஏன் விசாரிக்கிறீங்க?''

''வேற ஒண்ணுமில்லேம்மா. உங்க பையனை இனிமே வேலைக்கு அனுப்பக் கூடாது, அவனைப் படிக்க வைக்கணும்ன்னு சொல்றதுக்காக வந்திருக்கேன்.''

ராக்கம்மாவின் முகத்தில் சோகம் படர்ந்தது.

''என் வீட்டுக்காரர் இருந்தவரைக்கும் இவன் படிச்சிட்டுத்தான் இருந்தான்யா. அவரு போன பிறகு என் ஒருத்தியோட சம்பளம் ஒருவேளைக் கஞ்சிக்குத்தான் சரியா இருந்திச்சு. அதனாலே நான் எங்க மொதலாளிகிட்டே 'இவனை வேலையிலே சேர்த்துக்கச் சொல்லி ரொம்பக் கெஞ்சிக் கேட்டுக்கிட்டேன். அவரும் பெரிய மனசு பண்ணி, என் மேலே இரக்கப்பட்டு இவனை வேலையிலே சேர்த்துக்கிட்டாரு!''

ராக்கம்மாவின் வறுமையை உணர்ந்து, உண்மையிலேயே வருத்தப்பட்ட ராமலிங்கம், ''இதுவரைக்கும் இவன் வேலை செஞ்சது போதும்மா. இனிமே இவனைப் பள்ளிக் கூடத்திலே சேர்த்துப் படிக்க வைக்கிறது என் பொறுப்பு. படிப்புக்கு ஆகிற எல்லாச் செலவையும் கவர்மெண்ட்டே செய்யும். உங்களுக்கு விதவை பென்ஷன் கிடைக்கவும் நான் ஏற்பாடு செய்யறேன். என்னம்மா சொல்றீங்க?'' என்றார்.

ராமலிங்கத்தின் கனிவான பேச்சு அவர் மீது மிகுந்த மரியாதையை உண்டாக்கியது.

''நான் சொல்றதுக்கு என்னய்யா இருக்கு? இந்த ஏழைகிட்டே இரக்கம் காட்டற நீங்க நல்லா இருக்கணும்யா.''

''முத்துப்பாண்டிக்கு வயசு என்னம்மா?''

ராக்கம்மாள் திடீரென்று உஷாரானாள். மாரியப்பன் அன்று எச்சரித்துச் சொன்னது நினைவுக்கு வந்தது.

''பத்தோம்பது முடிஞ்சி இப்போ இருவது நடக்குது!''

ஜெயராஜின் பணபலம் ராக்கம்மாவைப் பொய் பேச வைக்கிறது என்பதைப் புரிந்து கொண்ட ராமலிங்கம், ''அப்படியா? சரிம்மா. உங்களுக்கும் முத்துப்பாண்டிக்கும்

வேண்டிய ஏற்பாட்டைச் செய்யறேன். நீங்க ஊருக்குப் போன பிறகு ஒருநாள் உங்களைச் சந்திக்கிறேன்" என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டார்.

ஸ்ரீவில்லிபுத்தூர் மாஜிஸ்திரேட் நீதிமன்றத்தில் வழங்கப்பட்ட தீர்ப்பை எதிர்த்து, ஜெயராஜ் உயர்நீதிமன்றத்துக்கு அப்பீல் செய்தார். இந்த வழக்கு தொடர்பாக ஸ்ரீவில்லிபுத்தூரில் அரசு வழக்கறிஞரைச் சந்தித்து விட்டு சிவகாசி வழியாக விருதுநகர் செல்லும் வழியில் ஆமத்தூரைக் கடக்கும் போது ராமலிங்கத்திற்கு, 'முத்துப் பாண்டியைப் பார்க்க வேண்டும்' என்று தோன்றியது.

ஒரு பெட்டிக் கடை முன்பாக ஹீரோ ஹோண்டாவை நிறுத்தி அதில் உட்கார்ந்தபடியே, "ஆந்தை மார்க் பட்டாசுக் கம்பெனி பஸ் விபத்திலே மண்டையிலே அடிபட்டுப் பிழைச்ச முத்துப்பாண்டி வீடு எங்கேயிருக்கு?" என்று கேட்டார்.

"இந்தச் சந்திலே நேராப் போனா ஒரு வேப்பமரம் இருக்கும், அதையொட்டி வடக்கே நாலாவது வீடுதான்."

"ரொம்ப தாங்க்ஸ்."

ராமலிங்கத்தின் மோட்டார் வண்டிச் சப்தம் கேட்டு வாசலுக்கு வந்த ராக்கம்மா ஆச்சரியத்துடன், "ஐயா நீங்களா? உள்ளே வாங்கய்யா!" என்று கும்பிட்டாள்.

பத்தடிக்கு எட்டடி குடிசையின் தரை மாட்டுச் சாணத்தால் மெழுகப்பட்டிருந்தது. ராக்கம்மாவும் அவள் கணவனும் திருமணமான புதிதில் வெல்கம் ஸ்டுடியோவில் எடுத்துக் கொண்ட கறுப்பு வெள்ளைப் புகைப்படம் சமையல் புகை பட்டுப் பட்டு கறுத்துப் போயிருந்தது.

துருப்பிடித்து இற்றுப் போயிருந்த இரும்பு நாற்காலியை விரித்துப் போட்டு, ஓர் அழுக்குத் துண்டை எடுத்து, தூசியைத் துடைத்து, "உக்காருங்கய்யா!" என்றாள்.

"ஒரு வேலையா இந்த வழியா போய்க்கிட்டிருந்தேன். இன்னைக்கு ஞாயித்துக்

## முதல்வருக்கு சுவலட்சுமி எழுதப் போகும் கடிதம்!

அடுத்த ஆண்டு முதல் நடிகர் திலகம் சிவாஜி கணேசன் பெயரில் விருது வழங்கப்படும் என்று முதலமைச்சர் அறிவித்ததில் சுவலட்சுமிக்கு ஏக



சந்தோஷம்தான். ஆனாலும் சின்னதாக ஒரு வருத்தமும் இருக்கிறது. "சாவித்திரி, பத்மினி ஆகிய மாபெரும் கலைஞிகள் பெயரிலும் விருது கொடுத்தால் இன்னும் சந்தோஷப்படுவேன். இது குறித்து முதல்வருக்கு நானே ஒரு கடிதம் எழுதலாமென்றும் இருக்கிறேன்!" என்றார்.

– ஆர்.எஸ்.ஏ.




## இன்டர்நெட் ஷாப்பிங்!

குறிப்பிட்ட வலைப்பின்னல் மூலம் இந்த நபர்களில் ஒருவரைத் தொடர்பு கொண்டு உங்களுக்கு என்னென்ன பொருள்கள் தேவை என்பதைச் சொல்லிவிட்டுச் சற்றே காத்திருக்க வேண்டும். உடனே இந்த ஊழியர் நீங்கள் வாங்க விரும்பும் பொருள்கள் அடங்கிய பகுதிக்குச் சர்ரென்று ஸ்கேட் செய்து கொண்டே பாய்ந்து செல்வார். அந்தப் பொருள்களைப் புகைப்படம் எடுத்து 'வலை'யில் அதைச் செலுத்துவார். அந்தப் பொருள் உங்கள் வீட்டு கம்ப்யூட்டர் திரையில் தெரியும். "ஆ இதேதான்" என்று ஓ.கே செய்து பொருளை வீட்டுக்கு அனுப்பச் சொல்லலாம். அல்லது "இதைவிடக் கொஞ்சம் பெரிய சைஸில் வேண்டும்'' என்றோ, "இதில்லே, அந்த ப்ராண்ட்" என்றோ மாற்றிச் சொல்லலாம்.

பிரான்ஸில் உள்ள ஒரு பல்பொருள் அங்காடியின், ஷாப்பிங் இது!

– ஜி.எஸ்.எஸ்.

கிழமையாச்சே, முத்துப்பாண்டி வீட்டிலே தான் இருப்பான்னு நினைச்சு வந்தேன்'' என்று ராமலிங்கம் சொல்லி முடிப்பதற்குள், வெளியிலிருந்து ஓடி வந்த முத்துப்பாண்டி, "சார், வணக்கம்!" என்றான்.

''ஸ்கூலுக்கு ஒழுங்கா தினமும் போறியா?" என்று அன்புடன் விசாரித்தார்.

"போறேன் சார்!"

"நல்லா படிக்கிறியா?"

"படிக்கிறேன் சார்"

''குட்! யூனிஃபார்ம் டிரெஸ் ரெண்டு ஜோடி வாங்கிட்டியா?''

''ஆமா சார்! ஹெட் மாஸ்டர் குடுத்தாரு. நீங்க சொல்லியிருந்தீங்களாம்'' என்று முத்துப்பாண்டி சொல்லும்போதே ராக்கம்மா, "ஓடிப் போய் கலர் வாங்கிட்டு வா" என்றாள்.

''பரவாயில்லேம்மா. வர்ற வழியிலேதான் சாப்பிட்டேன். உங்களுக்குப் பென்ஷன் பணம் கிடைச்சிடிச்சா?'' என்று கேட்டார்.

"உங்க தயவுலே கிடைச்சிடிச்சிங்கய்யா. ஆண்டவன்தான் உங்க ரூபத்திலே வந்து இந்த ஏழைக் குடும்பத்தைக் காப்பாத்துறான்யா."

"அப்படியெல்லாம் இல்லேம்மா. நான் என் கடமையைத்தான் செஞ்சேன். நானும் உங்களை மாதிரி ஏழைத் தாய்க்கு மகனாப் பிறந்து, கஷ்டப்பட்டுப் படிச்சவன்தான். நீங்க இன்னைக்கு வேலைக்குப் போகலியா?"

"உடம்புக்கு சுகமில்லேங்கய்யா, அதான் போகலே!'

"சரிம்மா! எனக்கு நேரமாயிடுச்சு, நான் புறப்படறேன். உங்க பையனோட படிப்புக்கு ஏதாவது உதவி தேவைப்பட்டா என் ஆபீசுக்கு வந்து பாருங்க!" என்று ராக்கமாவிடம் சொல்லிவிட்டு, முத்துப் பாண்டியிடம், "நீ நல்லாப் படிச்சு பட்டம் வாங்கி ஆபீசர் ஆகணும், என்ன?" என்றார்.

"ஓ!" என்று கடிகார பெண்டுலம் மாதிரி தலையை அசைத்தான்.

வாசலுக்கு வந்து செருப்பைப் போட்டுக் கொள்ளும்போது, "உங்க சின்ன மகன் எங்கே?" என்று ராக்கம்மாவிடம் கேட்டார்.

''உண்மையைச் சொல்வதா? பொய் சொல்வதா?" என்று ராக்கம்மா யோசித்து முடிப்பதற்குள், முத்துப்பாண்டி, "அவன் ஒர்க்-ஷாப் வேலைக்குப் போயிருக்கான் சார்!" என்றான். ●

# நீங்களும் கோடீஸ்வரர் ஆகலாம்

ஆம்! அதிர்ஷ்டமான பெயர் அமைத்தால் நீங்களும் கோடீஸ்வரர் ஆகலாம். பணம், பதவி, புகழ், யாவும் கிட்டும் வெற்றிமேல் வெற்றிகளைக் குவிப்பீர்கள். இவ்வுலகில் அனுபவிக்கத்தக்க அனைத்து சுகபோகங்களையும் அனுபவிக்கலாம் என்று ஆணித்தரமாக அடித்துக் கூறுகிறார் கோவை மாவட்டம் அன்னூர், பு.புளி யம்பட்டி அருகில் உள்ள கணுவக்கரையில் வசிக்கும் ஜோதிட விஞ்ஞானி கே.ஆர். பிரபாகர்ராஜ் அவர்கள். இவரது கருத்துக்கள் பின்வருமாறு:-



ஒரு மனிதனின் வெற்றிக்கும் தோல்விக்கும் மூலகாரணமாக இருப்பது பெயரும் கையெழுத்துமே ஆகும். ஒருவருடைய பெயரை முழுவதுமாக மாற்றத் தேவை இல்லை. சிறு திருத்தம் மட்டும் செய்தால் போதும் அதிர்ஷ்டப் பெயரால் மனித வாழ்வில் ஏற்படும் அனைத்துப் பிரச்சினைகளுக்கும் மிக நல்ல முறையில் தீர்வுகாண முடியும்.

அதிர்ஷ்டப் பெயர் அமைக்க நியூமராலஜி, நேமாலஜி, சைன் தொழில் வசியம் சிக்னேச்சராலஜி பெயர் வசியம், ஆர்க் கோலஜி, கிராபாலஜி, ப்யூசராலஜி போன்ற 9 வகையான காரணிகளையும் 12 வகையான இயக்கங்களையும் ஆதாரமாக வைத்து பெயர் சூட்டினால் பிரபலம் உண்டாகும். இது பூரணமாக விஞ்ஞானத்தை அடிப்படையாகக் கொண்ட சாஸ்திரமாகும். அதிர்ஷ்டப் பெயர் எண் சாஸ்திரப்படி முறையாகப் பெயரை மாற்றினால் உடனே அதிர்ஷ்டம் உண்டாகும்.

**உங்கள் வெற்றிக்கு வழிகாட்டும்**

## ஜோதிட மாமேதை கே.ஆர். பிரபாகர்ராஜ்

**நியூமராலஜி-நேமாலஜி-சைன்-தொழில் வசியம்**



அதிர்ஷ்டப் பெயரை அமைத்துக் கொண்டால் அன்பான மனைவி (நல்ல மனைவி) அறிவுள்ள குழந் தைகள் வசதிமிக்க வீடு, வளமான தொழில், குறைவில்லாச் செல்வம் ஆரோக்கியமான உடல், இன்பகரமான வாழ்வு அனைத்து அதிர்ஷ்டங்களையும் அள்ளித் தரும். தொழில் முடக்கம் வியாபார மந்தம் உத்தியோகத்தில் இடையூறு, கணவன் மனைவியர்க்கிடையே ஒற்றுமை இல்லாமை, செக்ஸ் கோளாறு, மனக்குழப்பம், போதைப் பொருளுக்கு அடிமை ஆகுதல்.

செய்வினை மாந்திரீக பாதிப்பு தீய சக்தியால் பாதிப்பு திருமணத்தடை குழந்தைபாக்கியம் இல்லாமை, முன்னேற்ற தடை, புகழ் இல்லாமை, மனநோய் போன்ற எண்ணற்ற வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கும் இக்கலையின் மூலம் நிரந்தரத் தீர்வுகாண முடியும்.

பெயர் மாற்றத்தால் பெருஞ்செல்வர் ஆகலாம். பெயரை எந்த வயதிலும் அதிர்ஷ்டமாக மாற்றி வெற்றிகளைப் பெறலாம். முறையாகப் பெயர் அமைத்தால் முன்னேற்றம் உண்டாகும். சிலர் கடைகளில் விற்கும் பல வகையான புத்தகங்களை வாங்கி தாங்களே பெயர் மாற்றி குழம்பி வாழ்வில் பெருந்துன்பத்தை அடைந்தவர்கள் ஏராளம். RAJINI KANT (ரஜினிகாந்த்) என்ற பெயரையோRAMBA (ரம்பா) என்ற பெயரையோ எல்லோரும் வைக்க முடியாது. இது பொருந்தி வருபவர்களுக்கு மட்டுமே வைக்க வேண்டும். அப்போதுதான் அதிர்ஷ்டம் தரும்.

AJITH(அஜீத்) என்ற பெயரையும் SIMRAN(சிம்ரன்) என்ற பெயரையும் ஆய்வு செய்தால் இதில் வசியம் இருக்கும். யாருக்கு எந்தப் பெயர் பொருந்தும் என்று நன்கு ஆய்வு செய்து பெயர் அமைத்தால் அதிர்ஷ்டம் உண்டாகும். செய்கின்ற தொழில் எதுவாக இருந்தாலும் அத் தொழிலில் வசியம் இருக்க வேண்டும். அப்படி தொழில் வசியம் இருந்தால்தான் தொழிலில் பெரும் பணம் சம்பாதிக்க முடியும்.

ஒரு மனிதனுக்கு விடாமுயற்சி, அயராத உழைப்பு, தர்ம குணம், தன்னம்பிக்கை போன்ற குணங்கள் இருந்தும் வாழ்வில் வெற்றி பெற முடியவில்லையெனில் அதிர்ஷ்டம் இல்லை என்பது நன்கு தெரிகிறது. இல்லாத அதிர்ஷ்டத்தை பெற இக்கலை வழிகாட்டும்.

வெற்றிபெற துடிப்பவர்களுக்கு இது ஒரு சிறந்த வழிகாட்டியாகும். இதை பயன்படுத்துபவர்கள் அனைவரும் வெற்றியுடன் வாழலாம். என்னால் சவால்விட்டு நிரூபிக்க முடியும். இக்கலையின் மூலம் எம்மிடம் அதிர்ஷ்டப் பெயர் அமைத்தவர்கள் அனைவரும் இன்று வெற்றி பெற்றுக் கொண்டிருக்கிறார்கள். உடலின் காந்த சக்தி உயிர்ப்பு சக்திக்கு தக்கவாறு பெயரையும் கையெழுத்தையும் அமைத்தால் அபரிமிதமான அதிர்ஷ்டங்கள் கிட்டும்.

எம்.ஜி.ஆர்., சிவாஜி கணேசன், ரஜினி காந்த், பாக்கியராஜ், விஜய், சூர்யா, குஷ்பு, ரம்பா, சிம்ரன், ரோஜா, விஜயகாந்த் போன்ற சினிமா துறையினர்களும் பெயர் மாற்றத்திற்குப் பின்பு பிரபலமானவர்களே ஆகும். பெயரில் வசியம் கோபுராம்சம் இருக்க வேண்டும்.

அரசியலில் வெற்றி, சினிமாவில் புகழ், விளையாட்டில் சாதனை, தொழிலில் மேன்மைகிட்டும். அந்த கால இராஜ ராஜ சோழன், அக்பர், புத்தர், மகாவீரர், அசோகர், பொற்கை பாண்டியன், நெப்போலியன், பாரதியார், பாரதிதாசன், கண்ணதாசன், இந்திராகாந்தி, வீரமாமுனிவர், ஆதிசங்கர், காஞ்சி பெரியவர் போன்றோரும் பெயர் மாற்றத்திற்குப் பின்பு பிரபலமானவர்களே ஆகும்.

அதிர்ஷ்டப் பெயர் சாதாரண மனிதனையும் பெரிய சாதனையாளராக ஆக்கக் கூடியது. கையெழுத்தால் தலை எழுத்தை வெல்லலாம்.

ஆண்-பெண் எந்த தேதியில் பிறந்தவராக இருந்தாலும் அவர்கள் திருமணம் செய்த நாளின் கூட்டு எண், திருமணத் தேதி, மாதம், வருடம் மூன்றையும் கூட்டி வரும் எண் 2.4.5.7.8 வரும் நாளில் கண்டிப்பாக திருமணம் செய்யக் கூடாது. அப்படி செய்தால் சோதனைகளும், போராட்டங்களும் நடக்கும். இதிலிருந்து விடுபட மறு மாங்கல்ய பூஜை அதிர்ஷ்ட நாளில் செய்து கொண்டால் குடும்ப வாழ்க்கை சந்தோஷமுடனும், வெற்றியுடனும் இருக்கும்.

அதிர்ஷ்டப் பெயர், எண் சாஸ்திரம் எக்காலத்திலும் மாறாத சக்தி கொண்டது. பெயரையும் இடும் கையெழுத்தையும் வளமாக்கிக் கொண்டால் என்றென்றும் வெற்றிகள்தான். இக்கலையின் மூலம் நான் சவால்விட்டு நிரூபித்துக் காட்டிய அறிவியல் விஞ்ஞான சாஸ்திரமாகும்.

இவர் எழுதிய (உலகின் No:1 நியூமராலஜி நூல்)

## "அதிர்ஷ்ட பெயர் எண் சாஸ்திரம்"

என்னும் புத்தகத்தை வாங்கிப் படியுங்கள். எல்லா ஊர் புத்தக கடைகளிலும் கிடைக்கும்.

**அதிர்ஷ்ட விஞ்ஞான ஜோதிடர்**
கே.ஆர். பிரபாகர்ராஜ் எம்.ஏ.,
நல்லாத்தோட்டம், கணுவக்கரை (அஞ்சல்),
புஞ்சைபுளியம்பட்டி (வழி) - 638 459.
கோவை மாவட்டம். போன்: (04254) 87258, (098422)-13566.
ஃபேக்ஸ்: 0425463071
விடுமுறை: செவ்வாய், வியாழன்

ஒவ்வொரு மாதமும் 2,3-ந் தேதிகளில் மட்டும்
குருபிரகாஷ் ஹோட்டல் (கீதாஞ்சலி) 71 ஏ. உஸ்மான் ரோடு,
தி.நகர் சென்னை - 17. போன்: 4321414

**நீங்களும் அதிர்ஷ்டம், புகழ், வெற்றி பெறலாம்.**

# பொன்னியின் செல்வன்

பன்னிரண்டாம் அத்தியாயம்

## வேல் முறிந்தது!

கந்தமாறன் அவனுடைய அருமை நண்பனாயிருந்த வந்தியத்தேவன் மீது கூறிய குற்றச் சாட்டைக் கேட்டு ஆதித்த கரிகாலன் இடி இடி என்று உடல் குலுங்கச் சிரித்தான்.

"கந்தமாறா! வந்தியத்தேவன் உன் முதுகில் குத்தி விட்டான் என்றா சொல்லுகிறாய்? நீ என்னத்திற்காக அவனுக்கு முதுகு காட்டினாய்?" என்று கேட்டு விட்டு, மறுபடியும் குலுங்கக் குலுங்கச் சிரிக்கத் தொடங்கினான்.

கந்தமாறனுடைய கரிய முகம் சிவந்தது. கண்கள் கோவைப் பழம் போலாயின. உதடுகள் துடித்தன.

"ஐயா! தாங்கள் இதைச் சிரிக்கக் கூடிய விஷயமாகக் கருதுகிறீர்களா?" என்று கேட்டான்.

"கந்தமாறா! நான் சிரிக்கக்கூடாது என்று சொல்லுகிறாயா? சிரிப்பு என்பது மனிதர்களுக்குத் தெய்வம் கொடுத்திருக்கும் ஒரு வரப் பிரஸாதம். மாடு சிரிக்காது; ஆடு சிரிக்காது; குதிரை சிரிக்காது; சிங்கம் சிரிக்காது; வேடிக்கை விளையாட்டுகளில் மிக்க பிரியம் உள்ள குரங்குகள் கூடச் சிரிப்பதில்லை. மனித ஜன்மம் எடுத்தவர்கள் மட்டுந்தான் சிரிக்க முடியும். அப்படியிருக்க, நீ என்னைச் சிரிக்கக் கூடாது

அமரர் கல்கி

என்கிறாயே? நான் கூடச் சிரித்து ரொம்ப காலமாயிற்று, நண்பா! இப்போது நான் சிரிக்கும் சத்தத்தைக் கேட்டு எனக்கே ஆச்சரியமாயிருக்கிறது. நீ என்னைப் பார்த்துச் சிரிக்கக் கூடாது என்கிறாயே?'' என்றான் ஆதித்த கரிகாலன்.

"ஐயா! தாங்கள் சிரித்து மகிழ்வது பற்றி எனக்கும் சந்தோஷம்தான்! ஆனால் நான் இந்தச் சூராதி சூரனுக்கு முதுகு காட்டியதாக எண்ணிக்கொண்டு சிரிக்க வேண்டாம். நான் எதிர்பாராத சமயத்தில் பின்னால் மறைந்திருந்து இவன் என்னைக் குத்தினான். துர்க்கா தேவியின் அருளாலும் நந்தினி தேவியின் அன்பான சிகிச்சையினாலுமே நான் பிழைத்து எழுந்து வந்தேன். இவன் செய்த அந்தத் துரோகச் செயலைக் குறித்துத் தாங்கள் விசாரித்து நியாயம் செய்யுங்கள். அல்லது நானே இவனைத் தண்டிப்பதற்கு எனக்கு உடனே அதிகாரம் கொடுங்கள்!'' என்றான் கந்தமாறன்.

''நண்பனே! நானே அவசியம் விசாரித்து நியாயம் வழங்குகிறேன். செம்பியன் குலத்து மன்னர்களிடம் ஒருவன் நியாயம் கேட்டு, அவனுக்கு நியாயம் கிட்டவில்லை என்ற பேச்சு இதுவரையிலே கிடையாது. எங்கள் பரம்பரையின் ஆதி மன்னனாகிய சிபி, புறாவுக்கு நியாயம் வழங்குவதற்காகத் தன் சதையைத் துண்டு துண்டாக வெட்டிக் கொடுக்கவில்லையா? எங்கள் குலத்தைச் சேர்ந்த மனுநீதிச் சோழன் பசுவுக்கு நியாயம் வழங்குவதற்காகத் தன் குமாரனையே பலி கொடுக்கவில்லையா? நீ புறாவை விட பசுவை விட, மட்டமானவன் அல்ல. உனக்கு நான் நியாயம் வழங்க மறுக்க மாட்டேன். இவனை நான் விசாரிக்கும் வரையில் பொறுமையாயிரு! வல்லவரையா! உன் பிரயாணத்தைப் பற்றிய மற்ற விவரங்களைச் சொல்வதற்கு முன்னால், கந்தமாறனுடைய குற்றச்சாட்டுக்கு நீ மறுமொழி சொல்லி விடுவது நல்லது. என்ன சொல்லுகிறாய்? இவனை நீ பின்னாலிருந்து முதுகில் குத்தியது உண்மையா? அப்படியானால், அத்தகைய வீர லட்சணமில்லாத நீசத்தனமான காரியத்தை ஏன் செய்தாய்? எதற்காகச் செய்தாய்?'' என்று கேட்டான்.

"இளவரசே! நான் இந்த வீராதி வீரனைக் குத்தவும் இல்லை; முதுகில் குத்தவும் இல்லை; அதுவும் பின்னால் நின்று முதுகில் குத்தவும் இல்லை. முதுகில் குத்தப்பட்டு நினைவிழந்து இரத்த வெள்ளத்தில் கிடந்தவனைத் தோளில் தூக்கிக்கொண்டு போய்ச் சேந்தன் அமுதன் வீட்டில் போட்டுக் காப்பாற்றினேன். ஆனால் அப்படி இவன் உயிரைக் காப்பாற்றியதற்காக நான் இப்போது வருத்தப்படுகிறேன். இவனை மார்பிலே குத்திக் கொல்லாமற் போனோமே என்று பச்சாத்தாபப் படுகிறேன். சிநேக தர்மத்தை முன்னிட்டு என் அரசருக்குச் செய்ய வேண்டிய கடமையைப் புறக்கணித்து விட்டேன். ஐயா! இவன் என்னைச் சிநேகத் துரோகி என்று சொன்னான். ஆனால் இவன் சிநேகத் துரோகி மட்டுமல்ல; எஜமானத் துரோகி. இவன் முதுகில் குத்தப்பட்டது எங்கே, எந்த சந்தர்ப்பத்தில் என்று கேளுங்கள்! தஞ்சாவூர்க் கோட்டையின் இரகசிய சுரங்க வழியாக இவன் யாரைப் பழுவேட்டரையர் அரண்மனையில் கொண்டு போய் விட்டுத் திரும்பினான் என்று கேளுங்கள். பெரிய பழுவேட்டரையரின் பொக்கிஷ நிலவறையில் இவன் அன்றிரவு யாரைப் பார்த்தான் என்று கேளுங்கள். ஆடி மாதம் பதினெட்டாம் பெருக்கு தினத்தில் இவனுடைய கடம்பூர் மாளிகையில் என்ன நடந்தது என்று கேளுங்கள். அன்றைக்கு அங்கே மூடு பல்லக்கிலே மறைந்துகொண்டு வந்தது யார் என்று கேளுங்கள்!''

இந்தச் சமயத்தில் கந்தமாறன், உடல் நடுங்க, நாக்குழற, ''அடே! அற்பப் பயலே! நிறுத்து உன் அபத்தப் பேச்சை! இல்லாவிட்டால் இதோ இந்த வேலுக்கு இரையாவாய்!'' என்று கூறி வேலைக் கையில் எடுத்தான்.

ஆதித்த கரிகாலன் அவனுடைய படபடப்பைக் கண்டு சிறிது வியப்படைந்தான். கந்தமாறனுடைய கையிலிருந்த வேலைப் பிடுங்கித் தனது இரும்பை

யொத்த கரங்களினால் அதன் அடிக் காம்பை வளைத்தான். வேல் படார் என்று முறிந்தது. அதன் இரு பகுதி களையும் ஆதித்த கரிகாலன் வீசித் தூர எறிந்துவிட்டு, "ஜாக்கிரதை! என் சிநே கிதர்கள் என் முன்னாலேயே சண்டை யிடுவதை நான் சும்மா பார்த்துக் கொண்டிருக்க முடியாது... பார்த்திபேந் திரா! இவர்களில் யாராவது இனி வேலையோ, வாளையோ, கையில் எடுத் தால் உடனே அவனைச் சிறைப்படுத் துவது உன் பொறுப்பு!" என்றான்.

உடனே வந்தியத்தேவன் தன்னிட மிருந்த வாளை எடுத்துப் பார்த்திபேந் திரனிடம் கொடுத்தான். பார்த்திபேந் திரனும் வேண்டா வெறுப்பாக அந்த வாளைப் பெற்றுக்கொண்டான்.

"கந்தமாறா! உன்னுடைய குற்றச் சாட்டுக்கு வல்லவரையன் மறுமொழி கூறினான். அதன் உண்மையைக் குறித்து நானே சாவகாசமாக விசாரித்துத் தீர்ப் புக் கூறுகிறேன். அவன் கேட்ட கேள்வி களுக்கு நீ விடை சொல்லப் போகி றாயா?" என்று கரிகாலன் கேட்டான்.

கந்தமாறன் தட்டுத் தடுமாறி மென்று விழுங்கிக்கொண்டு, "ஐயா! அந்த விஷ யங்களைப் பற்றி நான் யாரிடமும் சொல்லுவதில்லை என்று சத்தியம் செய்திருக்கிறேன்" என்றான்.

பார்த்திபேந்திரன் இப்போது தலை யிட்டு, "அரசே! இவர்கள் ஒருவரை யொருவர் குற்றம் சாட்டுவது ஏதோ பெண்ணைப் பற்றிய விஷயமாகக் காண்கிறது. ஆகையால் இவர்களைத் தனித் தனியாகக் கேட்டுத் தெரிந்து கொள்வது நலம்!" என்றான்.

"ஆம், பார்த்திபா! நானும் அப்படித் தான் கருதுகிறேன். நீங்கள் மூன்று பேரும் தனித்தனியாகப் பழுவூர் இளையராணியைப் பார்த்து அவளு டைய மோக வலையில் விழுந்திருக் கிறீர்கள். ஆகையினால்தான் ஒருவரை ஒருவர் விழுங்கி விடப் பார்க்கிறீர்கள்!" என்று கரிகாலன் கூறிவிட்டு மறுபடியும் சிரித்தான்.

பார்த்திபேந்திரனுடைய முகம் சிணுங்கியது. அவன், "பிரபு! தாங்கள் இன்றைக்கு எந்த முக்கிய விஷயத்தை யும் இலேசாகக் கருதிச் சிரிக்கத் தீர் மானித்திருப்பதாகத் தெரிகிறது. நல்லது; நானும் சொல்ல வேண்டியதைச் சொல்லி விடுகிறேன். இந்த வந்தியத் தேவன் பேரில் எனக்கும் பல சந்தேகங் கள் இருக்கின்றன. முக்கியமானதை மட்டும் இப்போது சொல்லுகிறேன். இவனைத் தீப்பிடித்த கப்பலிலிருந்து காப்பாற்றுவதற்காகவே தங்கள் அருமைச் சகோதரர் நடுக்கடலில் கடும் புயலில் குதித்தார். பிறகு பொன்னியின் செல்வரைக் காணவே இல்லை. இவன் மட்டும் அன்றிருந்த மேனிக்கு அழிவில் லாமல் கொட்டாப் புளியைப் போல் இங்கே வந்து முளைத்திருக்கிறான். தங்கள் சகோதரர் என்ன ஆனார் என்று இவனைக் கேளுங்கள். அவரைக் கடல் கொண்டிருந்தால் அதற்கு இந்தப் பாதகனே காரணமாவான்!" என்றான்.

கரிகாலன் வந்தியத்தேவனைப் பார்த்து, "இதற்கு என்ன மறுமொழி சொல்லுகிறாய்?" என்று கேட்டான்.

"ஐயா! நான் இவருடைய கேள்விக்கு மறுமொழி சொல்லுவதற்கு முன்னால், இவர் ஒரு கேள்விக்கு விடை சொல்லட் டும். பொன்னியின் செல்வரை இலங் கையிலிருந்து இவர்தான் தம்முடைய கப்பலில் அழைத்துக்கொண்டு புறப்பட் டார். முதன் மந்திரி அநிருத்தரும் சேநாதிபதி பூதி விக்கிரம கேசரியும் இலங்கையிலேயே இருக்கும்படி பொன்னியின் செல்வரைக் கேட்டுக் கொண்டார்கள். ஆயினும் தமையன் கட்டளையைப் பெரிதாய் மதித்து இளவரசர் இவருடைய கப்பலில் ஏறிக் கிளம்பினார். அவரை ஏன் இவர் பத்திரமாகத் தங்களிடம் கொண்டு வந்து சேர்க்கவில்லை? நடுக் கடலில் பொன்னியின் செல்வர் குதித்தபோது இவர் ஏன் பார்த்துக்கொண்டு நின்றார்? ஏன் இளவரசரைத் தடுக்கவில்லை? ஏழையும் அநாதையுமான என்னைக் காப்பாற்றுவதற்காகப் பொன்னியின் செல்வர் தம் உயிருக்குத் துணிந்து இறங் கினாரே! வீர பல்லவ குலத்தின்

தோன்றலாகிய இவரும் இவருடைய ஆட்களும் இளவரசரைப் பாதுகாப் பதற்காக ஏன் கடலில் குதிக்கவில்லை? அவரைக் கடல் கொண்டு போவதை வேடிக்கை என்று எண்ணிப் பார்த்துக்கொண்டு நின் றார்களா...?''

பார்த்திபேந்திரனுடைய முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தது. அவனு டைய கைகள் துடித்தன;





உதடுகளும் துடித்தன; உடல் ஆடியது.

"ஐயா! இந்த மூடன் என் மீது குற்றம் சுமத்துகிறான் என்று தோன்றுகிறது. இளவரசரை நானே கொன்று விட்டேன் என்று கூடச் சொல்லுவான் போலிருக்கிறது. இதை நான் ஒரு கணமும் பொறுத்துக் கொண்டிருக்க முடியாது!" என்றான்.

கரிகாலன் அவனை உற்று நோக்கி, "பார்த்திபா! நான் தான் சொன்னேனே? என் அருமைத் தோழர்களாகிய நீங்கள் மூன்று பேரும் ஒருவரையொருவர் கடித்துத் தின்று

விடும் நிலைக்கு வந்து விட்டீர்கள். இதற்கெல்லாம் நான் உங்கள் பேரில் குற்றம் சொல்லவில்லை. அந்தப் பழுவூர் ராணியின் சக்தி அப்படிப்பட்டது என்பதை நானே உணர்ந்திருக்கிறேன். நீயும் கந்தமாறனும் குதிரை மீது ஏறிச் சற்று முன்னால் மெதுவாகப் போய்க்கொண்டிருங்கள். இவனுடைய பிரயாண விவரங்களைக் கேட்டுக் கொண்டு நான் சற்றுப் பின்னால் வருகிறேன். உங்கள் குற்றச்சாட்டுகளைப் பற்றி விசாரித்து உண்மையைக் கண்டுபிடிக்கிறேன். ஆனால் ஒன்று நிச்சயமாய் வைத்துக்கொள்ளுங்கள். நீங்கள் மூன்று பேரும் சிநேகமாக இருந்தே தீர வேண்டும். ஒருவருக்கொருவர் சண்டை போட்டுக் கொண்டீர்களானால், அதைக் காட்டிலும் எனக்கு அதிருப்தி உண்டாக்குவது வேறொன்றுமிராது!''

பார்த்திபேந்திரனும் கந்தமாறனும் வேறு வழி இன்றித் தத்தம் குதிரை மீது ஏறி முன்னால் சென்றார்கள்.

அப்போது ஆழ்வார்க்கடியான் வந்தியத்தேவன் அருகில் வந்து அவன் காதோடு "அப்பனே! நீ வெகு கெட்டிக்காரனாகி விட்டாய்! பொய்யும் சொல்லாமல் உண்மையையும் வெளியிடாமல் வெகு சாமர்த்தியமாகப் பேசித் தப்பித்துக்கொண்டாய்!'' என்றான்.

அப்போதுதான் ஆதித்த கரிகாலன் பார்வை அங்கு வந்த ஆழ்வார்க்கடியான் மீது விழுந்தது.

"ஓகோ! இவன் யார்? எப்போதோ, எங்கேயோ பார்த்த முகமாக இருக்கிறதே!'' என்று கேட்டான்.

"ஆம், அரசே! சில ஆண்டுகளுக்கு முன்பு என்னைப் பார்த்திருக்கிறீர்கள்!''

"உன் குரல் கூடக் கேட்ட குரலாகத்தானிருக்கிறது.''

"ஆம், ஐயா! மூன்று ஆண்டுகளுக்கு முன்பு மிக முக்கியமான ஒரு தருணத்தில் என் குரலைக் கேட்டீர்கள்...''

ஆதித்த கரிகாலனின் முகத்தில் திடீரென்று ஒரு கரிய நிழல் வேகமாகப் படர்வது போலிருந்தது.

"மூன்று ஆண்டுகளுக்கு முன்னால்... முக்கியமான தருணம்... அது என்ன...? வைகை நதித் தீவில் பகைவனைத் தேடி அலைந்தபோது நான் கேட்ட குரலா? அப்படியும் இருக்க முடியுமா?''

''அந்தக் குரல் என் குரல்தான். அரசே! பகைவன் ஒளிந்திருந்த இடத்தைத் தங்களுக்கு மரத்தின் மறைவிலிருந்து சொன்னவன் நான்தான்!''

''ஆகா! என்ன பயங்கரமான தினம் அது? அன்றைக்கு எனக்குப் பிடித்திருந்த வெறியை நினைத்தால் இன்று கூட உடல் நடுங்குகிறது. வைஷ்ணவரே! நீ ஏன் அன்று காட்டில் மறைந்திருந்தாய்? எதற்காக உன்னை அசரீரியாக மாற்றிக்கொண்டாய்?''

''அரசே! சற்று முன் தாங்களே சொன்னீர்களே! தங்களுக்கு அன்று பிடித்திருந்த வெறியைப் பற்றி! எதிரில் கண்டவர்களையெல்லாம் வெட்டி வீழ்த்திக்கொண்டு போனீர்கள். சில காலம் நான் உயிர் வாழ விரும்பினேன்...''

''அது மட்டுந்தானா காரணம்? 'அசரீரி வெளி வந்து எனக்கு வழி காட்டட்டும்' என்று எவ்வளவோ முறை தொண்டை வலிக்கக் கூவினேனே? அப்போதும் நீ, ஏன் வெளி வரவில்லை?''

"நான் வளர்த்த சகோதரி - இப்பொழுது பழுவூர் இளையராணி - அவளுடைய தீராத கோபத்துக்கு ஆளாக நான் விரும்பவில்லை...''

"அவளுடைய தீராத கோபத்துக்கு நான் மட்டும் ஆளாகலாம் என்று எண்ணினாயாக்கும்! அட சண்டாளா!'' என்று கூறி ஆதித்த கரிகாலன் இடையிலிருந்த கத்தியை உருவினான்.

வந்தியத்தேவன் பயந்து போனான். ஆழ்வார்க்கடியானுடைய வாழ்வு அன்றோடு முடிந்தது என்றே எண்ணினான். மிக்க தயக்கத்துடன் ''ஐயா! இந்த வைஷ்ணவன் முதன் மந்திரியிடமிருந்து வந்திருக்கிறான். இவன் கொண்டு வந்த செய்தியைக் கேட்டுக் கொண்டு பிறகு

இவனைத் தண்டியுங்கள்!'' என்றான்.

''ஆகா! இவனைத் தண்டித்து என்ன பிரயோஜனம்? இனி யாரைத் தண்டித்து என்ன பயன்?'' என்று கூறிக் கரிகாலன் கத்தியை உறையில் போட்டான்.

கரிகாலனின் கோபத்தைக் கண்டு வந்தியத்தேவன் பயந்தது போல் ஆழ்வார்க்கடியான் பயந்ததாகத் தெரியவில்லை. முகத்தில் விசித்திரமான புன்னகையுடன், ''அரசே! தங்கள் கோபத்தை என் பேரில் திருப்புவீர்கள் என்று எண்ணித்தான் இத்தனை நாளும் தங்களை நான் நேரில் சந்திக்காமலிருந்தேன். என் பேரில் என் சகோதரி கொண்ட கோபமும் இன்னும் தீரவில்லை. இன்று வரையில் என்னைப் பார்ப்பதற்குப் பிடிவாதமாக மறுத்துக் கொண்டிருக்கிறாள். ஆனால் தங்கள் பேரில் அவளுடைய கோபம் தீர்ந்து விட்டதாகக் காண்கிறது. நந்தினி தேவியின் அன்பான திருமுக ஓலையைப் பார்த்து விட்டுத்தானே தாங்கள் கடம்பூர் அரண்மனைக்கு விருந்துக்குப் புறப்பட்டீர்கள்?'' என்றான்.

''ஆகா! துஷ்ட வைஷ்ணவனே! அது உனக்கு எப்படித் தெரிந்தது?'' என்று கரிகாலன் கேட்டான்.

''ஐயா! முதன்மந்திரி அநிருத்தரின் பணியாளன் நான். முதன் மந்திரிக்குத் தெரியாமல் இந்தச் சோழ ராஜ்யத்தில் எந்தச் சிறிய காரியமும் நடக்க முடியாது'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''பார்த்துக் கொண்டே இரு! ஒருநாள் அந்த அன்பில் அநிருத்தனையும் உன்னையும் சேர்த்துத் தேசப் பிரஷ்டம் செய்து விடுகிறேன்...! இப்போது இருவரும் குதிரை மீது ஏறிக் கொள்ளுங்கள்! என் இரு பக்கத்திலும் வந்துகொண்டிருங்கள். பேசிக்கொண்டே போகலாம்'' என்றான் ஆதித்த கரிகாலன்.

### பதின்மூன்றாம் அத்தியாயம்

## மணிமேகலையின் அந்தரங்கம்

கடம்பூர் மாளிகையின் விருந்தினர் பகுதியில், விசேஷமாக அலங்கரிக்கப்பட்டிருந்த அந்தப்புரத்து அறையில், சப்ரமஞ்சக் கட்டிலில் நந்தினி சாய்ந்துகொண்டிருந்தாள். அவளும் அன்றைக்கு மிக நன்றாக அலங்கரித்துக்கொண்டு விளங்கினாள். அவளுடைய முகம் என்றுமில்லாத எழிலுடன் அன்று திகழ்ந்தது. அவள் பகற் கனவு கண்டுகொண்டிருக்கிறாள் என்பது அவளுடைய பாதி மூடிய கண்களிலிருந்து தெரிந்தது. கண்களின் கரிய இமைகள் மூடித் திறக்கும்போதெல்லாம் விழிகளிலிருந்து மின்னலைப் போன்ற காந்த ஒளிக் கிரணங்கள் தோன்றி மறைந்துகொண்டிருந்தன. இதிலிருந்து அவள் பார்ப்பதற்கு அரைத் தூக்கத்தில் இருப்பதாகத் தோன்றினாலும் அவளுடைய உள்ளம் உத்வேகத்துடன் சிந்தித்துக்கொண்டிருந்தது என்பது நன்றாகப் புலனாயிற்று.

இன்னும் சிறிது கூர்ந்து கவனித்துப் பார்த்தால், அவளுடைய பாதி மூடிய கண்களின் பார்வை அந்த அறையின் ஒரு பக்கத்தில் அகிற் குண்டத்திலிருந்து கிளம்பிக்கொண்டிருந்த புகைத் திரளின் மீது சென்றிருந்தது என்பதை அறியலாம். குண்டத்திலிருந்து புகை திரளாகக் கிளம்பிச் சுழி சுழியாக வட்டமிட்டுக்கொண்டு மேலே போய்ச் சிதறிப் பரவிக் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்து போய்க்கொண்டிருந்தது. அந்த அகிற் புகைச் சுழிகளிலே நந்தினி என்னென்ன காட்சிகளைக் கண்டாளோ, தெரியாது. திடீரென்று அவள் ஒரு பெரு மூச்சு விட்டாள். அவளுடைய பவள இதழ்கள் ''ஆம், ஆம்! நான் கண்ட கனவுகள் எல்லாம் இந்தப்

புகைத் திரளில் தோன்றும் சுழிகளைப் போலவே ஒன்றுமில்லாமல் போயின. இந்தப் புகைத் திரளாவது அருமையான நறுமணத்தைத் தனக்குப் பின்னால் விட்டு விட்டு மறைகிறது. என் கனவுகள் பின்னால் விட்டுப் போனவையெல்லாம் வேதனையும் துன்பமும் அவதூறும் அபகீர்த்தியுந்தான்!'' என்று முணுமுணுத்தன.

அச் சமயம் "தேவி! தேவி! உள்ளே வரலாமா?'' என்று மணிமேகலையின் மெல்லிய குரல் கேட்டது.

"வா, அம்மா, வா! உன்னுடைய வீட்டில் நீ வருவதற்கு என்னைக் கேட்பானேன்?'' என்றாள் நந்தினி.

மணிமேகலை அந்தக் கதவைத் திறந்துகொண்டு மெள்ள நடந்துதான் வந்தாள். ஆனால் அவளுடைய முகத் தோற்றத்திலும் நடக்கும் நடையிலும் கையின் வீச்சிலும் உற்சாகம் ததும்பிய படியால் அவள் துள்ளிக் குதித்து ஆடிப் பாடிக்கொண்டு வருவதாகத் தோன்றியது.

நந்தினி சிறிது நிமிர்ந்து உட்கார்ந்து, கட்டிலுக்குப் பக்கத்திலிருந்த தந்த பீடத்தைக் காட்டி, அதில் மணிமேகலையை உட்காரச் சொன்னாள்.

மணிமேகலை உட்கார்ந்துகொண்டு, "தேவி! தங்களிடம் நான் எப்படி எப்படி நடந்து கொள்ள வேண்டுமென்று என் தமையன் எனக்குச் சொல்லிக் கொடுத்திருக்கிறான். தென் தேசத்தாரின் நாகரிகத்தைப் பற்றி ரொம்பவும் சொல்லியிருக்கிறான். கேட்காமல் கொள்ளாமல் திடீரென்று இன்னொருவர் அறைக்குள் நுழையக் கூடாது என்று தெரிவித்திருக்கிறான்!'' என்றாள்.

"தென் தேசத்தாரும் அவர்களுடைய நாகரிகமும் நாசமாய்ப் போகட்டும். உன் அண்ணன் உனக்குச் சொல்லிக் கொடுத்ததையெல்லாம் உடனே மறந்து விடு! என்னைத் 'தேவி' என்றோ 'மகாராணி' என்றோ ஒருபோதும் கூப்பிடாதே! 'அக்கா!' என்று அழை!''

"அக்கா! அக்கா! அடிக்கடி உங்களிடம் நான் வந்து தொந்தரவு செய்வது உங்களுக்குக் கஷ்டமாயிராதல்லவா?''

"நீ அடிக்கடி வந்து தொந்தரவு செய்வது எனக்குக் கஷ்டமாய்த்தானிருக்கும்; என்னை விட்டுப் போகாமல் இங்கேயே இருந்து விட்டாயானால் ஒரு தொந்தரவும் இராது!'' என்று கூறி நந்தினி புன்னகை புரிந்தாள்.

அந்தப் புன்னகையில் சொக்கிப் போன மணிமேகலை சற்று நேரம் நந்தினியின் முகத்தையே பார்த்துக்கொண்டிருந்து விட்டு, "தங்களைப் போன்ற அழகியை நான் பார்த்ததே இல்லை. சித்திரங்களிலே கூடப் பார்த்ததில்லை'' என்று சொன்னாள்.

"பெண்ணே! நீ வேறு என் மீது மோகம் கொண்டு விடாதே! ஏற்கனவே நான் ஒரு 'மாய மோகினி' என்பதாக ஊரெல்லாம் பேச்சாயிருக்கிறது. என் பக்கத்தில் வரும் ஆண் பிள்ளைகளை மயக்கி விடுகிறேன் என்று என்னைப் பற்றி அவதூறு பேசுகிறார்கள்...!''

"அக்கா! அப்படி யாராவது அவதூறு பேசுவது என் காதில் மட்டும் விழுந்தால் அவர்களுடைய நாக்கை ஒட்ட அறுத்து விட்டுத்தான் மறு காரியம் பார்ப்பேன்!'' என்றாள் மணிமேகலை.

"ஊராரைக் குற்றம் சொல்லுவதில் பயனில்லை, மணிமேகலை! நான் கிழவரைக் கலியாணம் செய்துகொண்டிருக்கிறேன் அல்லவா? அதனால் அப்படித்தான் பேசுவார்கள்!''

மணிமேகலையின் முகம் சுருங்கிற்று.

"ஆம், ஆம்! அதை நினைத்தால் எனக்குக் கூட வருத்தமாகத்தானிருக்கிறது. என் தமையனும் சொல்லிச் சொல்லி வருத்தப்பட்டான். அதற்காக ஒருவரைப் பற்றிக் கண்டபடி அவதூறு பேசலாமா, என்ன...?''

"பேசினால் பேசிக்கொண்டு போகிறார்கள், மணிமேகலை! அப்பேர்ப்பட்ட சீதா தேவியைப் பற்றிக் கூடத்தான் ஊரில் அவதூறு பேசினார்கள். அதனால் சீதைக்கு என்ன நஷ்டம் வந்து விட்டது? என் விஷயம் இருக்கட்டும்; உன்னைப் பற்றி சொல்லு!''

"என்னைப் பற்றிச் சொல்லுவதற்கு

என்ன இருக்கிறது, அக்கா!''

''அடி, கள்ளி! இன்று மாலையில் வந்து உன் மனத்தில் உள்ள அந்தரங்கத்தைச் சொல்லுகிறேன் என்று நீ கூறி விட்டுப் போகவில்லையா? இப்போது என்ன சொல்லுவதற்கு இருக்கிறது என்கிறாயே?'' என்று கூறிவிட்டு நந்தினி மணிமேகலையின் அழகிய கன்னத்தை இலேசாகக் கிள்ளினாள்.

''அக்கா! எப்போதும் எனக்கு இப்படியே தங்களுடன் இருந்து விட வேண்டும் என்று ஆசையாயிருக்கிறது. எனக்குச் சுயம்வரம் வைத்து, பெண்கள் பெண்களையே கல்யாணம் செய்து கொள்ளலாம் என்று ஏற்படுத்தினால் நான் தங்களுக்குத்தான் மாலையிடுவேன்!'' என்றாள் மணிமேகலை.

''என்னை நீ பார்த்து முழுமையாக ஒருநாள் கூட ஆகவில்லை! அதற்குள் இப்படி மாய்மால வார்த்தைகள் பேசுகிறாயே? அதைப் பற்றி எனக்கு சந்தோஷம்தான். எனக்குப் பிரியமான தோழி உன்னைப் போல் ஒருத்தி இல்லையே என்று எவ்வளவோ தாபப்பட்டுக் கொண்டிருந்தேன். சோழ நாட்டின் சிற்றரசர் வீட்டுப் பெண்கள் எல்லாரும் அந்தப் பழையாறைப் பிசாசைத்தான் தேடிக் கொண்டு போவார்கள். நீ ஒருத்தியாவது எனக்கு மிச்சமிருக்கிறாயே? – ஆனால் நீ சற்று முன் கூறியது நடவாத காரியம். பெண்ணுக்குப் பெண் மாலையிடுவது என்பது உலகில் என்றும் நடந்ததில்லை. யாராவது ஓர் ஆண் பிள்ளையைத்தான் நீ மணந்து கொண்டு தீர வேண்டும்...''

''கன்னிப் பெண்ணாகவே இருந்து விட்டால் என்ன; அக்கா?''

''முடியாது, கண்ணே! முடியாது! கன்னிப் பெண்ணாயிருக்க இந்த உலகம் உன்னை விடவே விடாது. உன் அம்மாவும் அப்பாவும் விட மாட்டார்கள். உன் தமையனும் விட மாட்டான். யாராவது ஓர் ஆண் பிள்ளையின் கழுத்தில் உன்னைக் கட்டி விட்டால்தான் அவர்களது மனம் நிம்மதி அடையும். அப்படி நீ கல்யாணம் செய்து கொள்வது என்று ஏற்பட்டால், யாரை மணந்து கொள்ளப் பிரியப்படுகிறாய், சொல்லு!''

''பெயரைக் குறிப்பிட்டுக் கேளுங்கள் அக்கா! சொல்கிறேன்!''

''சரி, சரி! அப்படியே கேட்கிறேன். சிவ பக்தியில் சிறந்த மதுராந்தகத் தேவரை மணந்து கொள்ள விரும்புகிறாயா? அல்லது வீரதீர பராக்கிரமங்கள் மிகுந்த ஆதித்த கரிகாலருக்கு மாலையிடப் பிரியப்படுகிறாயா?''

திடீரென்று மணிமேகலை எதையோ நினைத்துக் கொண்டவள் போல் கலகலவென்று வாய் விட்டுச் சிரித்தாள்.

''ஏன் சிரிக்கிறாய், மணிமேகலை? நான் பரிகாசம் செய்கிறேன் என்று எண்ணிக்கொண்டாயா? இந்த விஷயத்தை முடிவு செய்வதற்காகவே என்னை உன் தமையன் இங்கே முக்கியமாக வரச் சொன்னான். இன்னும் சற்று நேரத்தில் கரிகாலர் இங்கே வந்துவிடக் கூடும். உன் தமையனும் வந்துவிடுவான். உன் அந்தரங்கத்தை அறிந்து சொல்லுவதாக அவனுக்கு நான் வாக்குக் கொடுத்திருக்கிறேன்'' என்றாள் நந்தினி.

''என் அந்தரங்கம் இன்னதென்று எனக்கே தெரியவில்லையே, அக்கா! நான் என்ன செய்யட்டும்?''

''எதற்காகச் சிரித்தாய், அதையாவது சொல்!'' என்று கேட்டாள் நந்தினி.

''மதுராந்தகர் பெயரைச் சொன்னதும் ஒரு விஷயம் ஞாபகத்துக்கு வந்தது. நாலு மாதத்துக்கு முன்பு அவர் இந்த வீட்டுக்கு ஒரு தடவை வந்திருந்தார். தாங்கள் வழக்கமாக வரும் மூடு பல்லக்கில் ஏறிக்கொண்டு ஒருவரும் பார்க்காமல் திரை போட்டுக்கொண்டு வந்தார். அந்தப்புரத்தில் எங்களுக்கு அந்த இரகசியம் தெரியாது. தாங்கள் தான் வந்திருக்கிறீர்கள் என்று எண்ணிக் கொண்டிருந்தோம். 'பழுவூர் ர்ாணி ஏன் அந்தப்புரத்துக்கு வரவில்லை?' என்று ஒருவரையொருவர் கேட்டுக் கொண்டிருந்தோம், அக்கா! பெண்களைப் பெண்கள் கல்யாணம் செய்து கொள்ள முடியாது என்று சற்று முன் சொன்னீர்கள் அல்லவா? மதுராந்தகரை நான்

மணந்து கொள்வது ஒரு பெண்ணை மணம் புரிந்து கொள்ளுவது போலத் தான்...!"

நந்தினி புன்னகை புரிந்து, "ஆம், ஆம்! மதுராந்தகரை நீ விரும்ப மாட்டாய் என்றுதான் நானும் நினைத்தேன். உன் அண்ணனிடமும் சொன்னேன். மதுராந்தகத் தேவர் முன்னமே என் மைத்துனர் மகளை மணந்து கொண்டிருக்கிறார். அவள் ரொம்ப அசும்பாவக்காரி. அவளுடன் உன்னால் ஒருநாள்கூட வாழ்க்கை நடத்த முடியாது. அப்படியானால், இளவரசர் கரிகாலரிடம் நீ மனத்தைச் செலுத்தி விட்டாய் என்று சொல்லு!" என்றாள் நந்தினி.

"அப்படியும் சொல்ல மாட்டேன், அக்கா! அவரை நான் பார்த்ததே இல்லை. எப்படி என் மனம் அவரிடம் சென்றிருக்க முடியும்?"

"அடியே! இராஜகுலத்துப் பெண்கள் பார்த்து விட்டுத்தான் மனத்தைச் செலுத்துவது என்பது உண்டா? கதைகளிலும் காவியங்களிலும், சித்திரங்களைப் பார்த்து விட்டும் கீர்த்தியைக் கேட்டு விட்டும் காதல் கொண்ட பெண்களைப் பற்றி நீ அறிந்ததில்லையா?"

"ஆம், ஆம்! அறிந்திருக்கிறேன். ஆதித்த கரிகாலர் வீராதி வீரர் என்று உலகமெல்லாம் அவர் புகழ் பரவியிருக்கிறதென்றும் அறிந்திருக்கிறேன். அக்கா! வீர பாண்டியனுடைய தலையை ஆதித்த கரிகாலர் ஒரே வெட்டில் வெட்டி விட்டாராமே? அது உண்மையா?"

நந்தினியின் முகம் அச் சமயம் எவ்வளவு பயங்கரமாக மாறியது என்பதை மணிமேகலை கவனிக்கவில்லை.

நந்தினி சில வினாடி நேரம் வேறு பக்கம் பார்த்துக்கொண்டிருந்து விட்டுத் திரும்பினாள். அதற்குள் அவள் முகம் பழையபடி பார்ப்போரை மயக்கும் மோகன வசிகரத்துடன் விளங்கியது.

"மணிமேகலை! ஒருவனுடைய தலையை ஒரே வெட்டில் வெட்டி விடுவது பெரிய வீரம் என்று கருதுகிறாயா? அது பயங்கர அசுரத்தனம் அல்லவா?" என்றாள்.

"நீங்கள் சொல்வது எனக்கு விளங்கவில்லை, அக்கா! பகைவனின் தலையை வெட்டுவது வீரம் இல்லையா? அது எப்படி அசுரத்தனமாகும்?"

"இந்த மாதிரி யோசனை செய்து பார்! உனக்கு ரொம்ப வேண்டியவன் ஒருவனை அவனுடைய பகைவன் தலையை வெட்ட வருகிறான் என்று வைத்துக் கொள். உன் தமையனை எண்ணிக் கொள். அல்லது நீ மணம் செய்து கொள்ள உத்தேசித்திருக்கும் காதலன் ஒருவன் இருப்பதாக நினைத்துக்கொள். அவன் காயம் பட்டுப் படுத்த படுக்கையாகக் கிடக்கும்போது, இன்னொருவன் - அவனுடைய பகைவன், - கத்தியை ஓங்கிக்கொண்டு தலையை வெட்ட வருகிறான் என்று எண்ணிக் கொள். அப்படி வெட்ட வருகிறவனுடைய வீரத்தை நீ மெச்சிப் பாராட்டுவாயா?" என்று கேட்டாள் பழுவூர் ராணி.

மணிமேகலை சற்று யோசித்து விட்டு, "அக்கா! மிக விசித்திரமான கேள்வியை நீங்கள் கேட்கிறீர்கள். ஆயினும் எனக்குத் தோன்றும் மறுமொழியை நான் சொல்லுகிறேன். அத்தகைய நிலைமை எனக்கு ஏற்பட்டால், நான் சும்மா பார்த்துக் கொண்டிருக்க மாட்டேன். கொல்ல வருகிறவனுடைய கையிலிருந்து கத்தியைப் பிடுங்கி அவனை நான் குத்திக் கொன்று விடுவேன்!" என்றாள்.

நந்தினி மணிமேகலையை ஆர்வத்துடன் கட்டித் தழுவிக்கொண்டாள். "என் கண்ணே! நல்ல மறுமொழி சொன்னாய்! இவ்வளவு புத்திசாலியாகிய உனக்கு நல்ல கணவன் வாய்க்க வேண்டுமே என்று எனக்குக் கவலையாயிருக்கிறது. ஆதித்த கரிகாலர்கூட உனக்குத் தக்க மணவாளர் ஆவாரா என்பது சந்தேகந்தான்" என்றாள் நந்தினி.

"நானும் அப்படித்தான் எண்ணுகிறேன். கரிகாலருடைய குணாதிசயங்களைப் பற்றிக் கேட்ட பிறகு அவரை நினைத்தால் எனக்குச் சற்றுப் பயமாகவே இருக்கிறது. என்னுடைய அந்தரங்கத்தை, என் மனத்திலுள்ளதை, உள்ளபடி சொல்லட்டுமா, அக்கா?" என்று கேட்டாள் மணிமேகலை.

(தொடரும்)

# வட்டமேஜை

'பாரதீய ஜனதா கட்சிதான் இருக்கும் கட்சிகளிலேயே கொஞ்சம் நாணயமான கட்சி. அதுதான் பதவிக்கு வர வேண்டும்' என்று வாதாடிய கல்கி, மூவர் ராஜினாமா நாடகத்தைப் பற்றி எழுதிய தலையங்கத்தில், யாராக இருந்தாலும் குற்றம் குற்றமே என்று இடித்துக் கூறியிருப்பது நக்கீரரை நினைவூட்டுகிறது. உண்மையில் ஒரு நியாயமான எதிர்க்கட்சியின் வேலையை கல்கி செவ்வனே செய்வதற்குப் பாராட்டுகள்!

திருப்பரங்குன்றம், டி.கே. சுப்பிரமணியன்.

தொலைக்காட்சியே சரணம் என்றிருக்கும் இந்த கம்ப்யூட்டர் யுகத்திலும், கர்நாடக சங்கீதப் பயிற்சி வகுப்புகளுக்கு மழலைப் பட்டாளத்தின் உற்சாகமும், இசை அறிவும் நம்மை மெய்சிலிர்க்க வைக்கின்றன. என்ன கலாசார மாற்றங்கள் வந்தாலும், கர்நாடக இசை என்றும் உச்சத்திலேயே இருக்கும் என்பதை இது பறைசாற்றுகிறது.

காரைக்குடி, பாலு.




## எதிர்க்கட்சியாகச் செயல்படும் கல்கி!

மன உறுதியால் உடல் வேதனையைக் கூட வெற்றி கொண்டு மிருதங்கம் வாசிக்கும் ஷ்யாம சுந்தரின் வாழ்க்கை, சாதாரண தோல்வியைக் கண்டே மனம் துவளும் இன்றைய இளைஞர்களுக்கு ஒரு 'டானிக்'காக அமையும் என்று நம்பலாம்!

திருச்சி - 2, என். சம்பத்.

இசைச் சிறப்பிதழ், வித்வான்கள், சென்னை சபாக்கள் பற்றிய பல்வேறு தகவல்களைக் கவனமாக அளித்துள்ளது. பிற்காலத்தில் புரட்டிப் பார்த்தால் பல அரிய சங்கதிகளைத் தரும் கருவூலமாக இது விளங்கும். பேராசிரியர் கல்கி அவர்களின் வழியைப் பின்பற்றி கர்நாடக இசைக்கு இன்றளவும் 'கல்கி' செய்துவரும் பணி பாராட்டத்தக்கது.

சென்னை - 5, பெ. சு. சங்கரன்.

'தம்மின் மெலியாரை நோக்கித் தமது உடைமை அம்மா பெரிது என அக மகிழ்க' என்ற வள்ளலாரின் வைர வரிகளை நினைவு படுத்தியது விநாயக முதலியாரின் எளிமை கலந்த பேச்சு.

தூத்துக்குடி, கே. சுதர்ஷன்.

'தேவாரம் பாடறதை மறந்துடாதீங்க; பாரதிதாசன் பாட்டுக்களையும் பாடுங்க' என்ற அறிவுரையில் தமிழ்ப்பற்றையும் 'கட்சிக்கு மட்டும் வந்துராதீங்க' எனும் அறிவுரையில் தனி மனித ஆற்றலிலும் அக்கறை காட்டிய அண்ணாவின் பண்பையும் விநாயகமுதலியாரின் பேட்டி புலப்படுத்தியது.

சென்னை - 14, அய்யாறு வாசுதேவன்.

'ஒன்றே குளம்' பற்றிய கேள்விக்கு தராசின் பதிலைப் படித்ததும் சிரிப்பு அடங்க வெகு நேரமாயிற்று.

சிதம்பரம், ஸ்ரீவித்யா காளிதாஸ்.

'உன்னருகே நானிருந்தால்' திரைப்படத்திற்கு மிகச் சரியாக விமர்சனம் எழுதியுள்ளீர்கள். பாராட்டுகிறேன்.

விழுப்புரம், வை. வெங்கடேசன்.

என்னய்யா... உமது விமர்சகரின் ரசனை? எங்களையெல்லாம் பெரும் சோதனைக்கு ஆளாக்கிய 'உன்னருகே நானிருந்தால்' படத்தை ஆஹா... ஓஹோ என்கிறார். உமது விமர்சகர் மட்டும் என்னருகேயிருந்தால்... ஆமா சொல்லிப்புட்டேன்!?

சேலம் - 9, சூர்யநிலா.

மந்திரப் புன்னகை தொடரை மிகவும் ரசித்துப் படித்தேன். மேஜிக் நிபுணர், மேஜிக்கில் மட்டுமல்ல; அதைப் பற்றி சுவைபட விவரிப்பதிலும் கூட நிபுணராகத்தான் இருக்கிறார்!

பெங்களூர், என்.ஆர். ராஜா.

லால் அவர்களின் அனுபவங்கள் விறு விறுப்பாக அமைந்தது. மேஜிக் உலகில் சஞ்சரித்தோம். அவருடைய ஆசையாகிய தாஜ் மஹாலை மறைப்பது, ஹௌரா பாலத்தை மறைப்பது நிறைவேற வாழ்த்துக்கள்.

கோவை, எம்.எஸ்.பி. காசி விஸ்வநாதன்.

# குறைந்த செலவில் டயாலிசிஸ்!

பெரிய நகரங்களில் மட்டுமல்லாமல், கிராமப்புறங்களிலும், சிறு நகரங்களிலும், சிறுநீரகங்கள் பழுதாகி இயங்காமல் போய், அதனாலேயே மரணம் அடையும் நோயாளி களைக் காக்கவும் –

மலேரியா, லெப்டோஸ்பிரோசிஸ், டயரியா, டீஹைட்ரேஷன் அல்லது நோயாளிகளுக்குக் கொடுக்கப்படும் தீவிர மருந்துகளால் சிறுநீரக இயக்கம் பாதிக்கப் பட்டவர்களுக்கு உதவவும் –

திடீரென்று சிறுநீரகங்களுக்குப் பாயும் இரத்தம் தடைப்பட்டுத் தவிக்கும் நோயாளி களுக்குக் கைகொடுக்கவும் –

இன்டென்சிவ் கேர் யூனிட்டி (ஐசியு)ல், கடுமையான இதய நோயாளிகளுக்குப் பயன் படவும் –

ஒரு புதிய டயாலிஸிஸ் இயந்திரத்தைக் கண்டுபிடித்திருக்கிறார், விஜயா ஹெல்த் சென்டரைச் சேர்ந்த டாக்டர் ரவிச்சந்திரன்.

● வழக்கமான டயாலிஸிஸ் இயந்திரம் மாதிரிதானா இதுவும், டாக்டர்?



• டாக்டர் ரவிச்சந்திரன்



• இன்ஜினியர் ராஜன்

இன்ஃபெக்ஷன் காரணமாகவோ, இதயத்திலிருந்து பாயும் இரத்த ஓட்டம் திடீரென்று தடைப்பட்ட காரணமாகவோ இயங்க முடியாத நிலையில் இருக்கும் சிறுநீரகங்களுக்குச் சிகிச்சை பெற்று வரும் நோயாளிகள் ஏராளமானோர், ஐசியுவில் இருப்பார்கள். இவர்களுக்குக் குறைவான இரத்த அழுத்தம் (லோ பிபி) இருக்கும். இவர்களுக்கு டயாலிஸிஸ் செய்யும் போது, வழக்கமான முறைப்படி, சாதாரணமாக நிமிடத்துக்கு 200 முதல் 300 மில்லி வரை இரத்தத்தை அவர்களிடமிருந்து பம்ப் செய்து பெற முடியாது. அப்படிச் செய்தால் அவர்களது பி.பி. உயர்ந்து போய், ப்ளீடிங் உண்டாகி,

●● அல்ல. சாதாரண டயாலிஸிஸ் இயந்திரத்திலிருந்து வேறுபட்டது. டயாலிஸிஸ் செய்து கொள்ள வேண்டிய நிலையில் இருப்பவர்கள் இரண்டு வகை :

மாற்று சிறுநீரகம் பொருத்தப்படுமுன், வாரம் ஒரு தடவையோ, இரண்டு தடவையோ மருத்துவமனைக்கு வந்து டயாலிஸிஸ் செய்து கொள்ளும் க்ரானிக் கிட்னி ஃபெய்லியர் பேஷன்ட்டுகள்.




• புதிய டயாலிசிஸ் இயந்திரம்

மரணம் நேர்ந்து விடும்.

இந்த இயந்திரம், நோயாளியிடமிருந்து இரத்தத்தை வெகு மெதுவாக பம்ப் செய்து (நிமிடத்துக்கு 50 எம்.எல்.) வெளிக்கொண்டு வரும். வேகத்தை அட்ஜஸ்ட் செய்து கொள்ளலாம். ஐசியுவில் இருந்தபடியே, தொடர்ந்து ஆறு - ஏழு நாட்களுக்கு டயாலிஸிஸ் செய்து கொள்ளலாம். அப்போது, பழுதான சிறுநீரகம் பழைய நிலைக்குத் திரும்பி விடும்.

இப்படி ஓர் இயந்திரம் இருப்பதே பல டாக்டர்களுக்குத் தெரிவதில்லை. அத்துடன், முற்றிலும் பழுதான சிறுநீரக நிலை (க்ரானி)க்கும், முன் சொன்ன காரணங்களால் தாற்காலிகமாக இயக்கம் நின்று போய்விட்ட சிறுநீரக நிலை (அக்யூட்)க்கும் உள்ள வித்தியாசத்தைப் புரிந்து கொள்வதில், மக்களிடையே குழப்பமும் இருக்கிறது.

ஆனால், இப்படி ஓர் இயந்திரம் சில பெரிய மருத்துவமனைகளில் மட்டுமே அயல்நாட்டிலிருந்து தருவிக்கப்பட்டு, உபயோகத்தில் இருக்கிறது. அதற்கு ஆகும் செலவும் அதிகம்.

● நீங்கள் கண்டுபிடித்திருக்கும் இயந்திரம்?

●● *15 முதல் 20* கிலோ எடைதான். இம்போர்ட்டட் இயந்திரம் போல 25 கிலோ இல்லை. போர்ட்டபிள். எங்கே வேண்டுமானாலும் தூக்கிக் கொண்டு போகலாம். விலை அல்லது நோயாளிக்கு ஆகும் செலவு என்று பார்த்தாலும், அதைவிட ஐந்தில் ஒரு பங்குதான் ஆகிறது.

● சென்னையில் எந்த மருத்துவமனையிலாவது உங்கள் இயந்திரம் (விரா - 99) இருக்கிறதா?

●● அப்போலோ, விஜயா மருத்துவமனை, ராமச்சந்திரா, ரெயில்வே ஹாஸ்பிடலில் உள்ளன. ஐசியுவிலிருந்து நோயாளிகளை டயாலிஸிஸ் அறைக்கு அழைத்துக் கொண்டு போய் அலைக்கழிக்கும் பிரச்னையே இதில் இல்லை!

● வேறு என்ன கூடுதல் பயன்கள்?

●● இதில் இருவகை விசேஷ ஃபில்ட்டர்கள் இருக்கின்றன. விஷம் சாப்பிட்டு விட்டால், இரத்தத்திலிருந்து அதைப் பிரித்து எடுத்து, சுத்தம் செய்ய ஒரு ஃபில்ட்டர். அலர்ஜி நோய்கள் இருப்பின், இரத்தத்தைத் தனியே எடுக்க ஒரு ஃபில்ட்டர். இரண்டும் இருக்கின்றன.




இப்படி ஓர் இயந்திரம் கண்டுபிடிக்க என்ன காரணம்?

டாக்டர் ரவிச்சந்திரன் சொன்னார் :

"மூன்று வருடங்களுக்கு முன், சென்னை ஐஐடி மெகானிகல் இஞ்சினீயரிங் பேராசிரியர் டாக்டர் கிருஷ்ணகுமார், அவரது தகப்பனாரை எங்கள் மருத்துவமனையில் சேர்த்தார். அப்போது அவருக்குத் தொடர்ந்து டயாலிஸிஸ் தேவைப்பட்டது. இந்த மாதிரி கருவியை உபயோகிக்க நிறையச் செலவு ஆயிற்று. 'ஏன் இத்தனை செலவு?' என்று கேட்டார் டாக்டர் கிருஷ்ணகுமார். விளக்கினேன்.

"நாம் இத்தனை பேர் ஐஐடி இஞ்சினீயர்கள் இருக்கிறோம். மருத்துவர்களான நீங்கள் இருக்கிறீர்கள். இரண்டு பேர் மூளையையும் உபயோகித்து, நாமே இந்தக் கருவியை இங்கேயே உருவாக்கினால் என்ன?' என்று கேட்டார் கிருஷ்ணகுமார்.

"நான் என் தேவைகளைச் சொன்னேன். அவர் டிசைன் செய்து கொடுத்தார். கிண்டி இஞ்சினீயரிங் கல்லூரியில் பட்டம் பெற்ற பொறியாளர் ராஜன் இதை வடிவமைத்துக் கொடுத்தார்.

"சாதாரண டயாலிஸிஸ் இயந்திரத்துக்குத் தண்ணீர் தேவை. இதற்குத் தேவையே இல்லை. தண்ணீர் இல்லாத கிராமத்துக்குக் கூடத் தூக்கிக் கொண்டு போகலாம். இதை இயக்க டாக்டர் உதவியும் தேவை இல்லை. பயிற்சி பெற்ற டெக்னீஷியன் அல்லது நர்ஸ் போதும், ஏனென்றால் நெஃப்ராலஜி ஸ்பெஷலிஸ்ட் டாக்டர்கள் குறைவு. இந்தியாவில் 400 500 பேர்தான் இருக்கிறார்கள்.

"இதை சாதாரண டயாலிஸிஸ்காரர்களும் பயன்படுத்திக் கொள்ளலாம் - டயாலிஸிஸ் வசதி கிடைக்காதபட்சத்தில்.

"உலகிலேயே மிகப் பெரிய ஐ.சி.யு. (300

# பரவப் போகுது கேளிக்கை ஜுரம்!

விவசாயம், உணவு உற்பத்திக்கு ஒரு காலம், தொழில்முறைக் கல்விக்கு இன்னொரு காலகட்டம். தகவல் தொழில்நுட்பத்தின் பிடியில் கட்டுண்டிருக்கும் நடப்பு யுகம்... இவற்றை ஆராய்ந்ததன் அடிப்படையில் எதிர்காலம் என்ன யுகமாக அமையும் என்ற உறுதியான தீர்மானத்துக்கு வந்துள்ளது ஓர் அமெரிக்க விஞ்ஞானிகள் குழு.

- 2015 வரை தகவல் புரட்சி தொடரும்.
- அதன் பிறகு உடனே வரவிருக்கும் யுகம் பொழுதுபோக்கு யுகமாம்!
- அதன் பிறகு உயிரியல் விஞ்ஞானம் குறிப்பாக உயிர் உருவாக்கம் தொடர்பான ஜெனடிக்ஸ், க்ளோனிங் போன்றவை முக்கியத்துவம் பெறும்.
- அதனைத் தொடர்ந்து வரும் கால கட்டம் பெரும்பொருள்களுக்கானதாம் (குவான்டம் பிஸிக்ஸ் போன்றவை.)
- இதையும் தொடர்ந்து வெடிக்கப் போவது புதிய அணு ஆயுத யுகம்!
- அடுத்த மிலெனிய இறுதியில் விண்வெளி சாகசங்களுக்குத்தான் தனியான மரியாதை கிடைக்கும்.

தகவல் புரட்சி யுகத்தை – அதன் தாக்கங்களை அனுபவித்து விட்டோம். இனி நமது நேரடி அனுபவமாகப் போவது பொழுது போக்கு யுகம்தான்! அமெரிக்காதான் இந்த யுகத்தின் முன்னோடி நாடாக இருக்கும். அனைத்துலக அளவில் பார்த்தால் சுற்றுலாப் பயணிகளின் எண்ணிக்கை வாஷிங்டனில் மிக அதிகம். இந்தக் கும்பல் மெள்ள டிஸ்னி லேண்ட் நோக்கிச் சரிந்து கொண்டிருக்கிறதாம்.

இப்போதைக்கு அமெரிக்க அரசு விதிப்படி ஆண்டில் பத்து நாட்கள்தான் விடுமுறை. மாநிலத்துக்கு மாநிலம் போட்டி போட்டுக் கொண்டு இந்த எண்ணிக்கையை அதிகரித்து வருகிறதாம்.

இன்னும் பதினைந்து ஆண்டுகளில், அமெரிக்காவின் மொத்த வருமானத்தில் பாதியாவது பொழுதுபோக்கு அம்சங்கள் நோக்கித் திருப்பி விடப்படுமாம்!

அமெரிக்காவிலிருந்து உலகின் இதர பகுதிகளுக்கும் இந்த கேளிக்கை ஜுரம் பரவும் என்கிறார்கள் ஆய்வாளர்கள்.

— குல்லு

படுக்கைகள்!) உள்ள பிட்ஸ்பர்க் மருத்துவ மனையில், மிக மோசமான நிலையில் இருக்கும் 40 – 45 நோயாளிகளுக்குத் தேவையான அளவுக்கு இந்தக் கருவிகளை வைத்திருக்கிறார்கள். அதனால் ஒரே சமயத்தில் அத்தனை பேரையும் கவனிக்க அவர்களால் முடிகிறது. வெளிநாடுகளில் இந்த இயந்திரம் பத்து வருடங்களாக உபயோகத்தில் இருக்கிறது. நாம் இங்கே நான்கு – ஐந்து மாதங்களாகத்தான் பயன்படுத்தி வருகிறோம்.

"உயர் இரத்த அழுத்தக்காரர்களும், நீரிழிவு நோயாளிகளும் இரத்தத்தில் உள்ள அல்புமின் இருப்பு எவ்வளவு என்று பரிசோதித்துத் தெரிந்து கொண்டு விட்டால், அல்புமின் கூடுதலாக அதிகரித்திருக்கிறது என்று தெரிந்த உடனேயே சிறுநீரகத்தை அது பாதிக்கும் என்று எச்சரிக்கை அடைந்து விடலாம். சிறுநீரகம் பழுதாகாததால், அதைச் சரிசெய்து கொள்ள வாய்ப்பு இருக்கிறது. அதே போல, குழந்தைகளுக்குச் சிறுநீர் இன்ஃபெக்ஷன் வந்தால், உடனே குணமாக்க வேண்டும். ஏனென்றால் குழந்தைகளுக்கு வளரும் சிறுநீரகம் அல்லவா? சிறுநீர்த் தொற்று நோய்தான், சிறுநீரகக் கோளாறுகளுக்கே ஆரம்பம்."

"மருத்துவர்களும், ஐ.ஐ.டி. இஞ்சினியர்களும் இணைந்தால் இப்போது இறக்குமதி செய்யப்படும் எத்தனையோ மருத்துவக் கருவிகளை இங்கேயே நம்மால் உருவாக்க முடியும். இதய நோயாளிகளுக்கு உதவும் இதுபோன்ற அனலைசர் கருவி ஒன்றை, ராமச்சந்திரா மருத்துவமனையில் டாக்டர் பாலகிருஷ்ணன் ஐஐடி உதவியுடன் உருவாக்குவதில் முனைந்திருக்கிறார். வெளிநாடுகளில் பயோ இன்ஜினீயரிங் துறை பெரிதும் வளர்ச்சி அடைந்திருக்கிறது. இங்கேயும் அப்படிச் செய்தால், கோடிக் கணக்கிலும், லட்சக் கணக்கிலும் இறக்குமதி செய்து, அதற்காக நோயாளிகளிடம் அதிகக் கட்டணம் வசூலிக்கும் நிலைமையும் மாறும். இப்போது ஆவதில் ஐந்தில் ஒரு பங்கு செலவிலேயே நாம் நலம் பெற முடியும்!" என்கிறார் இன்ஜினீயர் ராஜன்.

செய்தியும், படங்களும் : **சாருகேசி**

ஸ்பேஸ் ட்ரெய்னிங் அகாடமியில் பெற்ற பயிற்சி ரஷ்ஷுவைக் கூர்மையாக்கியிருந்தது. இருந்தும் கோபக்ஸ் விஷயத்தைக் கவனத்தில் கொள்ளத் தவறி விட்டான். தன் பின்புறமிருந்து கோபக்ஸின் குரலைக் கேட்ட மாத்திரத்தில் வெலவெலத்துப் போனான். கோபக்ஸ் மெதுவாய் நகர்ந்து வந்து அவர்களுக்கு வலப்புறம் நின்றது.

"ரஷ்ஷு! அசைய வேண்டாம். சூர்யா உனக்கும்தான்."

கோபக்ஸின் கையில் லேசர் கன் இவனையே குறிபார்த்திருந்தது. திணறினான். அது தாட்சண்யமில்லாத இயந்திரம். எக்குத்தப்பாய் ஸ்விட்ச்சைத் தொட்டு விட்டால் அடுத்த நிமிஷம் இது தான் ரஷ்ஷுவின் சாம்பல் என்று பாக்கெட் பண்ணி விடலாம். யோசி... யோசி... ஏதாவது தந்திரம் செய்தாக வேண்டும்

# உயிர்களைத் தேடித் தேடி 17

அதுவும் சீக்கிரமாய்.

"வெய்ட்.... வெய்ட்... கோபக்ஸ்! என்னைக் கொல்லப் போகிறாயா?"

"நம் இருவருக்கும் அப்படித் தான் கட்டளை. ரகசியம் யார் மூலம் வெளி வந்தாலும் அவர்கள் அழிக்கப்பட வேண்டும். ரகசியத்தைத் தெரிந்து கொண்டவர்களையும் சேர்த்து. கடைசியில் நீ வீழ்ந்து விட்டாயா? பாசமா? உம்... நீ எழுதிக் காட்டினால் எனக்குத் தெரியாது என்று ஆடினீர்களா? என் சென்ஸார்கள் எவ்வளவு நுணுக்கமானவை? அரைமணி நேரமாய் உங்கள் பேச்சுக்கள் நின்று போய் நிசப்தமாயிருந்தால் யூகிக்கத் தெரியாதா? என் அனலைஸிங் நியுரான்கள் உடனே ரெட் சிக்னல் காட்டி விட்டது. நீ ரகசியங்களை சூர்யாவுக்கு எழுதிக் காட்டிக் கொண்டிருக்கிறாய் என்று."

சொல்லிவிட்டு கோபக்ஸ் கன்னின் முனை சரியாய் ரஷ்ஷுவின் மையப் பகுதியைக் குறிபார்க்க பிடித்துக் கொண்டு ஸ்விட்ச்சில் விரலை வைத்தது.

"கோபக்ஸ்... கோபக்ஸ்...! வெய்ட் உன்னிடம் சில கேள்விகள்" – அலறினான்.

அவனைப் பார்த்துக் கொண்டு நின்றது.

"என்னைக் கொல்வதெனத் தீர்மானித்து விட்டாயா?"

"செர்டன்லி" – சொல்லிவிட்டு கன்னை உறுதியாய்ப் பிடித்தது. சூர்யா பதைபதைத்தாள்.

"ஆல்ரைட்! ஒரு நிமிஷம். செவ்வாயில் யுரேனியம் எங்கே? எந்தப் பகுதியில் இருக்கிறது என்று பூமியில் உன் எஜமானன்கள் கேட்டால் எங்கே என்று சொல்லுவாய்?"

அது அசையாமல் நின்று கொண்டிருந்தது.

"6800 கிலோ மீட்டர் குறுக்களவுள்ள இந்தக் கிரகத்தில் மீண்டும் முதலிலிருந்து தேட ஆரம்பித்துக் கண்டுபிடிப்பாயா? என்றைக்கு? எனக்குக் கண்டுபிடிக்க முழுசாய் இரண்டு வருஷங்களாயிற்று. அது கூட அதிர்ஷ்டவசமாய் எனக்குத் தெரிய வந்தது. உனக்கும் அவ்வளவு நாட்கள் பிடிக்கும். அல்லது உன்னால் முடியாமல் கூடப்



போகலாம்.

"அதிர்ஷ்டம் எல்லா நேரங்களிலும் கைகொடுக்கும் என்று சொல்ல முடியாது. ஏனெனில் இக்கிரகம் முழுவதிலும் தேடியதில் ஒரே ஒரு இடத்தில் மட்டும்தான் யுரேனியத் திரட்சி உள்ளது. இப்போது யுரேனியம் இருக்குமிடம் தெரிந்த ஒரே ஒரு ஜீவராசி? அடியேன்தான். அந்த இடத்தின் வரைபடத்தை கம்ப்யூட்டரில் பதிந்து வைத்திருக்கிறேன் நான். ஆனால் என்னைக் கொன்றாலும் அதன் பாஸ்வேர்ட் வெளியே வராது. அந்த சங்கேத வார்த்தையில்லாமல் என்ன செய்வாய்? ஆகவே என்னைக் கொன்றால் திட்டமே முழுத் தோல்வி நம் அரசுக்கு. ஒருவேளை ரகசியமெல்லாம் தெரிந்து கொண்ட சூர்யாவைக் கொன்று விடலாம் என்று நீ தீர்மானித்தால், அதற்குள் என் லேசர் கன் உன்னை உருக்கி உலோகக் குழம்பாக்கி விடும். என் இடுப்புப் பக்கத்திலிருந்து நேராக உன்னையே குறிபார்த்துக் கொண்டிருக்கிறது. கவனித்துக் கொள் சகோதரா! எங்கள் இருவரையும் ஒரே நேரத்தில் உன்னால் அழிக்க முடியாது. அது கூடாது. யோசி."

கோபக்ஸ் அசையாமல் நின்று கொண்டிருந்தது.

'அட தம்பியா?' – சூர்யா அதிசயமாய்ப் பார்த்தான்.

"சாதாரண ரோபோ அல்ல நீ. ஓரளவுக்கு அனலைஸிங் தெரிந்த இனம். நன்றாய் யோசி. கேம் தியரியை அப்ளை பண்ணிப் பார். பாஸிபிலிட்டி புரியும்."

அது அசையாமல் நெடுநேரமாய் நின்று கொண்டிருந்தது. லேசர் கன் இன்னமும் ரஷ்ஷுவையே குறிபார்த்திருந்தது. அவன்

செய்யாறு தி. தா. நாராயணன்



இனி இதுவும் நடக்கும்!

## ரத்த தானத்துக்கு குட்பை!

கம்ப்யூட்டர் டிஸ்குகள், புல்லட் ப்ரூஃப் கவசங்கள் ஆகியன இன்று பள்ளிச் சிறுவர்கள் கூட அறிந்த விஷயங்கள். இவற்றை உருவாக்கும் முறையில் 'நியூட்ரான் ஸ்கேடரிங்' என்ற தொழில் நுட்பத்துக்கு முக்கிய பங்கு உண்டு.

(நியூட்ரான் ஸ்கேடரிங் என்பதன் அடிப்படை இதுதான் : ஒவ்வொரு அணுவிலும் நியூட்ரான், ப்ரோடான், எலக்ட்ரான் என்ற மூன்று பகுதிகளுண்டு. காந்த அலைகள் அணுவின் மீது செலுத்தப்படும்போது ஒவ்வொரு வகையான அணுவிலும் அமைந்துள்ள நியூட்ரானின் தன்மைக்கேற்ப அந்த அலை திருப்பி அனுப்பப்படுகிறது. இவ்வாறு வெளிப்படும் எதிரலையின் தன்மையைக் கொண்டு முக்கியமான முடிவுகளுக்கு வரலாம்)

இந்த நியூட்ரான் ஸ்கேடரிங் தொழில்நுட்பத்தின் துணையுடன் எதிர்காலத்தில் என்னென்ன நடக்கக்கூடும் பாருங்கள் :

- எந்த வகை ரத்தப் பிரிவினருக்கும் செலுத்தக்கூடிய செயற்கை ரத்தம் உருவாகி விடும்! (ரத்த தானம் கொடுக்கும் நல்லவர்கள் பற்றி நெஞ்சைப் பிழியும் சென்டிமென்ட் கதைகள் காலி!)
- இடுப்புப் பகுதி, முழங்கால் ஆகியவை செயற்கை முறையில் உருவாக்கப்பட்டு விடும். இவற்றுக்குத் தேய்மானம் என்பதே இராது. பொருத்திய செயற்கை உறுப்பு ஆயுட்காலத்துக்கு நீடிக்கும்! (ஊர் சுத்தினால் காலை உடைப்பேன் என்று பிள்ளைகளை மிரட்டினால் சிரிப்பார்கள்!)
- மிகவும் சக்தி படைத்த மின் இணைப்புகள் வழங்கப்படும். மின் அணு சாதனங்கள் இப்போதைக் காட்டிலும் பல மடங்கு வேகமாக இயங்கும். (வாழ்க்கையின் தலைதெறிக்கும் வேகத்துக்கு ஈடுகொடுக்க யாரேனும் ஸ்பெஷல் எனர்ஜி மாத்திரை கண்டுபிடித்தால் சரி!)
- காந்த தண்டவாளங்களின் மேல் ரயில்கள் கற்பனைக் கெட்டாத வேகத்தில் பறக்கும்! (செயினைப் பிடித்திழுத்து விட்டு கங்குவார்பட்டியில் இறங்கிக் கொள்ள முடியாது!)
- உடலுக்குள் சென்று, எந்தப் பகுதிக்கு அவசியமோ அதற்கு மட்டும் கிடைக்கும் வகையில் அளவாக வெளிப்பட்டு வேலையைக் காட்டும் மருந்துகள் தயாராகும். இவற்றால் பக்க விளைவுகள் என்ற பயங்கரம் தவிர்க்கப்படும். (ஆன்டிபயாடிக், ஆன்டி அலர்ஜி, ஆன்டாஸிட், வைட்டமின் என்று பிரிஸ்கிரிப்ஷன் தாளை டாக்டர்கள் நிரப்ப முடியாது!)

— ஜி.எஸ்.எஸ்.

அக்காவைப் பார்த்து நமுட்டுச் சிரிப்புடன் கண் அடித்தான். உயிர் பற்றிய கவலையேயின்றி.

''என்னையா க்னோஸ் பண்ணப் பார்த்தாய்? பேமானி, சோமாறி, கேப்மாறி, மொள்ளமாறி, முடிச்சவுக்கி, கஸ்மாலம்.''

''என்ன... என்ன சொல்கிறீர்கள் ரஷ்ஷு? என்ன பாஷை இது?''

''தமிழ்பா. தமிழ். உனக்கு யாரும் சொல்லித் தரவில்லை? த்சு... த்சு... ஒரு சோஷியல் இன்ஜஸ்டிஸ். சென்ற நூற்றாண்டு வரை பரவலாய்ப் பேசப்பட்டு வந்த கொச்சைத் தமிழ் இது. அதன் பாப்புலாரிட்டி காரணமாய்த் தூய தமிழ் சொற்கள் என்று அகராதியில் சேர்த்து விட்டார்கள். ஒருவேளை அகராதிக்கு போனதனாலே இவற்றைப் பயன்படுத்தறது குறைஞ்சிடுச்சு போல. இனி இவற்றைக் கவிதைகளில்தான் தேடிப் பார்க்கணும்.''

''சரி... சரி... இப்போது இனி என்ன செய்யலாம் என்று ஆலோசனை சொல்லுங்கள்.''

''அப்படிப் போடு! எவ்வளவு புத்திசாலியாக இருந்தாலும் நீ இயந்திரம். பாரேன், கேப்மாறி, மொள்ளமாறிக்கு அர்த்தம் தெரியல. நாலும் நாலும் எட்டு என்கின்ற லாஜிக்கைத் தாண்டி இன்னும் கொஞ்சம் யோசிப்பாய். அது கூட நாங்கள் ஊட்டிவிட்ட விஷய வரம்பிற்குள். அல்லது சுயமாய்ப் பார்த்துக் கற்றுக் கொண்ட வரம்பிற்குள். பிரச்னைக்குத் தீர்வு என்னும் போது நாங்கள்– மனிதர்கள் வேண்டும். இரியேடிவிட்டி லுக்! நானோ, சூர்யாவோ அல்லது நீயோ அழிந்து போவதில் எனக்கு உடன்பாடில்லை. என்னாகும்? நாம் இரண்டரையாண்டுகள் பட்ட

கஷ்டங்கள் வீணாய்ப் போகும். கண்டுபிடித்த விஷயங்கள் நாட்டுக்குப் பயன்படாமல் போய் விடும். முடிந்தவரை நாட்டிற்காக உழைக்க வேண்டும். அதுதான் என் கொள்கை. யோசித்துப் பார். யுரேனியம் 235 விஷயம், செவ்வாயில் உயிரினம் பற்றிய கண்டுபிடிப்பு இவை எத்தனை பெரிய சாதனைகள்? எங்க அப்பா, தலைவர், அளவற்ற விஞ்ஞானிகள், கோடி கோடியாய் மக்கள் வெள்ளம். எல்லோரும் நம்மைப் பார்த்தவுடன் எப்படி மகிழ்ச்சியில் குதிப்பார்கள்? ஆஹா... என்னால் இப்பொழுதே கற்பனை செய்து பார்க்க முடிகிறது. என் யோசனை இதுதான் கோபக்ஸ்! பூமிக்குத் திரும்புவோம். நடந்தவற்றை விளக்கமாகச் சொல்வோம். அப்புறம் தலைவர் என்ன தண்டனை கொடுத்தாலும் ஏற்றுக் கொள்கிறோம்."

"ஓ.கே!"

ஸ்பேஸ் ஈகிள் கிளம்பியது. பூமியிலிருந்து கிளம்பியதைப் போன்று அத்தனை வேகமில்லை. அத்தனை வெப்பம். அத்தனை பயங்கரமான கிடுகிடுக்க வைக்கும் வெடியோசை? எல்லாமே சற்று குறைவு. எஸ்கேப்பிங் வெலாசிட் வினாடிக்கு 6.8 கிலோ மீட்டர்.

சூர்யாவும் ரஷ்ஷுவும் செவ்வாய் கிரகத்துக்கு கடைசி வணக்கம் சொன்னார்கள். சூர்யா வளர்த்து விட்ட பழக் கன்றுகளும், சில வேப்பங்கன்றுகளும் இங்கொன்றும் அங்கொன்றுமாய் இந்த இரண்டு வருடங்களில் தளதளவென்று நான்கு அடி உயரத்திற்கு மேல் வளர்ந்து காற்றில் அசைவது இவர்களுக்குக் கடைசி வணக்கம் சொல்வது போலிருந்தது. சூர்யா அவற்றைப் பார்த்துக் கொண்டேயிருந்தாள். அடுத்து இங்கே வருபவர்களுக்குச் சுவையான பழங்கள் கிடைக்கும்.

ஓ! மார்ஸ்! இரண்டு வருடங்கள் எங்களை ஏற்று அடைக்கலம் தந்தாய். எங்கள் பூமியிலிருந்து பார்க்க நெருப்புக் கோளமாய்ச் சிவந்து தெரிகிறாய். ஆனால் இங்கே வந்தால் என்ன குளிர்ச்சி? நன்றி! மீண்டும் மீண்டும் வருவோம். எங்கள் மனிதர்கள் என்றைக்கும் உனது நண்பர்கள். அதற்கு முத்தங்களைப் பறக்க விட்டார்கள். ராக்கெட் உயரே போகப் போக, ஒவ்வொன்றாய் பார்வையிலிருந்து மறைந்து கொண்டே வந்தது. அதன் மேடு பள்ளங்கள், குன்றுகள், மலைகள் எல்லாம் மறைந்து போய், இப்போது அது சிவந்த கோளமாய் மட்டும் தெரிய ஆரம்பித்தது.

"ரஷ்ஷு! சூர்யா! இப்போது நாம் ஸ்டேஷ

## மறக்க முடியுமா!



**1949-**
ராபின்சன் பூங்காவில்
தி.மு.க. தொடங்கப்பட்டது
ஒரு மழை மாதம்
அதற்குப் பிறகு
அண்ணா காட்டில்
அடைமழை

• • •

ஜமீன் போர்வைக்குள்
ஜாதிகள் கெக்கலிக்க...
செங்கொடியில் கருட்டப்பட்டன
கருகிய உடல்கள்

அடித்துத் துவைத்தபின்னும்
செங்கொடி
சாயம் போகவேயில்லை!

• • •

கோவையில் யார்
தீ வைத்தது?
பாபர் மசூதியிலிருந்து
தெறித்த செங்கல்
கோயம்புத்தூரில்
குண்டுகளாயினவா?

• • •

இந்த
சதைக் கொள்ளைக்கு
சாமியே சாட்சி!
இந்தக் கண்ணீர்க் காவியத்திற்கு
முற்றுப்புள்ளி வைத்தவர்
முத்துலெட்சுமி ரெட்டி.
முதன் முதலாய்
ஒரு மனுஷியைக் கும்பிட
கடவுள்
கைகூப்பியிருக்கலாம்.

• • •

தனிநீதிமன்றம் தீர்ப்பளித்த
ஹரிஹரனே வழக்கில்
ஆப்பசைத்த குரங்குகளாய்...
அய்யோ பாவம் பத்திரிகைகள்!

னரி ஆர்பிட்டில் வடதுருவத்திற்கு மேலே இருக்கிறோம். இப்போது ஹைட்ரஜன் பாம்ஜ விடுவிக்கப் போகிறேன்'' என்று சொல்லிவிட்டு ஒரு பட்டனைத் தட்டியது. அவ்வளவுதான். ராக்கெட்டில் லேசான நடுக்கம் மட்டுமே உணர முடிந்தது. குண்டு விடுபட்டு வடதுருவத்தில் போய் விழுந்ததோ, வெடித்ததோ எதையும் பார்க்க முடியவில்லை. அதற்குள் ராக்கெட் இறுதிச் சுற்றில் தென்துருவத்தின் பக்கம் வந்து விட்டது!

இன்னுமொரு ஹைட்ரஜன் குண்டு. அத்துடன் ஸ்பேஸ் ஈகிள் ஸ்டேஷனரி ஆர்பிட்டிலிருந்து விடுபட்டு தன் பயணத்தைத் தொடர்ந்தது. இப்போது பார்க்க சிவப்பு உருண்டையாய், செவ்வாய் புகை மூட்டமாய்த் தெரிந்தது. சலனமேயில்லாமல் அப்பப்பா... என்ன காற்று? யோசிக்க, இப்போது கூட ஜில்லென்று குளிர் கவ்வியது.

கோபக்ஸ் எதுவும் பேசவில்லை. பேசுவதை எப்போதோ நிறுத்தி விட்டது. திரும்பிப் போகும் திசையே எண்ணமாய் யோசித்து யோசித்து விண்கலனை செலுத்திக் கொண்டிருக்கிறது. சூர்யாவும், ரஷ்ஷாவும் இது எதைப் பற்றியும் சிந்தனையின்றி செவ்வாய் அனுபவங்களை, ரஷ்ஷா செத்துப் பிழைத்த வேதனைகளை ஆபத்தான நாட்களை, கோபக்ஸ் செய்த பணிவிடைகளை, ட்ரீட்மென்ட் கொடுத்த அதன் திறமைகளை எல்லாவற்றையும் ப்ளாஷ்பேக் கதைகளாய் பேசித் தீர்த்தார்கள்.

"கோபக்ஸ்! ரஷ்ஷா மயங்கிக் கிடந்த போது வைரஸ் இன்பெக்ஷன் என்றாயே அது பொய்யா? அல்லது உனக்கும் தெரியாதா?''

அது பதிலேதுவும் சொல்லாமல், எதையோ தூரப் பார்வை பார்த்துக் கொண்டிருந்தது.

"சீ! இது ஒரு ஜடம். எதற்கும் வாயைத் திறக்காது. இப்ப என்ன? எனக்குத்தான் ரகசியங்கள் தெரிந்து விட்டதே பேசுவதற்கு என்ன? எப்படியும் கீழே போனதும் நாங்கள் சாகப் போகிறோம். அதுவரை சுதந்தரமாய்ப் பேசுவோமே, வா கோபக்ஸ்!''

"நீங்கள் பேசிக் கொண்டிருங்கள். தொந்தரவு செய்யாதீர்கள். அது மீண்டும் தன் வேலையில் மூழ்கி விட்டது. சே! இதனுடன் பேசுவது வேஸ்ட்!'' என்று திரும்பிய போது பார்வையில் பட்டது. கோபக்ஸின் பக்கத்தில் டேபிளின் கீழ் சற்று மறைவான இடத்தில் ஹாலிவால் நட்சத்திரத்தின் பாதையைக் காட்டும் தெளிவான வரைபடம் விரித்து வைக்கப்பட்டிருந்தது. சூர்யாவுக்கு குப்பென வியர்க்கத் தொடங்கியது.

(தொடரும்)



## தயாரிப்பாளராகும் ரம்பா!

வழக்கமாகத் தமது அண்ணனோடு படப்பிடிப்புக்கு வரும் ரம்பா, 'சுதந்திரம்' படப்பிடிப்புக்கு அன்னையோடு வந்திருந்தார். காரணம் கேட்டபோது அண்ணன் வாசு, தமிழ், தெலுங்கு என இரண்டு மொழிகளிலும் சேர்த்து ஒரு படத்தை இயக்கப் போகிறாராம். அது தொடர்பான வேலைகளில் ஈடுபட்டிருப்பதால்தான் துணைக்கு வரவில்லையாம். அதுசரி, அந்தப் படத்தின் நாயகி யார் என்கிறீர்களா? நாயகி மட்டுமல்ல; தயாரிப்பாளரும் ரம்பாதான்! தயாரிப்பாளர் ரம்பா செக் விஷயத்தில் உஷாராயிருப்பார் என்று நம்பலாம்!

– ஆர்.எஸ்.ர.

சுவர் பானுவின் தலையும் உடலும் மகாவிஷ்ணுவின் சக்கரத்தினால் இருகூறாகிப் பூமியில் விழுந்தன என்று போன வாரம் பார்த்தோம். ராகுவை பைடீனவன் என்பவர் வளர்த்தார். கேதுவை மினி என்ற பிராம்மண பண்டிதர் தன் வீட்டில் வைத்துக் கொண்டு ஆதரித்தார். கேதுவின் சரீரமும் பாம்புத் தலையுடன் கூடிய பெரிய நாகமாக வளர்ந்தது. பண்டிதரால் வளர்க்கப்பட்டதால் கல்வி கேள்விகளில் தேர்ச்சியடைந்தார். பின்னர் புலன்களை அடக்கித் தவம் செய்து கிரஹ பதவியடைந்தார்.

கேது கிரஹம் சகிப்புத் தன்மையைத் தருமாம். வேறு என்ன வேண்டும்? பொழுது விடிந்து பொழுது போகும் வரையில் எத்தனை விஷயங்களை சகித்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் ஒருவரையொருவர் படுத்திக் கொள்வதிலிருந்து அன்றாடம் கேட்கும் செய்திகள் வரை எத்தனை வேதனைகளை சகித்துக் கொள்ள வேண்டியிருக்கிறது?



• கேது பகவான்

# நலம் தரும்

ராகுவும் கேதுவும் அம்ருதத்தினால் பிறந்தவர்கள். அவர்களுக்கு மறு பிறவி தானே! ராகு ஆயுளை அதிகரிப்பார். அறிவையும் ஞானத்தையும் தருவார்.

ராகுவும் கேதுவும் சூரிய சந்திரர்களைப் பிடித்து விழுங்கினாலும் மறுபடியும் ஒளி வீசச் செய்கிறார்கள். எப்போதும் இருளே இருக்காது. மீண்டும் ஒளி வரும். எவ்வளவு சிரமங்கள் வந்தாலும், நமது புகழும், செல்வமும் குன்றினாலும் மீண்டும் புது வாழ்வு மலரும் என்ற தைரியத்தை, நம்பிக்கையை ஊட்டும் உருவகமாகவே கிரஹணங்களைக் கொள்ள வேண்டும். கேது பகவான் ஞானம் தரும் குருவைக் காட்டித் தருவார்.

ஒரு சித்திரம் எழுதினாலும் அதற்கு உயிர் தருவாராம் கேது பகவான். இவர் மிகவும் சூடானவர். இவருடைய பார்வையே ஜ்வாலை மாதிரி இருக்குமாம். கேதுவின் பார்வை என்ற அக்னிக் கொழுந்தும் சூரியனுடைய கிரணமும் சேர்ந்து கற்களில் பட்டால் அது வைடூரிய மணியாகிவிடும் என்று ஒரு புத்தகத்தில் படித்தேன். இது நாகரத்தினம் போன்ற கதை என்றாலும் சுவாரஸ்யமான கற்பனை.

கேதுவுக்குப் ப்ரியமான தானியம் கொள்ளு. கொள்ளு உஷ்ணமான பொருள். வேலை செய்து களைத்துப் போய் கொள்ளு ரசம் வைத்துச் சாப்பிடச் சொல்வார்கள். கேதுவும் வலிகளைப் போக்குவார். கொள்ளு தானம் செய்தால் நோய்கள் நீங்கும்.

கேதுவுக்கு மத்யம தேசமாம். (மத்யப்பிரதேசமாக இருக்குமோ?) இவர் விரும்புவது கதம்ப மலர் மாலை. (செவ்வல்லி என்றும் சொல்கிறார்கள்.)

கேது பகவானின் சிறப்புத்தலம் என்று



அடியார்கள் போற்றும் கீழப்பெரும்பள்ளத்துக்கே போகலாம். திருவெண்காட்டிலிருந்து சுமார் மூன்று கி.மீ. தூரத்தில் இருக்கிறது. திருவெண்காட்டில் சற்று நேரமாகி விட்ட படியால் கீழப்பெரும்பள்ளம் போன போது உச்சியாகிவிட்டது.

கோவிலில் கேதுவின் சந்நிதிக்குப் பல வண்ணத் துணிகளால் திரை போட்டு மூடியிருந்தது. அர்ச்சகர்கள் வீட்டுக்குப் போய் விட்டார்கள். சரி! காத்திருக்கலாம் என்று கோவில் வாசலில் இருந்த போது ஒரு பெரிய பேருந்து வந்து நின்று பலர் இறங்கினார்கள்.

"பஸ் வந்திருக்கில்ல? வந்துடுவாங்க" என்றார் ஒருவர்.

கோவிலுக்குள்ளே சிலர் இருந்தார்கள். வெள்

# நாயகன்!

ளெருக்குப் பிள்ளையார் படங்கள், இத்யாதி இருந்தன. பார்த்துக்கொண்டிருக்கும்போதே அடியார்கள் வந்து சந்நிதியில் குழுமி விட்டார்கள். அர்ச்சகர் வந்தார். முப்பது பேரிடமும் தட்டுக்களை வாங்கிக்கொண்டார். ஒவ்வொருவருடைய கோத்திரம், நக்ஷத்திரம் பெயர் சொல்லச் சொல்லிப் பொறுமையாகக் கேட்டுக் கொண்டார். சில அன்பர்கள் இருபது பெயர்கள் நக்ஷத்திரங்களைச் சொன்னார்கள்.

திரையை விலக்கினார் அர்ச்சகர். கேது பகவான் பிரத்யக்ஷமானார். ஐந்து தலை நாகமும் அதன் கீழ் அழகான முகமும் கூப்பிய கரங்களுமாகக் காட்சியளித்தார். பல சித்திர விசித்திர ஆடை பின்புலத்தில் தெரிந்தது. மாலைகளும் அலங்காரமுமாக சுந்தரனாகத்தான் என் கண்களுக்குத் தோன்றினார் கேது பகவான். நாக நாதரான சிவ பெருமானையும் சௌந்தர நாயகி என்ற பெயருடைய அம்பிகையையும் தொழுகிறவர் அழகனாகத்தானே இருக்க முடியும்?

**ஆனந்தி**

"ரௌத்ரம் ரௌத்ராத்மகம்
கோரம்
தம் கேதும் ப்ரணமாம்யஹம்"

என்று நவக்ரஹ ஸ்தோத்திரத்தைப் படித்ததால் கோரமான உருவத்தை எதிர்பார்த்த எனக்கு கேது பகவான் மகிழ்ச்சியளித்தார். பயமே ஏற்படவில்லை.

கறுத்த நிறம், ஒரு கையில் கதையும், இன்னொரு கை அபயஹஸ்தமாகவும் இருக்கும் என்று புத்தகம் சொல்கிறது. பத்துக் குதிரைகள் பூட்டிய ரதத்தில் வருபவர். கொடி முக்கோண வடிவம். கோபக்காரர். அதர்மத்தைப் பொறுக்க மாட்டார். முருகனுக்குக் கவரி வீசுபவர். ரௌத்ர கேது, தூம்ரகேது, லோக கேது, (ஸ்வர்பானு, செம்பாம்பு, ஞான காரகன், மோக்ஷகாரகன்) புகை நிறமேனியன், காலன், கழுகின் மேல் ஊர்பவன், என்றெல்லாம் பெயர்கள் உடையவர். கேதுவின் மனைவியின் பெயர் சித்ரலேகா. எட்டுப் பிள்ளைகள் என்கிறார்கள்.

**கே**துவின் தலம் ஸ்ரீ காளஹஸ்தி என்றும் சொல்வதுண்டு. காளன் என்ற பாம்பு வழிபட்ட தலம். சீகாளத்தி என்ற தமிழ்ப் பெயருடைய தலம். பாம்பு வழிபட்டதால் இதைக் கேதுத் தலம் என்று நம்பி வந்திருக்கலாம். ராகு, கேது இருவருமே காளத்தி நாதரைப் பூஜித்ததாக நவக்ரஹ க்ஷேத்திர புராணம் என்ற புத்தகத்தில் படித்தேன்.

**கீ**ழ்ப்பெரும் பள்ளம் என்ற தலத்தின் வரலாற்றைப் பார்ப்போம். இருப்பாற்கடலைக் கடைந்து அமிர்தம் எடுத்தார்களே, அப்போது வாசுகி மந்தர மலையைக் கட்டி இழுக்கும் கயிறாக இருக்க முன் வந்தார். கடைந்த பிறகு மோகினி அமுதம் பரிமாறினாள். எல்லாரும் வாசுகியை அம்போ என்று விட்டு விட்டார்கள்! மயங்கிக் கிடந்தது வாசுகி. விஷத்தை வேறு கக்கி விட்

டதே. தேவர்கள் அமுதமுண்டு அசுரர்களுக்குக் கிடைக்காமல் போனதுதான் நமக்குத் தெரியுமே. அசுரர்களுக்கு ஏமாற்றத்தினால் ஒரே கோபம். மயங்கிக் கிடந்த வாசுகியின் மீது தங்கள் ஆத்திரத்தைக் காட்டினார்கள். எல்லாருமாக அடித்துத் தூக்கி எறிந்தார்கள். வாசுகி சகிக்க முடியாத வேதனையுடன் ஒரு மூங்கில் காட்டில் வந்து விழுந்தது. மனம் வேறு ரொம்ப வேதனைப் பட்டது. "ஐயோ! சர்வேசுவரனான சிவ பெருமான் என் விஷத்தை உண்ணும் படியாகி விட்டதே. நான் எவ்வளவு பாவம் செய்து விட்டேன்" என்று துக்கப்பட்டது. ஈசுவரனை நினைத்துக் கடும் தவம் செய்து மன்னிப்புக் கேட்டுக்கொண்டது. கருணைக் கடலான பகவான், வாசுகியின் உடல் வலி, மன வலி இரண்டையும் போக்கினார். "நீ தேவர்களுக்கு உதவிதான் செய்தாய். ஒரு குற்றமும் செய்யவில்லை" என்று ஆறுதல் அளித்தார். அதனால் நாகநாதர் என்ற பெயர் பெற்றார் ஈசன். அந்த மூங்கில் காட்டிலேயே தங்கி பக்தர்களைக் காத்தார். கீழப்பெரும்பள்ளத்தில் ஸ்தல விருட்சம் மூங்கிலாகத்தானே இருக்க முடியும்!

நாகநாதப் பெருமான், வாசுகியின் துயரம் தீர்த்தவர். கேதுவுக்கு கிரஹபதவியளித்தவர். அவரை வணங்கி தடங்கண் நாச்சியார் என்ற அழகிய பெயருடைய சௌந்தர நாயகியையும் வணங்கி விட்டுக் கிளம்புகிறோம்.

"ஜ்யோதிஷம்" என்ற வட மொழிச் சொல்லுக்கு "ஒளி பற்றிய சாத்திரம்" என்று பொருள். வானவீதியில் ஒளி வீசும் கிரஹங்கள் நம்மைப் பாதிக்கின்றன.

சூரியன் நம்மை எல்லாவிதத்திலும் பாதிக்கிறது. சந்திரன் கடலைப் பொங்கச் செய்வது அனைவரும் அறிந்த விஷயம். நம்மைத் தாங்கும் இந்தப் புவியும் ஒரு கிரஹம்தான்.

மற்ற கிரஹங்களும் மனித வாழ்க்கையுடன் தொடர்புடையவை என்று நம் நாட்டில் வாழ்ந்த முனிவர்களும் ரிஷிகளும் கூறினார்கள்.

அவர்களே பகவானிடம் பக்திகொண்டவர்களை எதுவுமே பாதிக்காது என்றும் சொல்லியிருக்கிறார்கள்.

அதனால்தான் ஒவ்வொரு நவக்ரஹ ஸ்தலத்திலும் அந்த கிரஹத்துக்குப் பதவி

# கதம்ப உணர்ச்சிகளில் கடந்த நூற்றாண்டு...

**ஒரு சூழ்ச்சி :** வங்காளம் இன்று என்ன நினைக்கிறதோ அதை இந்தியா நினைக்கும் என்பது அப்போதைய யதார்த்தம். இந்தியாவின் மூளையாகவும், முதுகெலும்பாகவும் இருந்த வங்காளத்தை பலவீனமடையச் செய்தால், சுதந்தரப் போராட்டத்தையே கலகலக்கச் செய்து விடலாம் என்று சூழ்ச்சி செய்து, வங்காளத்தை இரண்டாகப் பிரித்தார் கர்சன் பிரபு. ஆனால், பிரிட்டிஷாரின் கணக்குப் பிசகி, போராட்டம், முன்னை விட வலுத்தது.



**ஒரு முயற்சி :** பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்க்க ஒரு ஆங்கிலேயரே துவக்கிய முயற்சிதான் இந்திய தேசிய காங்கிரஸ். மக்கள் பேராதரவுடன் மாபெரும் மக்கள் இயக்கமாக மலர்ந்து, வெள்ளையரை வெளியேற்றியது அந்த முயற்சியின் வளர்ச்சியே!

**ஒரு தளர்ச்சி :** பாரம்பரியமிக்க காங்கிரஸ் கட்சி, இன்று தேய்ந்து கட்டெறும்பாகி விட்டது மட்டுமின்றி, வாரிசு அரசியலை நம்பி மேலும் வீணாகிக் கொண்டிருக்கிறது.

**ஒரு சாதனை :** தனிமனித வாழ்க்கையில் ஐம்பதாண்டுகள் என்பது நீண்ட காலம். ஆனால் ஒரு தேசத்துக்கு குறுகிய காலம்தான்! இதற்குள்ளே பெருந்தொழிற்சாலைகள், பசுமைப் புரட்சி, வெண்மைப் புரட்சி, தகவல் தொழில்நுட்பத் துறையில் வளர்ச்சி என்று சாதனைகளுக்கும் குறைவில்லை.

**ஒரு வேதனை :** நூறு கோடி ஜனங்கள் உள்ள இந்த நாடு, ஒலிம்பிக்கில் கலந்து கொண்டு கணிசமாகத் தங்கம் வெல்லும் அளவுக்கு - விளையாட்டுத் துறையில் கவனம் செலுத்தாதது வெட்கக்கேடான விஷயம்!

**ஒரு நெகிழ்ச்சி :** ஐரோப்பாவில் ஒரு மூலையில் பிறந்து, பாரதத் தாயின் அன்பு மகளாகி, இந்த மண்ணிலே அரும் பணியாற்றி, இங்கேயே இன்னுயிரை விட்ட அன்னை தெரசா. இந்தியாவும் (பாரத ரத்னா) உலகமும் (நோபல் பரிசு) அவரை உரிய முறையில் கௌரவித்ததில் மகிழ்ச்சி.

**— ரபி பெர்னார்ட்**

யளித்து உய்வித்த இறைவன் இறைவியும் கொலுவிருக்கிறார்கள். அவர்களையும் வணங்குகிறோம்.

*நாளென் செயும் வினைதான் என்செயும்*
*- எனை நாடி வந்த*
*கோளென் செயும் கொடுங் கூற்றென்*
*செயும்*
*குமரேசரிரு தாளும் சிலம்பும்*
*சதங்கையும் ஷண்முகமும் பன்னிரு*
*தோளும் எனக்கு முன்னே வந்து*
*தோன்றிடினே!*

என்று முருகப் பெருமானைச் சரணடைந்த பக்தர்கள் கூறுகிறார்கள்.

வேதாந்த தேசிகர் ராமபிரானின் பாதுகைகளில் எல்லாக் கிரஹங்களும் இருப்பதாகச் சொல்கிறார்.

தியாகராஜ ஸ்வாமியோ, ''கிரஹ பலமேமி ரா'' என்று பாடுகிறார். ராமனைச் சரண் அடைந்தவர்களைக் கிரஹ சஞ்சாரங்கள் என்ன செய்து விட முடியும்?

**(அடுத்து வரும் இதழ்களில் சப்தவிடங்க ஸ்தலங்கள்)**



மேஷம் : (அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)

சாதகமான நிலைல கிரகங்கள் உலவறதால உங்க சஞ்சலங்கள் விலகி, வெளிச்சம் பிறக்கற நேரம் இது. இதுவரைக்கும் தொழில்ல போட்டியா, பொறாமையா இருந்தவங்களெல்லாம் ரூட்டை மாத்திக்கிட்டுப் போயிடுவாங்க. புகழும் பாராட்டும் வந்து குவியப் போவுது. கடிதங்கள் மூலம் சில நல்ல செய்திகளை இப்ப எதிர்பார்க்கலாம். சட்டம், காவல் துறையினருக்குப் புரமோஷனோ, சம்பள உயர்வோ உறுதி. உடல்நலன்ல மட்டும் எச்சரிக்கையா இருங்க.



கும்பராசிக் காரரான தேவகௌடா கோயில் திருவிழாக்கள், உற்சவங்களில் கலந்துக்குவாராம்!



ரிஷபம் : (கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)

காரியத் தடங்கல்களால அவஸ்தைப்படுவீங்க. எதைத் தொட்டாலும் எதிர்ப்பு, தடைன்னு ரொம்பவே பிரச்சனைகளை சந்திப்பீங்க. புதிய திட்டங்களைத் தள்ளிப் போடறது நல்லது. அலைச்சல், தூக்க மின்மையால சில கோளாறுகள் ஏற்படலாம். தொண்டை வலி, கண் எரிச்சல்னு கொஞ்சம் மருத்துவச் செலவு வரைக்கும் இழுத்துட்டுப் போகும். கணவன் – மனைவி உறவுல சில மனஸ்தாபங்கள் ஏற்பட்டு விலகும்.



மிதுனம் : (மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் வரை)

தெய்வ பலம் கூடியிருக்கு. உங்க காரியங்கள் எல்லாம் சூப்பர்ஸானிக் வேகத்துல நடக்கும். எதிரிகள் பணாலாயிடுவாங்க. வெளிநாட்டு வேலை வாய்ப்புகள் ஏற்படும். நல்லவர்கள் தொடர்பால சில லாபங்கள் உறுதி. உல்லாசப் பயணம், கேளிக்கைன்னு என்ஜாய் பண்ணுவீங்க. கையிருப்பும் கனமாவே இருக்கும். சிலருக்கு ஃபிளாட், பர்ஸனல் கம்ப்யூட்டர் மாதிரி ஏதாவது வாங்கற யோகம் இருக்கும்.



கடகம் : (புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)

அரசுப் பணியாளர்களுக்கு எதிர்பாராத வருமான அபிவிருத்தி இருக்கு. இந்த வாரம் சில முக்கியமான முடிவுகள் எடுத்து செயல்படுத்தறவங்களுக்கு வெற்றி உறுதி. உங்க நீண்ட நாள் கனவு ஒண்ணு நனவாகப் போகுது. அது, வெளிநாடு சான்ஸாகவோ, ப்ரமோஷனாகவோ இருக்கலாம்.

சட்டம், காவல் துறைல இருக்கற பெண்களுக்குச் சவாலான காரியங்கள் காத்திருக்கு. இளைஞர்களுக்குத் திருமண யோகம் கூடி வரும். கலைஞர்களுக்குப் பொற்காலம்.



சிம்மம் : (மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)

உங்க புத்திசாலித்தனம் வெளிப்படும் வாரம். கடினமான காரியங்களைக் கூட சுலபமா முடிப்பீங்க. வீட்டுலயும் ஆபீஸ்லேயும் உங்க சொல்லுக்கு நல்ல மதிப்பு

# நடக்குமென்பார்!

உண்டாகும்.

வர்த்தகத் தொடர்புகள் லாபகரமா அமையும். எண்ணெய் வியாபாரிகளுக்கு அமோகமான பண வரவு உறுதி. கலைஞர்களும் எழுத்தாளர்களும் புதிய வாய்ப்புகள், பரிசுகள் பெறுவார்கள். வீட்டுல ஏதாவது விசேஷ காரியத்தை முன்னிட்டு கொஞ்சம் கையிருப்பு கரையும்.



கன்னி : (உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)

இசகுபிசகா காரியம் செய்துட்டு மாட்டிக்கற அவஸ்தை ஏற்படும். எதையும் அவசரப்படாம ஆற அமர யோசிச்சி செயல்படறது நல்லது. இப்ப உங்க நண்பர்களை எந்த விஷயத்திலும் அதிகம் நம்ப வேணாம். முக்கியப் பொறுப்புகளிலேருந்து நழுவறது, பின்னால சில பிரச்னைகளை உண்டுபண்ணலாம். மகான்கள் தரிசனம் சிலருக்குக் கிடைக்கும். தெய்வப் பணிகளில் நாட்டமேற்படும். செலவு நிறைய ஆகும்.

# நடக்கும்!

அக்னி சர்மா பக்கம்

டிசம்பர் 29 முதல் ஜனவரி 4 வரை



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

போட்டி, பந்தயங்களில் வெற்றி உறுதி. ஆனா சிறு விபத்துகள் நேரலாம், கவனம். அரசு ஊழியர்கள், கம்ப்யூட்டர் விஞ்ஞானிகள், இரும்பு வியாபாரிகளுக்கு வளமான நேரம் இது. பணம் தாராளமா வரும். நல்லா செலவும் செய்வீங்க. உல்லாச உலாக்கள் சிலருக்கு சித்திக்கும். டீவி சானல்களுக்கு அப்ளை பண்ணியிருக்கற காலேஜ் பெண்களுக்கு வாய்ப்பு ஓர்க்-அவுட் ஆகும். பொதுவாகவே மீடியாகாரங்களுக்கு விசேஷமான பலன்கள் கைகூடும் வாரம் இது.



**விருச்சிகம்:** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

அதிக உழைப்பு, அலைச்சலைத் தவிர்க்க முடியாது. ஆனா, உங்க சம்பந்தப் பட்ட எந்தக் காரியமும் தடங்கலே இல்லாம நடக்கும். குறிப்பா கவிஞர்களும் எழுத்தாளர் களும் புகழேணியின் உச்சியில ஏறப் போற வாரம் இது. இரும்பு வியாபாரிகள், விளையாட்டுத் துறையினருக்கும் ஓஹோதான். வீட்டுக்குத் தேவையான பல பொருள்கள் வாங்குவீங்க. லக்ஸரி ஐட்டம்ஸ் வாங்கும் போது கொஞ்சம் கவனமா இருங்க. எலக்ட்ரானிக்ஸ் சம்பந்தப்பட்ட வகையில எதுவும் முதலீடு செய்யாம இருக்கறது நல்லது.



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

அவசரப்பட்டு எதையும் செய்துட்டு பின்னால அவஸ்தைப்படுவீங்க. பேச்சுல பதற்றம்; அதனால கெட்ட பேர் ஏற்படும். புதிய மனிதர்களிடம் எச்சரிக்கையா பழகுங்க. உணவு விஷயத்துலயும் கவனம். வயிறு உபாதைகள் ஏற்பட வாய்ப்பு இருக்கு. செலவு அதிகமா இருக்கும். சிலருக்கு பிக்பாக்கெட் ராசியும் கூடி வர்றதால டபுள் எச்சரிக்கை அவசியம். இளைஞர்களுக்கு வெளிநாட்டு வேலை வாய்ப்புகள் ஏற்படலாம். கம்ப்யூட்டர் துறையினருக்கும் இது ஆதாயமான காலகட்டம்.



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

தடையில்லாத வளர்ச்சி உறுதி. போட்டிகளில் வெற்றி வாய்ப்பு ஏற்படும். தொழில் முன்னேற்றம், வியாபார வளர்ச்சின்னு எல்லாமே ஜெயம்தான். எதிர்பாராத பண வரவு சிலருக்கு இருக்கும். மனைவி வழில சில பூர்வீக சொத்துகள் கிடைக்கலாம். வழக்குகள் சாதகமா தீர்ப்பாகும். இளைஞர்களுக்குக் காதல் அனுபவம் சூப்பரா அமையும். வேலைக்குப் போகும் பெண்களுக்கு மேலிட நெருக்கடியால பணிச்சுமை அதிகமா இருக்கும்.



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

ஆன்மிகத்துல நாட்டம் உள்ளவங்களுக்கு இந்த வாரம் ரொம்ப மகிழ்ச்சிகரமா அமையும். திருவிழாக்கள், உற்சவங்கள்ல கலந்துப்பீங்க. ஆபீஸ்ல ப்ரமோஷன் சிலருக்குக் கிடைக்கும். வழக்குகள் சாதகமா தீர்ப்பாகும். எழுத்தாளர்களுக்கு. பல புதிய வாய்ப்புகளும் கூடுதல் வருமானமும் உறுதி. சினிமாகாரங்களுக்குக் கொஞ்சம் கஷ்டமான காலகட்டம். வாய்ப்புகள் கைநழுவி, கவலைப்படுத்தும். வாகன யோகம் சிலருக்கு உண்டு. ஆனா பயணத்துல எச்சரிக்கை அவசியம்.



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

ரொம்பப் பிரமாதமான வேளை வந்திருக்கு. துணிஞ்சி உங்க புது முயற்சிகளைத் தொடங்கினா அபாரமான வெற்றியைக் காண்பீங்க. பெரியவங்க ஆதரவு, நண்பர்கள் உதவி, வங்கிக் கடன் - எது வேணும்னாலும் கேட்டதும் கிடைக்கும். சிலருக்கு வெளிநாட்டுப் பயண யோகம் இருக்கும். விஞ்ஞானிகளுக்கும் புகழ் கூடும். ராணுவத்தினர், விளையாட்டு வீரர்களுக்கு எல்லாமே வெற்றி, வெற்றிதான்! பெண்களுக்குப் பதவி உயர்வு, வெளியூர்ப் பயணம், நகைச் சேர்க்கைன்னு அமர்க்களமா இருக்கும். ●

● எம். ரேவதி, மன்னார்குடி.

? இவ்வருட இறுதியில் தாங்கள் கேள்விப்பட்ட வருத்தமளிக்கும் செய்தி எது?

! ஒரிசா புயல் பாதிப்பினால் ஆயிரக்கணக்கான மக்கள் பட்டினியில் வாடிக் கொண்டிருக்க, டெல்லியில் உள்ள ஒரு இந்திய உணவு கார்ப்பரேஷன் கிடங்கில் மட்டும் 21,000 டன் அரிசி முறையாகப் பாதுகாக்கப் படாமல் வீணாகிக் கொண்டிருக்கிறது என்ற செய்தி.

● ஆங்கரை பைரவி, இலால்குடி.

? ஹிந்து முன்னணியினர் கமல் உருவப் பொம்மையை எரித்துள்ளார்களே?



• யுக புருஷர்



• நாகரிக செய்யலாம்!



• விபரீத விலாசம்!

! கமல் விமர்சனத்துக்கு அப்பாற்பட்டவர் அல்லர்; ஆனால் விமர்சனத்தை நாகரிகமாகச் செய்யலாமே!

● ஆர். ரஞ்சனி, பெருங்களத்தூர்.

? 'ஒரு விழாவில் பேசும்போது அது தொடர்பாகப் பேச வேண்டும். அதை விடுத்து வேறு கோரிக்கைகளை வைக்கக் கூடாது' என்கிற முதல்வரின் கூற்று ஏற்கத் தகுந்ததா? நடைமுறைக்கு ஒத்து வருமா?

! மிக நியாயமானது. விழாவுக்குக் கௌரவமும் பொருத்தமும் சேர்க்க அது வழி செய்யும். எந்த இடத்தில் எதைப் பேசுவது என்று புரிந்து கொண்டு பேசுவதுதான் பண்பாடு.

● என். பாலகிருஷ்ணன், மதுரை.

? இந்த நூற்றாண்டின் மிகப் பெரும் சாதனையாளர் என்று யாரை நினைக்கிறீர்கள்?

! மகாத்மா காந்திதான். வேறு யார்?

● காவிரிமணாளன், கோனாபட்டு.

? தென் மாவட்டங்களில் 300 கைதிகள் போலி ஜாமீன் ஆணைகளைக் கொடுத்துத் தப்பி விட்டனராமே?

! போலி ஜாமீன்கள், போலி வக்கீல்கள், போலி சாமியார்கள், போலி அரசியல்வாதிகள், போலி ரூபாய் நோட்டுகள், போலி நிதி நிறுவனங்கள்... போலி எதில்தான் இல்லை? போலி அரசியல் இருக்கும் வரை போலித்தனம் அனைத்திலும் பரவத்தான் செய்யும்.

● உமரி. பொ. கணேசன், மும்பை – 37.

? ஆஸ்திரேலியாவில் நடைபெற்ற முதல் டெஸ்டில் டெண்டுல்கருக்கு அவுட் கொடுத்தது சரியா?

! கிரிக்கெட்டில் இதுபோன்ற சில தவறுகள் நடக்கும் என்று எதிர்பார்த்துத்தான் களத்தில் இறங்க வேண்டும். இத்தகைய பின்னடைவுகளையும் சமாளிக்கும் விதமாகத்தான் ஆற்றலை வளர்த்துக் கொள்ள வேண்டும்.

# சித்தர் பாட்டில்

● என். ஜெயராமச்சந்திரன், ஷிமோகா.

? 'சித்தர் பாட்டில் ரஜினி ரகசியம்' என்ற தலைப்பில், 'தமிழகத்தை ஒரு மராட்டியர் ஆள்வார்' என தெரிவிக்கும் ஒரு செய்தி ஒரு பத்திரிகையில் வெளியாகியுள்ளதே...?

! தமிழகத்தை மராட்டியர் ஏற்கெனவே ஆண்டு விட்டனர். எப்போதாவது தஞ்சைக்குப் போனால் கவனியுங்கள் – தெருத் தெருவாகச் சான்றுகள் கிடைக்கும்.

● எஸ். கதிரேசன், பேரணாம்பட்டு.

? மத்திய -பிரதேசத்தில் ஒரு அமைச்சரையே நக்சலைட்டுகள் வீடு புகுந்து கொலை செய்துள்ளார்களே – அந்த மாநிலத்தில் வாழும் சாதாரண பொது மக்களுக்கு என்ன பாதுகாப்பு?

! நக்ஸலைட்டுகள் குறிவைப்பது அதிகார வர்க்கத்தைத்தான். மக்களை அல்ல!

● கே. ஆர். வேலுச்சாமி, அன்னூர்.

? ஒரிசாவில் வாழ வழியின்றித் தவிக்கும் பெண்களை விபசாரத்தில் ஈடுபடுத்துகிறார்களாமே?

! விபசாரத்தில் யாரும் விரும்பி ஈடுபடுவதில்லை; அது பொருளாதாரப் பிரச்னையே என்பதற்கு மீண்டும் ஒரு எடுத்துக்காட்டு. பெண்களுக்குக் கல்வியும் சுய சார்பை உறுதி

செய்யும் தொழிற் கல்வியும் தரப்பட்டால் அடிமைத்தனமோ தலைகுனிவோ அவர்களுக்கு இல்லை. இதை இட ஒதுக்கீடு மூலம் சாதித்து விட முடியாது.

● எஸ். உஷாதேவி, சென்னை – 26.

? 'கோட்டைக்குப் பின்னால் தமிழக முதல்வரின் தொகுதியில் ஒரே குடிசைகளாக இருக்கிறது; தமது தொகுதியை நிலைத்துக் காப்பாற்றத் தெரியாதவரா தமிழகத்தை நிலைத்துக் காக்கப் போகிறார்?' என்று ஜெயா டீ.வி.யில் ஒளிபரப்பினார்களே? அதுவும் தமிழக முதலமைச்சருக்கு இழுக்கு தானே?

! போயஸ் தோட்டத்துக்குப் பக்கத்தில் இருந்த குடிசைகளைக் காலி பண்ணிவிட்டு, மாளிகை விஸ்தரிப்பு நடத்தியது போல் முதல்வர் கருணாநிதியும் நடந்து கொள்ள வேண்டும் என்று ஜெயா டீ.வி. எதிர்பார்க்கிறது போலும்!

● அ.கு. கிருஷ்ணன், சென்னை – 39. ❑

? புதிதாகத் தயாரித்திருக்கும் சென்னை மாநகரப் பேருந்துகளில் திருக்குறள் இடம் பெறாமல் கலைஞரின் கவிதை வரிகள் மட்டும் இருக்கின்றனவே. இதைப் பற்றி யாரிடம் முறையிடலாம்?

! இதோ உங்கள் முறையீட்டை முதல்வரிடமே தெரிவிக்கிறோம். ஆவின் பால் பாக்கெட்டுகளிலும் 'முதல்வர் மொழி' இடம் பெறுவதைச் சுட்டிக் காட்டுகிறோம். ஊருக்கு நல்லது சொல்லும் வாசகங்கள் என்றாலும் வேறு எத்தனையோ பெரியோர்களை விட்டு விட்டு, முதல்வரின் வாசகங்களே இடம் பெறச் செய்யும் போது, பிரசார நோக்கு என்றுதான் கருதப்படும்.

• தஞ்சையில் தெரியும்!

# ஜினி ரகசியமா?

● இரா. புவனேஸ்வரி, சென்னை – 81. ✱

? பொருளாதார காரணங்களுக்காக உடலுறவை ஒழுங்குபடுத்துவதுதான் திருமணம். மற்றபடி அதில் புனிதம் எதுவும் கிடையாது என்கிறாரே சாருஹாசன்?

! ஒழுங்குபடுத்தப்பட்ட எதிலுமே புனிதம் உண்டு. ஒழுங்கு அல்லது ஒழுக்கம் மீறப்படும் போது புனிதம் கெடுகிறது. நிற்க... சாருஹாசனை எய்ட்ஸ் தவிர்ப்புப் பிரசாரத்துக்குத் தலைவராகப் போடுமாறு தமிழக அரசுக்குப் பலமாக சிபாரிசு செய்கிறேன்!



• ஆற்றலுக்குச் சவால்!

● ப. லக்ஷ்மி நரசிம்மன், கோவை.

? தமிழர்களுக்கு முகவரி கொடுத்தவர் விடுதலைப் புலிகளின் தலைவர் பிரபாகரன்தான் என்று வை.கோ கூறியுள்ளாரே?

! என்ன விலாசம்? 'கொலை வெறி இல்லம்', மனித குண்டு தெரு, அராஜக நகர், ஆத்திர வட்டம், சர்வாதிகார மாவட்டம் என்பதா?



• பேருந்து டு பால் பாக்கெட்!

❑ ரூ. 50 முதல் பரிசு பெறுபவர் : அ.கு. கிருஷ்ணன், 4, எ.எ. ரோடு, வியாசர் நகர், சென்னை - 600 039.

✱ ரூ. 25 இரண்டாம் பரிசு பெறுபவர் : இரா. புவனேஸ்வரி, 6, இருசப்பன் இரண்டாவது சந்து, புது வண்ணை, சென்னை - 600 081.

வாழும் போது தான் ஆயிரத்தெட்டு பிரச்னை. செத்தால் கூட பிரச்னை... என்பவர்கள் விருதுநகர் மாவட்டம் வத்தராயிருப்புப் பக்கத்திலுள்ள கூமாப் பட்டிக்குக் கொஞ்சம் அருகிலிருக்கும் எஸ். கொடிக்குளம் கிராமத்தினர். மொத்தம் 600 குடும்பங்கள் வாழும் இந்த ஊரில் சுடுகாட்டுக்குப் போகும் பாதையில் இரண்டு ஆறுகள் குறுக்கிடுவதால்தான் பிராப்ளம்.

ந. முத்தையாத் தேவர் பிரச்னை பற்றிச் சொன்னார் : "இந்தப் பிரச்னை எம் பாட்டன் முப்பாட்டன் காலத்திலிருந்தே உண்டு. அப்பெல்லாம் கேட்காம இப்ப மட்டும் கேக்கறதுக்குக் காரணம் இருக்கு. வீராசமுத்திரம் ஆற்றுக் கரையில கடுகாடு இருக்கு. தண்ணி ஆத்துல அளவுக்கு அதிகமா வரும்போது எல்லாம் கொஞ்சம் கொஞ்சமா சுடுகாட்டு இடத்தை அரிச்சுட்டுப் போயிடுது. இனி இறக்கப் போறவங்களுக்காக இருக்கிறது கொஞ்சூண்டு இடம்தான். ஆறடி நிலம் தான் சொந்தம்னு சொல்வாங்க. எங்க எஸ். கொடிக்குளம் மக்களுக்கு அந்த ஆறடி நிலம் கூட சொந்தமில்லைங்க! கொஞ்ச நாளைக்கு முன்னால ஆத்துல அதிகமாக தண்ணி வந்ததுல சுடுகாட்டுக் கூரை சொல்லிக்காம போயிடுச்சு. தண்ணி கம்மியா வர்ற நாளாப் பாத்து சாக முடியுங்களா? தண்ணி போறப்ப எப்படிங்க தேரை தண்ணியக் கடந்து இடுகாட்டுக்குக் கொண்டு போக முடியும்? அதுவும் தண்ணியில இறங்கின உடனேயே அக்கரைக்குப் போயிட முடியாது. தண்ணி போற போக்குல கொஞ்ச தூரம் போயிட்டு அப்புறமாத்தான் மயானத்துக்குக் கரையேறணும். எங்க எஸ். கொடிக்குளம் கிராமத்துல அல்லாக்காரங்க, ஏசுக்காரங்க யாரும் கிடையாது. எல்லாருமே இந்துதான். ஆனா பொணத்த எரிக்க மாட்டோம்... புதைப்போம். காரணம் என்னன்னா இரண்டு ஆத்தைக் கடந்து விறகுகளைக் கொண்டு வரணும். எல்லாரும் சாவைப் பார்த்து பயப்படுவாங்க.. ஆனா நாங்க செத்த பின்னால உடம்பை என்ன செய்வாங்களோன்னு பயப்படுறோம். இனியும் பிரச்னை பெரிசாயிடக் கூடாதுன்னுதான் இப்ப கொடி தூக்கிட்டோம்!"



• ஆற்றைக் கடக்கும் இறுதி ஊர்வலம்...

# "எங்களுக்கு ஆறடி கூடச் சொந்தமில்லீங்க!"

"நம்ம பேரு மாயாண்டித் தேவருங்க.



இந்த ஊரு நாட்டாமை நான்தான். நாலு சாதிய சேர்ந்தவுக மட்டும்தான் இங்கன இருக்கோம். எங்களுக்குள்ள எந்தப் பிரச்னையும் இல்லை. கொஞ்ச காலத்துக்கு முன்னால இந்த மயானப் பிரச்னை இல்லை. ஆத்துக்கு இந்தப் பக்கமே எங்களுக்கு புறம்போக்கு எடம் இருந்துச்சி. அதான் கொடிக்குளம் மயானமா செயல்



• இடிந்து கிடக்கும் பேரூராட்சிக் கட்டடம்...

பட்டது. கூமாப்பட்டிக் காரங்க சில பேரு அங்ஙன தென்னம் பிள்ளையை நட்டு வச்சு நீங்க மயானத்துக்கு வேற எடம் பாருங்கன்னு ஆக்கிரமிச்சுட்டாங்க. இப்ப அந்த மயான எடம் முழுக்க தென்னந்தோப்பா ஆயிப்போச்சு. இந்தத் தொகுதி எம்.எல்.ஏ., தாமரைக்கனிகிட்ட சொல்லலாம். ஆனா அவரே எங்க சேர்றது? எப்படி சேர்க்கிறதுனு குழப்பமா - திரியுறார். விருதுநகர் கலெக்டர் கிருஷ்ணனைத்தான் ஊர்க்காரங்க முப்பது பேர் போய்ப் பார்த்துட்டு வந்தாங்க. மனுக் கொடுத்துருக்காங்க. நான் முடியலைன்னு போகலைங்க'' என்றார் மாயாண்டித் தேவர். அவர் விட்ட இடத்திலிருந்து தொடர்ந்தார் எம். முத்தையாத் தேவர்.

''கலெக்டர் கிருஷ்ணனைப் பார்த்து மனுக் கொடுத்தது எல்லாம் வேஸ்ட்னு இப்பத்தாங்க புரியுது. முதல்ல கலெக்டரைப் பார்த்து மனு கொடுத்தோம். அவரு பி.டபுள்யு.டி. அதிகாரியைப் பார்க்கச் சொன்னாரு. அங்கே போனா நீங்க ஊராட்சி நிர்வாகம் மூலமா வாங்கன்னு சொன்னாங்க. ஊராட்சி நிர்வாகத்துல என்ன செஞ்சாங்கன்னா பேரூராட்சி மொத்தத்துக்கும் இயக்குனர் சிவகங்கையில இருக்காருன்னு சொல்லி சிவகங்கையில் மனு கொடுக்க வச்சாங்க. சிவகங்கையில இருக்கிற உதவி இயக்குனர் சி. கருப்பண்ணன் வர்ற திட்டப் பணிகள்ல இந்த மேட்டருக்கும் சேர்த்துக் கவனியுங்கன்னு திரும்ப கலெக்டர் கிருஷ்ணனுக்கே கடிதம் எழுதி அனுப்பிச்சுட்டார்!

''திரும்பவும் கலெக்டர் கிருஷ்ணனைப் பார்த்தோம். அவரு அரசாங்கத்தில இப்ப பணம் இல்லை, நமக்கு நாமே திட்டத்தில வேணா ஏதாவது செய்யலாம்கிறாரு. எங்களோட தேவை இந்த ஆத்தை கடக்க ஒரு பாலம், வீராசமுத்திரம் ஆத்துக்குக் குறுக்கே தடுப்புச் சுவர். இது இரண்டும் முடியாதுன்னா மயானத்துக்கு வேற இடமாவது ஒதுக்கித் தரணும். இங்க ஏகப்பட்ட புறம்போக்கு இடங்கள் இருக்கு. கலெக்டர் இதை யாரோட கவனத்துக்கும் கொண்டு போகவே மாட்டேங்கிறார். இதுக்கு நாங்களே பணம் ஏற்பாடு செய்ய முடியுமா? நாங்க 'சமத்துவபுரம்' மாதிரி இருக்க எடமா கேக்கறோம்? 'இறக்கற' இடம் வேணும்தானே வேண்டுறோம்? 600 குடும்பமும் கூலி வேலை செய்யறவங்க. இங்க இருக்குற ஒருத்தருக்குக் கூட சொந்த நிலம் கிடையாது. நாங்க எப்படி நமக்கு நாமே திட்டத்தின் மூலம் பாலம், தடுப்புச் சுவர்

• முத்தையாத் தேவர்



• மாயாண்டித் தேவர்



கிரிக்கெட்டில் நிறைய புதுமைகள் புகுத்திய பெருமை ஆஸ்திரேலியாவுக்குத்தான். ஒருநாள் ஆட்டம், இரவு – பகல் கிரிக்கெட், ஒரு நாள் ஆட்டம், டெஸ்ட் பந்தயங்களுக்குத் தனித் தனி



# மேட்சுக்கு வந்தால் சாப்பாடு இலவசம்!

காப்டன்கள் என்று அறிமுகப்படுத்தி வெற்றி கண்டுள்ளது இந்நாடு.

இப்போது ஆஸ்திரேலியாவில், உள்ளூர்ப் போட்டிகளில், இருபத்தைந்து ஓவர் பந்தயங்கள் ஆட ஆரம்பித்துள்ளனர். ஒவ்வொரு அணியும் முற்பகலில் தலா இருபத்தைந்து ஓவர்கள் ஆடும்; பிற்பகலில் அதே போல் இருபத்தைந்து ஓவர்கள் கொண்ட இரண்டாவது இன்னிங்ஸ்! இந்த மினி டெஸ்ட் மாட்ச் வடிவம் சுருங்கி அரை நாள் கிரிக்கெட்டாக மாறி பிரபலமடைந்தால் ஆச்சர்யப்படுவதற்கில்லை என்கிறார்கள் கிரிக்கெட் விமர்சகர்கள்.

தொழில்நுட்பப் புதுமைகளை கிரிக்கெட் மைதானத்துக்குக் கொண்டு வருவதில் முன்னோடி தென்னாப்பிரிக்காதான். ஹான்ஸி க்ரோஞ்ஜேவும் ஆலன் டோனல்டும் இயர் போன்கள் – பாக்கெட் ரேடியோ மூலம் மைதானத்துக்கும் – பெவிலியனுக்கும் தகவல் தொடர்பு ஏற்படுத்திக் கொண்ட போது அம்பயர் ஆட்சேபித்ததும் சர்வதேச கிரிக்கெட் கூட்டமைப்பு எதிர்த்ததும் நினைவிருக்கும். மூன்றாவது அம்பயர் என்ற காமெராக் கண்ணை அந்தஸ்துக்குக் கொண்டு வந்ததும் தென்னாப்பிரிக்காதான்.

இது தவிர, ஒளி கணிப்பான்கள், வீசப்பட்ட பந்துகள் எவ்வளவு என்று எண்ணும் ஆடோமாடிக் கருவிகள், என்று அம்பயருக்கு ஏகப்பட்ட டெக்னிகல் உதவியாளர்கள்!

ஆட்டக்காரர்களும் தலைக்கவசம் உடல் கவசம் சகிதம் போர் வீரர்கள் போல் மைதானத்தில் பிரவேசிக்கிறார்கள். வெள்ளை உடைகள் வண்ணமயமாகி விட்டன. எதிர்காலத்தில் சௌகரியம் கருதி அரை நிஜார் அணிந்து ஆடுவதற்குக் கூட அனுமதி தரப்படலாம்!

ஆட்டக்காரர்களின் சௌகரியம் ஒருபுறம் எனில் பார்வையாளர்களை டி.வி. முன்னாலிருந்து மைதானத்துக்கு இழுத்து வர பல வசீகரத் திட்டங்கள் தீட்டப்பட்டுள்ளதாம்.

'மேட்சுக்கு 2 டிக்கெட் வாங்கினால் உணவு இலவசம்!' போன்ற விளம்பரங்களை எதிர்பாருங்கள்!

– அருண்சரண்யா

கட்ட முடியும்? சரி முதல்வரைப் பார்த்து மனு கொடுக்கலாம்னு நினைச்சா பேருராட்சி மன்ற ஆட்கள் ஒத்துழைப்புத் தர மாட்டேங்கிறாங்க.

"பொறுத்துப் பொறுத்துப் பார்த்துட்டு, இப்பத்தான் போராட்டம் நடத்தினோம். சட்டசபையில இதப் பத்தி பேசுனதா சொல்றாங்க. ஆத்துல தண்ணி வர்றதுக்குக் காரணமான பிளவுக்கல் அணையில தண்ணியத் தடுத்து நிறுத்தியிருக்காக. தண்ணி இல்லேன்னா விவசாயத்துக்கு என்ன பண்றது? செருப்பு சரியில்லாட்டி கால்களை யாராவது வெட்டுவாகளா? கொஞ்ச நாளைக்கு முன்னால ஒரே நேரத்துல இரண்டு பேர் செத்துட்டாங்க. ஒண்ணு மேல ஒண்ணா புதைச்சோம். வேற வழி? இட ஒதுக்கீடு இட ஒதுக்கீடுனு சொல்றாக. முதல்ல எங்களுக்கு இந்த மயானத்துக்கு இட ஒதுக்கீடு பண்ணிக் கொடுத்தா ரொம்ப புண்ணியமாப் போகும். இடம் ஒதுக்காத பட்சத்தில் வீட்டிலேயே புதைக்கிற நிலைமை வந்துடுமுங்க!" என்று சொல்லி விட்டு, "வாங்க பேரூராட்சி கட்டடத்தை காமிக்கிறேன்" என்று கூட்டிச் சென்றார். அங்கே பேருராட்சியாயிருந்து இப்போது பெருச்சாளிகள் தங்கும் இடமாக இடிந்து போன ஒரு ரூம்.

"இது முன்னால ரேடியோ ரூமா இருந்தது. எஸ். கொடிக்குளம் பேரூராட்சி அப்படீங்கிறதுக்கு மிச்சமிருக்கிற ஒரே யொரு சாட்சி இதுதான். அதுல கூட இப்ப ரேடியோ இல்ல!" என்றார் அவர்.

'உங்களை நம்பி நிம்மதியா சாகக்கூட முடியாதுடா!' என்று கண்ணதாசன் நண்பர்களிடம் தமாஷாகச் சொல்வாராம். எஸ். கொடிக்குளத்தில் உள்ளவர்கள் எல்லோரும் அதை சீரியஸாகச் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்.

— வியூவ்ஸ் நியூஸ்

படங்கள் : சுபமணி

# செல்வம்.
# அது உங்களை விட்டுச் செல்வதற்கு முன்... சேமியுங்கள்





## சிறுசேமிப்புத் துறையின் மூலம் வளமான எதிர்காலத்தை உருவாக்குங்கள்

### அஞ்சலக தொடர் வைப்புத் திட்டம்

ஆண்டுக்கு 11.5% கூட்டு வட்டி. ரூ.12,000/– வரையிலான வட்டிக்கு வரிச்சட்டம் பிரிவு 80எல்–ன் கீழ் வரிவிலக்கு. ஒருவர் எத்தனை கணக்குகள் வேண்டுமானாலும் ஆரம்பிக்கலாம்.

### கிஸான் விகாஸ் பத்திரம்

ஆண்டுக்கு சாதாரண வட்டி 16.67% கூட்டு வட்டி 12.15% முதலீடு 6 ஆண்டுகளில் இரட்டிப்பாகும். பத்திரத்தை ரூ.100/–, ரூ.500/–, ரூ.5,000/–, ரூ.10,000/– ஆகிய வகையில் அஞ்சலகங்களில் வாங்கலாம்.

### அஞ்சலக மாதாந்திர வருவாய்த் திட்டம்

ஆண்டுக்கு 12% வட்டி 10% போனஸ். முதிர்வுக் காலம் 6 வருடங்கள். ரூ.12,000 வரையிலான வட்டிக்கு வருமான வரிச்சட்டம் 80எல்–ன் கீழ் வரிச்சலுகை. போனஸ் தொகைக்கும் வரிவிலக்குண்டு. குறைந்தது ரூ.6,000/– மற்றும் அதன் மடங்குகள். தனிநபர் முதலீட்டுக்கு ரூ.2.04 லட்சமும், இருவர் கூட்டாக சேர்ந்து துவங்க ரூ.4.08 லட்சமும் உச்ச வரம்பு.

### தேசிய சேமிப்பு சான்றிதழ் (VIIIவது வெளியீடு)

ஆண்டுக்கு 11.5% கூட்டு வட்டி. குறைந்தபட்ச முதலீடு ரூ.100/– முதலீட்டிற்கு உச்சவரம்பில்லை. வருமான வரிச்சட்டம் 80எல்–ன் கீழ் வட்டிக்கு வரிவிலக்கு. பிரிவு 88–ன் கீழ் ரூ.60,000/– வரையிலான முதலீட்டிற்கு 20% வரிவிலக்கு.

### பொது சேமநல நிதி

கூட்டு வட்டி 12%. வருமான வரிச்சட்டம் பிரிவு 88–ன் படி ஆண்டுக்கு ரூ.60,000/– வரையிலான முதலீட்டுக்கு 20% வருமான வரிச் சலுகை கிடைக்கும். வட்டி முழுமைக்கும் வருமான வரிச்சட்டம் பிரிவு 10(1)–ன் படி வரிவிலக்கு. நிதியாண்டில் குறைந்தபட்ச முதலீடு ரூ.100/– உச்சவரம்பு அதிகபட்ச முதலீடு ரூ.60,000/–

### தேசிய சேமிப்பு திட்டம்-1992

குறைந்தபட்ச முதலீடு ரூ.100/– முதலீட்டிற்கு உச்ச வரம்பில்லை. ஆறு மாதத்திற்கொரு முறை வட்டி கணக்கிடப்பட்டு முதிர்வின்போது வழங்கப்படும். ஆறு வருடங்களுக்கு பிறகு முதலீடு திரும்பப் பெறும் வசதி.



சிறுசேமிப்புத்திட்டங்கள் பற்றி அறிந்து கொள்ள சிறுசேமிப்புத் துறையின் சென்னை அலுவலகத்தில் உள்ள 24 மணி நேரமும் செயல்படும் கணினியுடன் கூடிய தகவல் பரிமாறிக் கொள்ளும் சாதனத்துடன் (IVRS) தொலைபேசி மூலம் தொடர்பு கொள்ளலாம். IVRS தொலைபேசி எண்கள் : 8290853, 8290854, 8290855, 8290856 (சென்னை)

மேலும் விபரங்களுக்கு, தொடர்பு கொள்ளவும் :
● ஆணையர், சென்னை மாநகராட்சி, சென்னை – 600 003. ● துணை இயக்குநர் (சிசே பிரிவு), சென்னை மாநகராட்சி, சென்னை – 600 003. தொ.பே.: 5384440. ● மண்டல இயக்குநர், தேசிய சேமிப்பு நிறுவனம், இராஜாஜி பவன், பெசன்ட் நகர், சென்னை – 600 090. தொ.பே. : 4916342. ● மாவட்ட ஆட்சியர்கள், மாவட்ட ஆட்சியரின் நேர்முக உதவியாளர்கள் (சிறுசேமிப்பு மற்றும் பரிசுச் சீட்டு), வட்டாட்சியர்கள், வட்டார வளர்ச்சி அலுவலர்கள், அஞ்சலக அதிகாரிகள் மற்றும் சிறுசேமிப்பு முகவர்கள்.



**ஆணையர், சிறுசேமிப்புத் துறை**

சயர் மேன்ஷன், 621, அண்ணா சாலை,
சென்னை – 600 006.
தொலைபேசி: 8291685 / 8291784



DIPR/1699/DIS/99

**வளமைப் பாதைக்கு வழி வகுக்கும் சிறுசேமிப்பு**

20cms x 12.5 cms

# மிலேனியத்துக்குத் தயாராகும் மும்பை!

## அவரும் இவரும்

லண்டனிலிருந்து இந்தியா வந்த ரிச்சர்ட் ப்ரான்சன், யானைச் சவாரி செய்தார் என்றால், இந்தியாவிலிருந்து லண்டன் சென்று மணி மகுடத்தையும் வென்று வந்திருக்கும் நம் உலக அழகி, குதிரை சவாரியாவது செய்ய வேண்டாமா? (வெண் புரவிகள் பூட்டிய ரதத்தில் பவனி வந்தாரே?) அவர் இந்திய வானில் பறக்கப் போகிறார்; இவர் புகழ் வானில் பறக்க இருக்கிறார்; அவர் இந்திய உடையில் (ஷெர்வாணி பைஜாமா) வந்து நம்மை அசத்தினார். இவர் அந்நிய உடையில் (ஈவினிங் கவுன்) உலகையே மயக்கி விட்டார். அவர் பிஸினஸ் செய்ய வந்திருக்கிறார். இவர் ஒரு புதிய பிசினஸ் உலகையே உருவாக்கி விட்டார். (அழகுப் போட்டி, அழகு என்பதெல்லாம் இப்போது இங்கே பெரிய இண்டஸ்ட்ரி ஆகி விட்டது!) அவரால் பணம்தான் பண்ண முடியும்; இவரோ, மொபைல் ஃபோனின் இலக்கமளவுக்கு செல்வத்தைக் குவித்த பின்னும், விலாஸ்ராவ் தேஷ்முக்கிடமிருந்து கோரா ஸில்க்கில் வெள்ளிச் சரிகை போட்ட புடைவை, புஜ்பலிடமிருந்து வெள்ளி மயில், அவர் தங்கியிருந்த சொஸைட்டியிலிருந்து தங்கக் காசு... இன்னும் எத்தனை எத்தனையோ அன்புப் பரிசுகளைக் குவித்த வண்ணம் இருக்கின்றாரே! அவரிடம் இருப்பது யுக்திதான்; நம்மிடம் இருப்பது யுக்தாவாயிற்றே?

## 'பஸ்....பஸ்'

பெண்கள் பஸ் கண்டக்டராகியிருப்பது பற்றி கொஞ்சம் பீற்றிக் கொண்டோமா? ஹூம்... கண் பட்டு விட்டது. நாலு பேருக்கு, வரனே குதிர மாட்டேனென்கிறதாம். இவர்களுக்கு மாப்பிள்ளை தேடித் தேடியே பெண்களின் பெற்றோர் நொந்து விட்டனராம். இரண்டு பெண்களுக்கு 'மிஸ்காரியேஜ்' ஆகிவிட்டதென்று புக்ககத்தார் புலம்புகின்றனராம். கருச்சிதைவுக்குக் காரணமே கண்டக்டர் தொழில்தான் என்கின்றனராம். இன்ன பிற புகார்களுடன் ஏனைய பெண்களும் ஒட்டு மொத்தமாக, 'எங்களுக்கு க்ளார்க் வேலை கொடுங்கள்' என்று BEST நிர்வாகிகளைப் பிடுங்கி எடுக்கிறார்களாம். இந்தத் தொல்லைகளால், புதிதாகத் தேர்வு செய்யப்பட்டிருக்கும் ஒரு டஜன் கண்டக்டரிணிகளின் நியமனம் அந்தரத்தில் ஊசலாடுகிறது! 'அவர்களால் முடியாவிட்டாலென்ன? நாங்கள் செய்து காட்டுவோம்' என்று புதிய கண்டக்டரிணிகள் குரல் கொடுக்க, "இது பெண்களுக்கேற்ற தொழில் இல்லை" என்று பழையவர்கள் வெதும்புகிறார்கள். பஸ்... பஸ் (போதும் போதும்)

• மாதுரி - நேநே: "ஹீரோ நெ.1"



மும்பை மசாலா



• தேஷ்முக், புஜ்பல் : யுக்தாவை கௌரவிக்கிறார்கள் -
"பூவுக்குப் பூக்கள்; மயிலுக்கு மயில்"

லையே?

## கலாட்டா கல்யாணங்கள்

ஆஃப் ஒயிட் கலரில் சூரிதார் குர்தா, ஜரிகையால் எம்ப்ராய்டரி செய்யப்பட்ட ஜாக்கெட், முகத்தில் மில்லியன் - டாலர் புன்னகை - எல்லாம் நம் NRI டாக்டர் ஸ்ரீராம் நேநேவைத்தான் சொல்கிறோம்; மிலெனியக் காட்சாக மாதுரியையே பிடித்து விட்டாரே! 'காப்பர் - பீச்' கலரில் காக்ரா சோளி அணிந்து கொண்டு, கழுத்தில் 'மங்கல் சூத்ர' (தாலி) மின்ன, மாதுரி, தன் ரியல் லைஃப் ஹீரோவை, அந்தேரியில் ஏற்பாடு செய்திருந்த ரிசப்ஷனில், எல்லோருக்கும் அறிமுகப்படுத்தினார், சும்மா சொல்லக்கூடாது; சினிமா ஹீரோக்களைக் காட்டிலும் இவர் நன்றாகவே இருக்கிறார். சினிமா வட்டாரம் மட்டுமில்லை, சீஃப் மினிஸ்டரிலிருந்து பழைய ரிமோட் கண்ட்ரோல்காரர் குடும்பம் வரை எல்லோரும் ஆஜர்! இதே போல்தான் பாலிவுட்டும், அரசியல் வட்டாரங்களும் லாலு மகள் மிசா கல்யாணத்துக்கு ஆஜரானார்கள். அங்கே மட்டும் ITகாரர்கள் ஏன் பாடாய்ப் படுத்துகிறார்கள்? ITகாரர்கள் தான் மோசமென்றால் TIகாரர்களுமா இப்படி? (Times of indiaதான்) லாலு யாதவின் சம்பந்தி ராம்பாபு பாதிக்கை அவரது 'சமாதி' ஆக்கி விட்டார்களே? ITகாரர்கள் லாலு, ரப்ரி, இவர்களது "Samadhi" ராம்பாபு ஆகியவர்களிடம் கல்யாணக் கணக்கு வழக்குகள் கேட்டிருப்பதாக, முதல் பக்கத்திலேயே செய்தி வெளியிட்டு விட்டார்கள் TIகாரர்கள்!

— ஜெயஸ்ரீ ராஜ்

என்றாகிவிட்டது மானேஜ்மெண்டுக்கு!

## மிலெனிய வரவேற்பு!

கொண்டாட்டம் - உள்ளேயா? வெளியேயா? புதிய மிலெனியத்தை வரவேற்க மும்பையும் தயாராகிக் கொண்டிருக்கிறது; சௌபாத்தி, சிவாஜிபார்க், பாந்த்ரா, ஜுஹூ பீச், செம்பூர், காட்கோபர் என்று ஆங்காங்கே பிரும்மாண்ட கலை நிகழ்ச்சிகள்! லவுட் ஸ்பீக்கரை எவ்வளவு வேண்டுமானாலும் அலற விடலாம் என்று ஸ்பெஷல் பர்மிஷனும் வழங்கியாகி விட்டது! டி.விகாரர்கள் வேறு போட்டி போட்டுக்கொண்டு மக்களை வீட்டிலேயே கட்டிப் போடப் பார்க்கிறார்கள். ஸ்டார் மூவிஸில் 'டைடானிக்' என்றால் BBC, CNN, ஸ்டார் வர்ல்ட் முதலானவற்றில் உலக முழுவதுமான கொண்டாட்டங்களிலிருந்து சிறு சிறு பகுதிகளை அவ்வப்போது ஒளிபரப்பப் போகிறார்களாம். லண்டனுக்கும் லாஸ் ஏஞ்சல்ஸுக்கும் போக முடியாதவர்கள் வீட்டிலேயே அந்தக் காட்சிகளை அனுபவிக்கலாம். நம் DDகூட அந்தமானில் முதல் முதல் விழப்போகும் சூரிய கிரணங்களைக் காட்டப் போகிறதாமே? இங்கே எல்லா சொஸைட்டிகளையும் பல்புத் தோரணங்களால் பளிச்சிட வைத்து, அவரவர் பால்கனிகளில் தீபாவளி 'லாண்டர்ன்'களைத் தொங்க விடச் சொல்லியிருக்கிறார், மிலெனிய விழாக் கமிட்டியின் சேர்மனான நானா சுதாலமா. அதற்கான செலவையும் அவரே ஏற்றுக் கொள்வாரா தெரியவில்

மும்பை மசாலா



# மூட்டு வலியா! இனி கவலை வேண்டாம்!



மூட்டு வலி என்பது மூட்டுக்களில் ஏற்படும் பாதிப்பை குறிக்கின்றது. இதனை கீழ்வாயு என்றும் அழைப்பார்கள் வாதம், பித்தம், கபம் போன்றவைகள் கூடுவதாலும், குறைவதாலும் இந்நோய் உண்டாகிறது.

மூட்டு வலி பல வகைப்படும் அவைகள்

**வாதமூட்டு வலி** - வாயுப் பொருட்களை அதிகம் உண்பதால் உண்டாகிறது. வாயுப் பொருட்கள், பயிறு வகைகள், பருப்பு வகைகள், கிழங்கு வகைகள் முதலியன. **பித்த மூட்டு வலி** - பித்தத்தை அதிகப்படுத்தும் உணவுப் பொருட்களை அதிகம் உண்பதால் உண்டாகிறது. டீ, காபி, மது, காரணமான உணவு வகைகள் முதலியன. **கப மூட்டு வலி** - கபகுற்றம் மிகுதியான உணவுப் பொருட்கள் அதிகம் உண்பதால் கப மூட்டு வலி உண்டாகிறது. இனிப்பு பண்டங்கள், தயிர், இறைச்சி, நெய், எண்ணெய் பண்டங்கள் முதலியன. **இதய கீழ் வாயு** - இதயத்தை நோய் கிருமிகள் தாக்குவதால் இதய மூட்டு வலி உண்டாகிறது. இதனால் ஜுரம், முழங்கால் மூட்டுகளில் வீக்கம், வலி, சூடு போன்றன தோன்றும். சோதனை செய்து பார்க்கும்போது இதயத்தில் பாதிப்பு ஏற்பட்டிருக்கும். **மேக கீழ் வாயு** - விலை மாதர் உறவால் நோய் கிருமிகள் உடலில் பரவி மூட்டுக்களில் பாதிக்கின்றது.இதனால் மூட்டுக்களில் சீழ் பிடித்தல், வீக்கம், வலி, குத்தல், குடைச்சல் போன்றன இருக்கும்.

**மூட்டு வலியின் அறிகுறிகள்** - மூட்டுக்களில் வலி, குத்தல், குடைச்சல், வீக்கம், நடக்க இயலாமை, சுரம் போன்றவை காணப்படும். மேலும் எலும்பு தேய்மானம், சீழ்பிடித்தல் போன்றவையும் உண்டாகும்.

**மூட்டு வலிக்கான மூலிகைகள்** - வேப்பிலை, வில்வம், அத்தி, நாவல், அருகம்புல், அரசன், வாத நாராயணன், முடக்கற்றான், கீழாநெல்லி, முருங்கை போன்ற மூலிகைகளை பறித்து வந்து வெய்யிலில் உலர்த்தி பின் உரலில் போட்டு நன்கு இடித்துத் தூள் செய்து பின் சம அளவில் எல்லாவற்றையும் ஒன்றாக கலந்து ஒரு பாட்டலில் வைத்துக் கொள்ள வேண்டும். பின் இதில் இருந்து இரண்டு ஸ்பூன் தூள் எடுத்து ஒரு டம்ளர் தண்ணீரில் கலந்து உணவுக்கு ஒரு மணி நேரம் முன்பாக தினமும் காலை, இரவு ஆகிய இரண்டு வேளையும் உட்கொள்ள வேண்டும். இவ்வாறு சுமார் மூன்று மாதம் செய்து வந்தால் எல்லா ரக மூட்டு வலிகளும் பூரண குணம் கிட்டும். சுமார் பதினைந்து நாட்களில் குணம் தெரிய ஆரம்பிக்கும்.

**எண்ணெய் கலவை** - தேங்காய் எண்ணெய், விளக்கெண்ணெய், வேப்ப எண்ணெய் ஆகிய மூன்றையும் சம அளவு ஒன்றாக கலந்து சுமார் வகைக்கு 50 மில்லி ஒரு பாட்டிலில் கலந்து வைத்துக் கொள்ளவும். பின் இதில் இருந்து ஒரு டீஸ் பூன் அளவு உள்ளங்கையில் விட்டு உணவுக்கு ஒரு மணி நேரம் முன்பாக நாவினால் நக்கி சாப்பிட வேண்டும்.

**உணவு முறைகள்** - தினம் காலை, அல்லது ஏதேனும் ஒரு வேளை பச்சையாக உட்கொள்ளும் பழங்கள், காய்கள், பழ ஜூஸ்கள், வெஜிடபிள் சாலட், புரூட் சாலட் போன்றவைற்றில் ஏதேனும் இரண்டு அல்லது மூன்று வகைகளை தேவையான அளவு உட்கொள்ளவும். உதாரணம் பப்பாளி, மா, அன்னாசி, வாழை, பேரிட்சை நாவல், கொய்யா, மாதுளை, சப்போட்டா, தர்பூசனி, நொங்கு, இளநீர், பதனீர், தேங்காய், கேரட், வெள்ளை வெள்ளரிக்காய், கோவக்காய், பீரிக்காய் போன்றன உட்கொள்ளலாம். மற்ற இரண்டு நேரம் சாதாரண சமைத்த சைவ உணவுகளை உண்பது நல்லது. இதிலும் ராகி கோதுமை, பார்லி, உளுவல் போன்ற தானியங்கள் அடிக்கடி சேர்த்துக் கொள்வது நல்லது முள்ளங்கி, அவரை, கேரட் பீட்ரூட், வாழைத்தண்டு, கத்தரி முருங்கை போன்றவைகளை பொரியல் அல்லது சூப் செய்து சாப்பிடுவது நல்ல பலன் அளிக்கும்.

**மூட்டுக்களை பாதுகாக்கும் முறைகள்** - எண்ணெய் தேய்த்துக் குளிப்பதால் மூட்டுக்களில் எண்ணெய் சென்று நன்றாக செயல்படவும், மிருது படவும் செய்கின்றது.

**சத்தான உணவுகள் உண்பது** - மூட்டுக்களை பாதுகாக்கின்றது. மூட்டுக்களில் வீக்கம் ஏற்பட்டால் மூட்டுக்களில் விளக்கெண்ணெய் சிறிது தடவி ஐந்து நிமிடம் கழித்து உப்பை அல்லது அரிசி தவிடு அல்லது கோதுமை தவிட்டை சூடு செய்து பின் இதனை துணியில் முடிந்து ஒற்றடம் கொடுக்கலாம். பின்னர் சுக்கை தூள் செய்து வெந்நீரில் கரைத்து பற்று போட வீக்கம், வலி, குறையும். தினமும் காலை எழுந்தவுடன் இயன்ற அளவு தண்ணீர் குடிக்கவும்.

வாரம் ஒரு நாள் பகல் ஒரு வேளை உணவை தவிர்த்தல் வேண்டும் ஒவ்வொரு வேளையும் முக்கால் வயிறு ஆகாரமாக உட்கொள்ள வேண்டும். புகைத்தல், மதுவகைகள், குளிர் பானங்கள், காரமான உணவு, டீ, காப்பி போன்றவற்றை தவிர்க்க வேண்டும்.

**உடற்பயிற்சி** - நடத்தல், உட்கார்ந்து எழுதல், குனிந்து நிமிர்தல், கை, கால் விரல்களை, நீட்டி மடக்குதல், நின்ற இடத்தில் குதித்தல், ஓடுதல், நீந்துதல், மூச்சுப் பயிற்சி போன்றவைகள் சைக்கிள் ஓட்டுதல் முதலியன மூட்டுக்களை பலம் பெற செய்கின்றன. ஆகவே இதனை தினம் காலை, மாலை, சுமார் 20 நிமிடம் மெதுவாக செய்தல் நல்லது. சூரிய ஒளி தினமும் உடலில் படும்படி 10 நிமிடம் நிற்கவும். மேற்கூறிய முறைகளை பின்பற்றினால் எல்லாரக மூட்டுவலிகளில் இருந்தும் குணம் பெறலாம்.



*தெய்வீக மூலிகை வைத்தியர்கள்*

தலைமை முகவரி : **Dr.M.குருபரன் & Dr.M.சபாபதி, S/o.Dr.C.K. மாணிக்கவாசகம்**

P.B. No:30, No:3, திருநாத முதலி நகர், காலேஜ் எதிரில், திருப்பத்தூர் (N.A.A.) 635 601 ✆ 04179-20469, 22769

சென்னை கிளை : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, பிரின்ஸ் மேனர் பக்கத்தில் கெல்லீஸ், சென்னை-10.

இரு முகவரிகளின் ஆலோசனை நேரம் தினமும் காலை 10 to 1 மாலை 6 to 8 ✆ 6424285, 6427638

**குறிப்பு:** சென்னை, வேலூர், காஞ்சிபுரம், கடலூர், விழுப்புரம், திருவண்ணாமலை, பெங்களூர் ஒசூர், சேலம், ஈரோடு, கோவை, மதுரை, தஞ்சாவூர், திருச்சி, நாமக்கல், தர்மபுரி, திருப்பூர், உடுமலைபேட்டை, திண்டுக்கல், தூத்துக்குடி, திருநெல்வேலி, நாகர்கோவில், விருதுநகர், கரூர் போன்ற நகரங்களில் வைத்தியரை நேரில் சந்திக்க முகாம்-விபரம் தெரிந்து கொள்ள மேலே உள்ள முகவரிக்கு கடிதம் (அ) போன் மூலம் தொடர்பு கொள்ளவும்.

**தகவல்:** டாக்டர் அவர்களின் மூலிகைகள் பற்றிய 26 வருட அனுபவ ஆராய்ச்சிகள் அடங்கிய 'எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்' என்ற புத்தகத்தினை பதிவுத்தபாலில் பெற ரூ 60/-ம் இயற்கை உணவுகளின் பெருமைகள், அதிசய உண்மைகள் அடங்கிய 'என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்' என்ற புத்தகத்தினை பதிவுத் தபாலில் பெற ரூ 60/-ம் மூலிகை மகிமை பற்றிய ஆடியோ கேசட்டை பெற ரூ 60/-ம் தலைமை முகவரிக்கு D.D. அல்லது M.O. அனுப்பவும்.

**7 & 8-ந் தேதி - மும்பை : காலை 9 to இரவு 8 மணி வரை The South Indian Concerns Ltd., 401, Telang Road, Matunga, (CR), Ph : 4011589**

**9-ந் தேதி - பெங்களூர் : காலை 11 to 1 ஹோட்டல் பிரைட்வே, கெம்பனா தியேட்டர் அருகில் கெம்பே கவுடா ரோட் ✆ : 2266374**

**18 & 19-ந் தேதி-புது டெல்லி: காலை 9 to இரவு 8 மணி வரை South Indian Hotel, 10211, Padam Singh Road, Ajmal Khan Road, Karol Bagh, ✆: 5717126, 5723651**



தும்புரு

# சுழட்டல் அழகும் இடறல் சோகமும்!

கிரிக்கெட்டில் 'காபி புக் ஸ்டைல்' என்று சொல்வார்கள் - சம்பிரதாயக் கச்சிதத்துடன் ஆடுவது என்று பொருள். 'காபி புக் செம்மங்குடி ஸ்டைல் கேட்க வேண்டுமானால் ரஞ்சனி - காயத்ரி சகோதரிகளின் கச்சேரிக்குப் போக வேண்டும். படத்தைப் பார்த்துவிட்டு வயலின் கச்சேரி என்று நினைத்து விடாதீர்கள். வாய்ப்பாட்டு என்னும் புது அத்தியாயத்தைத் தொடங்கியிருக்கிறார்கள் ரஞ்சனி - காயத்ரி.

இது என்ன ஓர வஞ்சனை என்கிறீர்களா...? கிருஷ்ணகான சபாவில், சிறப்பாகவே ஸ்ரீரஞ்சனியில் சேர்ந்து கொண்ட ரஞ்சனி, பிலஹரியில் சட்டென்று சறுக்கிய பயத்தில் சுருண்டுகொண்டு விட, காயத்ரி அவர் பொறுப்பையும் சேர்த்து அனாயாசமாய்ச் சுமந்து ஈடுகட்டினார்.



• அசோக் ரமணி

செம்மங்குடி பாணி 'சுழட்டல்' பிரயோகங்களுக்கு காவிரிச் சுழலைப் போல் ஓர் அபூர்வ அழகு உண்டு. (செம்மங்குடியின் சிஷ்யர் பி.எஸ். நாராயணசாமிதான் சகோதரிகளின் குரு) அந்த சுழட்டலோடு கவனமான உச்சரிப்பையும் குரலினிமையையும் சேர்த்துக் கொள்ளுங்கள்... படு ஃப்ரெஷ்ஷான ஒரு புது காம்பினேஷன். 'மாருபல்க'வில் ஆரம்பித்து காம்போதி முடிய அந்த மெருகு நீடித்தது.

பிலஹரியில் (பரிதான) அளவான கற்பனை ஸ்வரங்கள், நெற்றிச்சுட்டி பளபளப்புடன் ஒரு முத்தாய்ப்பு என்று தொடர்ந்த கச்சேரி, சுபபந்துவராளியில் நங்கூரம் பாய்ச்சி நின்றது.

காயத்ரியின் அன்றைய சுபபந்துவராளி ஆலாபனை கருமேகம் திரளும் வானம்போல் மெள்ள கனத்து வந்து கவிந்து, துரிதப் பிரயோகங்களில் சிலிர்த்து (காபி புக்கிலிருந்து சற்று விலகல்தான்) 'ஸ்ரீ சத்ய நாராயணம்' என்ற முத்துஸ்வாமி தீக்ஷிதர் கிருதியை அமைதி மழையாய்ப் பொழிந்தது. அதுவரை இடைவெளிகளை நிரப்பியும் ஸ்வரக் கோர்வைகளை எதிர்பார்ப்புடன் அலங்கரித்தும் வந்த ம்ருதங்க வித்வான் மனோஜ் சிவா பாவம் ததும்பிய அந்தக் கீர்த்தனைக்கேற்ப அழுத்தலாக மாற்றி வாசிக்க, வெகு அழகானதொரு அனுபவமாக அந்த முயற்சி மலர்ந்தது.

அன்று வைகுண்ட ஏகாதசி என்பதை மறக்காமல் காம்போதியில் ஓ ரங்க ஸாயியைத் தேர்ந்தெடுத்திருந்தார்கள். மீண்டும் காயத்ரியின் ஆலாபனை. கையில் தூரிகை கொடுத்தால் ராகத்தை ஓவியமாக வரைந்து விடுவது போன்ற ஆக்ஷனுடன் ஆலாபனை செய்யும் இவர், தமது



• ரஞ்சனி - காயத்ரி

சன்னக் குரலால் காம்போதியின் கனத்தை யும் வரைந்து காட்டினார்!

சரீரத்தோடு போட்டி போடும் சாரீரம் சகோதரிகளுக்கு - (இருவருமே உலக அழகி ரேஞ்சுக்கு ஒல்லி!) அந்த மெல்லிசு குரலைக் காட்டிலும் மெல்லிசாக வாசித்த சஞ்சீவின் வயலினில் அழுத்தம் ஆப் சென்ட். சுத்தமும் அழகும் மட்டுமே அதற்கு ஈடுகட்ட இயலவில்லை. பாட கரின் மினி எதிரொலியாக அன்றி முழு எதிரொலியாக தமது வாசிப்பை அவர் அமைத்தது சலிப்பூட்டியது.

கச்சேரி நடுவில் சில நிமிடங்கள் காணாமல் போன கஞ்சிரா மணி தனியா வர்த்தனத்தில் ம்ருதங்கத்துடன் கைகோத் துக் கொண்டார். சின்னச் சின்ன கோர்வைகளால் அழகான லயச் சித்திரம் படைத்தனர்.

ஹிந்துஸ்தானி பாணியிலும் தாம் சளைத்தவரல்ல என்று துக்கடாக்களில் தீர்மானமாக நிரூபித்தார் காயத்ரி.

சங்கீதத்தில் சுவானுபவம் என்று ஓர் அம்சம் சொல்லப்படுகிறது. தான் அனு பவித்து லயித்துப் பாடுவதன் மூலம் கேட் போரை அந்த அனுபவத்துக்கு அழைத் துப் போவது - அன்றைய கச்சேரியில் - இந்த அரிய அனுபவம் கிடைக்கப் பெற் றது.

பாபநாசம் அசோக் ரமணியின் பந்துவராளி ஆலாபனையைப் பழுதே சொல்ல முடியாது.

சுத்த ஸ்வரங்களை மட்டுமே கவன மாகத் தேர்ந்தெடுத்து சிறிய அமைப் பாகப் பாடினார். ஆனால் சுத்த ஸ்வரங் கள் மட்டுமே கொண்டு ஒரு கச்சேரியை அமைப்பது சுத்தமாக நடக்காத காரி யம்!

அசோக் ரமணியின் கைகள் பேசும் அளவுக்கு அவர் தொண்டை பேச வில்லை. துரிதம், கமகம், ப்ருகா, அகாரம் என்று அனைத்து முயற்சிகளிலும் வேறு பாடின்றி இமாலய இடறல்கள்.

இந்த சோகத்தின் இடையேயும் அசோக்கின் இந்தியன் பைன் ஆர்ட்ஸ் சொஸைடி கச்சேரியில் சில பளிச்சிடல் கள்; வேறெங்கும் கேட்கக் கிடைக்காத சில அபூர்வ பிடிகளைக் கேட்க முடிந் தது.

ஸாவேரி வர்ணத்தை ஒரு மீடியம்
வேகத்தோடு நிறுத்திக் கொண்டவர்,
'தத்வ மறிய தரமா?' என்று மூலாதார
கணபதியைக் கேட்டுவிட்டு ஸ்வரம் பாட
ஆரம்பித்தார். வளமான கற்பனைப் பிர
யோகங்கள். ஆனால் அந்த 'ம'வை ஒவ்
வொரு முறையும் ஸ்தானத்தில் சேராமல்
பிடிக்கும் லைசென்ஸை யார் அவருக்குக்
கொடுத்தது? ம " ம''' என்று அது நிலை
கொள்ளாமல் தவித்த தவிப்பு...! மேல்
'ஸ'வைப் பற்றிக் கேட்கவே வேண்டாம்.
ஏணி வைத்தாலும் எட்டாத தூரத்தில்
அது பாட்டுக்குக் கிடந்தது!

மைசூர் நாகராஜின் வயலின் பதறாமல்
தம்பூராவைப் பிடித்துக்கொண்டு தன்
பாதையில் சென்றது. பந்துவராளியில்
அசோக் ரமணி விட்டதையெல்லாம்
நாகராஜ் பிடித்துக்கொண்டு ஒரு வித
செமி குன்னக்குடி பாணியில் முத்தாய்ப்பு
வைத்து (ஸ்வரம்) கைதட்டலை வாங்கிக்
கொண்டார்.

சஹானா ஆலாபனையிலும் அதே
ஆக்ஷன் ரீப்ளே. 'சித்தம் இரங்காத
தேனய்யா' என்ற பாடலை அசோக்
ஆரம்பித்தபோது அதன் உருக்கம் எடு
படாமல் போயிற்று.

ப்ரோக்ராம் போடுவதில் வல்லவர்
அசோக் ரமணி. சஹானாவுக்குப் பிறகு
நளினகாந்தி ஒரு அவுன்ஸ் பாடி 'மந
வினாலகிஞ்சராதடே' வழங்கினார். கஞ்
சிரா ராமாச்சாரும் ம்ருதங்கம் வேலூர்
ராமபத்ரனும் இந்தக் கச்சேரியைப்
பொலியச் செய்ய எடுத்துக் கொண்ட
பெருமுயற்சிகள் இந்தக் கீர்த்தனத்
தின்போது உச்சக்கட்டத்தை அடைந்தன.
தனியாவர்த்தனத்தின் கௌரவமான
சோபிதத்தைக் குறிப்பிட்டுச் சொல்ல
வேண்டும்.

அதற்கு முன், அசோக் ரமணி
பாடிய மத்யமாவதி (பாலிந்த்ஸ"
காமாக்ஷி) பற்றிச் சொல்லாமலிருப்பதே
நல்லது.

பழனி பஞ்சாம்ருதம் போல் பழைமை
யான சம்பிரதாயத்திலும் கே.வி. நாரா
யணசாமியின் அழகுணர்ச்சி பொங்
கும் பாணியிலும் ஊறி வந்தவர்
அசோக் ரமணி. ஆனால் பிரசாதம்
என்பதற்காக பஞ்சாம்ருதத்தில் நெருடும்
கல் மண்ணையும் கலைத்து விழுங்க முடி
யுமா!

# முதல் மழைத் துளி

"அப்பரும், திருஞானசம்பந்தரும் வேதாரண்யத்தில் தங்கியிருந்தார்கள். அப்போது சம்பந்தருக்கு மதுரையிலிருந்து அழைப்பு வந்தது. அழைப்பு விடுத்தவள், பாண்டிமாதேவி. பிரச்னையின் தன்மையைக் கருதி, சம்பந்தர் போக முடிவெடுக்கிறார். கூட இருந்த அப்பர், நாள் நட்சத்திரம் பார்த்து, இப்போது சகுனம் சரியில்லை என்கிறார். அப்போ, சம்பந்தர் பாடிய பாட்டு இது..." என்ற அரவிந்தனைத் தடுத்தாள்.

"தெரியும். திங்கள் கிழமை முதல் ஞாயிற்றுக்கிழமை வரை, எல்லா நாளும் நல்ல நாள்தான். கடவுள் பக்தி உடையவர்களுக்குத் தீய நாளே கிடையாது என்று சொல்கிற இந்தப் பாடல், அவசியம் நான் பாட வேண்டியது, அரவிந்தன். மூடப் பழக்கங்கள் மலிந்து வருகிற நாள் இது. அதுவும், இளைஞர்களே கூட, பல விஷயங்களில் கெட்டுக் கொண்டு வருகிற இந்த நாளில் இதை அவசியம் நான் பாட வேண்டும். காந்தாரத்தில் மெட்டு போட்டிருக்கேன்" என்று விட்டுப் பாடினாள்.

*"வேயுறு தோளி பங்கன் விடமுண்ட கண்டன்*
*மிக நல்ல வீணை தடவி*
*மாசறு திங்கள் கங்கை முடிமேல் அணிந்து என்*
*உளமே புகுந்த அதனால்*
*ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி*
*சனி பாம்பிரண்டும் உடனே*
*ஆசறு நல்ல நல்ல அவை நல்ல நல்ல*
*அடியார் அவர்க்கு மிகவே..."*

தேவாரத்துக்கே உரிய குழைவும், பெரும் போக்கும் வருகிற மாதிரி அவள் பாடினாள்.

"ஆயிரத்து முந்நூறு வருஷங்களுக்கு முன்னாலே, சம்பந்தர் செய்த சமூகப் புரட்சி மேடம், இது. இதையெல்லாம் ஜனங்க கேட்கணும். பல்லியும் பருந்தும், இளியும், தேவாங்கும் நமக்கு நல்ல வார்த்தை சொல்லணும்னு எதிர்பார்த்தா எங்க நாம் உருப்படப் போகிறோம்..."

அரவிந்தன், தம் மேசை மேல் வைத்திருந்த பட்டியலை அவள் முன் காட்டினான்.

"பாரதியார் பாட்டுல சிலது, திரும்பத் திரும்பப் பாடியாச்சு. நான் தேர்ந்தெடுத்தது இதுதான். இப்ப நம்ம சமூகத்துக்கு அவசியப்படற விஷயம் இதுதான். மதவெறியை, என்னோடது உசத்தி, உன் மதம் மட்டம்கிற மனோபாவத்தைப் போக்கறதுதான். என்னைக் கேட்டா, மத விஷயங்களை, ஆண் பெண் உறவு மாதிரி அந்தரங்கமா வச்சுக்கிடணும்னு சொல்வேன். வீட்டுக்குள்ளே எல்லாத்தையும் வச்சுக்கோ. வெளியே சொல்லிட்டுத் திரியாதே. காண்பிக்காதேன்னு சொல்லுவேன்."

அவன் கருத்து அழகாக இருந்தது. அதை

## 9

**பிரபஞ்சன்**



ரசித்துக் கொண்டிருந்தாள் பாரதி.

"விநாயகனைப் பற்றிப் பாரதி பாடினது. ரொம்ப அற்புதமான பாட்டு. எம்.எஸ். பாடி இருக்காங்க. நீங்களும் வேற ராகம் போட்டுப் பாடலாம்" என்று விட்டு அந்த வரிகளைக் காட்டினான்.

"விநாயக தேவனாய், வேலுடைக் குமரனாய்
நாராயணனாய், நதிச்சடை முடியனாய்
பிற நாட்டில் இருப்போர் பெயர்பல கூறி
அல்லா யெஹோவா, எனத்தொழுது அன்புறும்
தேவரும் தானாய்...

பாருங்க, மேடம். விநாயகன்தான் எல்லாம், கடவுள் ஒன்று; அதுக்குப் பல பேர். சிவன், விஷ்ணு, அல்லா, ஏசு எல்லாம் ஒன்றுதான். இதை அல்லவா, குழந்தைகளுக்குச் சொல்லிக் கொடுத்து இருக்க வேணும்..."

"நாம் செய்யலாம் அரவிந்தன்" என்றாள் பாரதி, மகிழ்ச்சியுடன்.

அந்த வார இறுதிக்குள், உமா ரிக்கார்டிங் கம்பெனிக்குச் செல்ல வேண்டி இருந்தது, பாரதிக்கு. துணைக்கு லலிதாவையும் அழைத்துச் சென்றிருந்தாள் பாரதி. காலை வெயில் இல்லாமல், வானம் மப்பும் மந்தாரமுமாக இருந்தது. கம்பெனியின் ரிக்கார்டிங் பொறுப்பாளர், சம்பந்தம், அவர்களை வரவேற்றுப் பேசினார். அவள் பாட்டின் பட்டியலைக் கொடுத்தார். மொத்தம் ஆறு கேசட்டுகள் தொடர்ச்சியாக. ஏக காலத்தில் வெளியிடுவது என்கிற கம்பெனியின் திட்டத்தைச் சொன்னார் சம்பந்தம்.

"உங்க பாட்டு லிஸ்ட்டைப் பார்த்தேன். ரொம்ப பொறுப்போட ரொம்ப முன் யோசனையோட 'செலக்ட்' பண்ணி இருக்கீங்க, பாரதி. கேசட் போடற கம்பெனிகள் பெருகிப் போச்சு. ஆனாலும், புதுசா செய்யறது குறைஞ்சு போச்சு. பாரதின்னு எடுத்துக்கிட்டா, திரும்பத் திரும்ப அதே பத்துப் பாட்டுகள். எல்லாருமே, தீராத விளையாட்டுப் பிள்ளையைப் பிடிச்சுக்குவா. வீணையடி நீ எனக்கும்பா.. கண்ணன், கண்ணம்மா மாறுவதே இல்லை. ஊத்துக்காடுன்னா, எத்தனை போட்டிருக்கார் அவர்? எப்போ பார்த்தாலும், எவர் பாடினாலும், அலை பாயுதேங்கறா.



புதுசு புதுசா எடுத்துக்க வேண்டாமோ? சுனம் கிருஷ்ணையர், மகாவைத்யநாதையர்னு எத்தனை பேர் இருக்கா? அதனாலதான், உங்க புது ஐடியாவை ஒத்துக்கிட்டேன். கடவுள் வணக்கமா, திருக்குறளை எடுத்துக்கிட்டது நல்ல விஷயம். எல்லார்க்கும் பொதுவான கடவுள் வாழ்த்தாக இருக்கும்..."

பணம், முதலான லௌகீகங்கள் பேசி முடிக்கப்பட்டதும், அவர்கள் திரும்பினார்கள்.

"என்ன சொல்றார், உன் வீட்டுக்காரர்? கடிதம் எழுதினாராமே..."

"ஆமா. விவாகரத்தை நோக்கிப் போய்க் கிட்டு இருக்கார்."

"ஐயையோ."

அவர்கள், அதன் பிறகு பேசாமலே நடந்தார்கள். மணிக்கூண்டு வரையில், அமைதியாகவே இருந்த லலிதா, அங்கு நிழலில் நின்று, பாரதியிடம் வருத்தம் தோன்றச் சொன்னாள்.

"உடையாமே பார்த்துக்கோடி."

"எதை?"

"கல்யாணத்தைத்தான்."

"கடைசிப்பட்சமா உடையறதுதானே லலிதா, கல்யாணம். அதுக்கு முன்னாலே, ஆயிரம் உடைஞ்சிருக்குமே? அதையெல்லாம், யார் ஒன்று சேர்க்கிறது? யார், யாரை உடைச்சோம்னு கணக்குப் பார்க்க முடியுமோ? கடைசியா, உடையறதை யார் தடுத்து நிறுத்த முடியும்? ஆனா, சத்தியமா, நான் அதுக்குக் காரணமா இல்லை."

"கனகராஜ் கோபம், அந்த டில்லிச் சமாசாரம் முடியலைன்னுதானே?"

"ஆமா, லலிதா. தாம்பத்யத்துல, தர்மம் மீறி காரியம் பண்ணி, அதுவும் சினேகிதரா பழகற ஒரு ஆம்பிளை மூலமா, அதை நிறைவேற்றித் தரணும்னு ஏதாச்சும் இருக்கா? அப்படியும் நிலைநிறுத்த வேண்டிய உறவு தானா அது? சாக்கடையில பந்து விழுந்தாக் கூட, எடுக்கத் தயங்கறோம். இது மாதிரி காரியங்களைப் பண்ணிப்பிட்டு அப்புறமும் எப்படித் தாம்பத்யம் பண்றது? கணவன் மனைவிக்குள்ளே கண்ணியம் இருக்க வேண்டாமோ? அன்பு, மரியாதையைக் அழிச்சுட்டுப் பிறக்குமோ?"

"எல்லாம் சரிடி... எந்தச் சமயத்திலும் நீ முன் கை எடுக்காதே."

"சரி. நிச்சயமா நான் அதைச் செய்ய மாட்டேன்."

மிகுந்த மனபாரத்துடன் வீடு வந்து சேர்ந்தாள், பாரதி. லலிதாவின் மனக் கலக்கம். அவளுக்குச் சஞ்சலம் தந்தது. கூடவே, ஒரு ஆறுதலும் பிறந்தது. தன் பொருட்டு, வருந்தவும், யோசனை சொல்லவும், லலிதா போன்ற ஆத்மாக்கள் இருக்கிறார்களே என்கிற நிம்மதியில், ஆழ்ந்தாள்.

**மா**லை, மஞ்சள் துகளைத் தெருவில் வாரி இறைத்தது. உள்நடையில், தூணில் சாய்ந்து தெருவை வேடிக்கை பார்த்துக் கொண்டு அமர்ந்திருந்தாள் பாரதி. கையில், எழுதிய பாடல் இருந்தது. வரிகளை மனப் பாடம் செய்து, ராகத்தோடு அதை இசைவித்துக் கொண்டும் இருந்தாள்.

வாசல்படியில், ஒரு சின்னப் பெண் வந்து நிற்பதைப் பார்த்தாள். சட்டையும் பாவாடையும் அணிந்த பத்துப் பன்னிரண்டு வயசுச் சிறுமி. இவளைப் பார்த்துச் சிரித்தாள் அவள்.

எழுந்து திண்ணைக்கு வந்தாள், பாரதி.

"யாரும்மா, நீ?"

"உங்களைப் பார்க்கணும்னு..."

"உள்ளே வா..." என்றபடி, அந்தப் பெண்ணை அழைத்து வந்து, கூடத்தில் நாற்காலியில் அமரச் சொன்னாள். அது, உட்காராமல் நின்றது.

"என்ன சமாசாரம்?"

"எனக்கு... பாட்டு கத்துக்கணும்."

பாரதி, அந்தப் பெண்ணை உற்றுப் பார்த்தாள்.

"உன் பேர் என்ன? எங்கேந்து வர்றே...?"

"செங்கேணி... காலனியிலே இருக்கேன். அப்பா, வாட்ச்மேனா இருக்காங்க."

"அம்மா?"

"......" அவள் தரையைப் பார்த்தாள். ஒரு ஆட்டோ நின்றது. அவர்களைக் கடந்து, கடும் சப்தத்துடன் ஓடியது.

"சொல்லு..."

"மார்க்கட்டுல, பெருக்குற ஆளா இருக் காங்க."

"சரி. அதுக்காக, நீ உட்காரக் கூடாதா? உக்காரு" என்று குரலில் மட்டும் கடுமையை ஏற்றிக் கொண்டு சொன்னாள், பாரதி.

செங்கேணி உட்கார்ந்தாள், நாற்காலியின் முனையில்.

"எப்படி உனக்கு இந்த ஆசை வந்துச்சு?"

"தெரியலைங்க டீச்சர். எங்க வீட்டுக்குப் பக்கத்துல, ஒரு சார் இருக்கார். அவர் டேப்பில நிறைய பாட்டு போட்டுக்கிட்டே இருப்பாரு. நான் கேப்பேன். நல்ல நல்ல பாட்டு."

"சினிமா பாட்டா?"

"இல்லைங்க டீச்சர். எல்லாம் சாமி பாட்டுங்க. சசரிரின்னு இருக்குமே அந்த மாதிரி பாட்டு. அதுதான் எனக்குப் பிடிக்குது."

பாரதி சிரித்தாள்.

"ஏதாவது பாட்டு தெரியுமா? தெரிஞ்ச வரைக்கும் பாடேன்."

செங்கேணி, வெட்கம் தோன்ற அப்படியும் இப்படியும் பார்த்தாள். மெல்ல பாடத் தொடங்கினாள்.

"சபாபதிக்கு வேறு தெய்வம் சமான மாகுமா... தில்லைச்

சபாபதிக்கு வேறு தெய்வம் சமான மாகுமா..." என்று பாடிவிட்டு, பாரதியின் முகத்தைப் பார்த்தாள். 'மேலே போ' என்று தலையை அசைத்தாள் பாரதி.

"க்ருபாநிதி இவரைப் போலக் கிடைக்குமோ இத் தாரணியில்..." அவள் நிறுத்தினாள்.

"மேலே போ."

"தெரியாதுங்க டீச்சர்."

பாரதி, மிச்சம் பாட்டையும் பாடி முடித்தாள். கண்கள் அகல, "அழகா பாடறீங்க டீச்சர்" என்றாள்.

குரல், அழகாக, இனிமையாக இருந்தது. ராகம் சற்று சோபை குன்றியதுதான். அதனால் என்ன? கேட்டதை வைத்துப் பாடும் போது, அதைப் பார்க்க முடியுமா?

"ரொம்ப நல்லா பாடறியே..."

அவள் தலைகவிழ்ந்து உட்கார்ந்திருந்தாள். பழைய ஆனால் துவைத்த சட்டை, மற்றும் பாவாடை. ஏழைமை, உடையில் மட்டும் தெரிந்தது.

"அவசியம் பாட்டுக் கத்துக்கணுமா? கத்துக்கிட்டு என்ன பண்ணப் போறே? கச்சேரி பண்ணிப் பணம் பண்ணப் போறியா?"

அவள், தீர்க்கமாகப் பாரதியைப் பார்த்தாள்.

"இல்லீங்க டீச்சர். பாட்டு கேட்டா சந்தோஷமா இருக்கு. பாடினா நல்லா இருக்கு. அதுக்குத்தான்... ஆனா..."

"என்ன ஆனா...?"

அவள் மௌனம் சாதித்தாள்.

"சொல்லு."

"நாங்க ரொம்ப ஏழைங்க, டீச்சர்."

"அதுக்கும் பாட்டுக்கும் என்ன சம்பந்தம்?"

"சம்பளம் தர முடியாது."

"நான் கேட்டேனா?"

தெருவில் அழகான சாயுங்காலத்து, முத்து வெள்ளை பரவியது.

"அதில்லைங்க, டீச்சர்."

"படிக்கிறியா?"

"ஆமா. ஆறு கிளாஸ்."

"ஏழெட்டு படிக்க வேண்டியவ. என்னத்துக்கு ஆறு."

## மறக்க முடியுமா!



**ஞானபீடப் பரிசு-**
**அகிலனின்**
**சித்திரப்பாவைக்கு அடுத்து**
**தமிழ்ப்பாவைக்குத்**
**தகுதியில்லையோ?**
**இன்னும்**
**சாகித்ய அகாடமியின்**
**சச்சரவே தீரவில்லை...**
**ஞானபீடம் பற்றி**
**நமக்கேன் வம்பு?!**

"பள்ளிக்கூடம் போக வேண்டாம்னு அப்பா சொன்னாரு. ஒரு வருஷம் போச்சு, டீச்சர். அம்மா சண்டை போட்டு போன்னு சொன்னாங்க..."

"எப்ப வர்றே?"

அவள் அதிர்ச்சியுடன் கேட்டாள்.

"என்னைச் சேர்த்துக்கிட்டீங்களா, டீச்சர்?"

"ஏன் சேர்த்துக்காமே? நாளைக்கே வா. எப்ப முடிஞ்சாலும் வா."

அவள், பாரதியின் காலைத் தொட்டுக் கும்பிட்டு எழுந்து, நின்றபடி முகத்தைக் கையால் மூடிக் கொண்டு அழுதாள்.

பாரதி பதறிப் போனாள்.

"எதுக்கு அழறே?"

அவள் விசும்பியபடியே நின்றாள். கண்களைப் புறங்கையால் துடைத்துக் கொண்டாள்.

பாரதி, அவளை அணைத்துக் கொண்டாள்.

"எதுக்குடி அழறே?"

"ஒன்றும் இல்லீங்க டீச்சர்."

"என்னை டீச்சர்னு கூப்பிடாதே. அக்கான்னு சொல்லு" அவள் அழகாகச் சிரித்தாள்.

"சரிக்கா. இது என்னக்கா?"

"பாட்டு. படி. பார்ப்போம்."

அவள் சரியாகப் படித்தாள்.

"இது போதும். பள்ளிக்கூடம் போறதை மட்டும் நிறுத்தாதே. மற்ற நேரத்தைப் பாட்டுக்கு ஒதுக்கலாம்."

"சரிக்கா."

ஆனால், செங்கேணி, பள்ளிக்கூடம் நேரம் போக, மற்ற நேரத்தில் எல்லாம், பாரதி வீட்டிலேயே கழித்தாள்.

(தொடரும்)



மின்சாரமின்றி ஒரு ஹைவோல்டேஜ் ஷாக் அடித்தது சர்மாவுக்கு.

''கோபாலோ, போபாலோ இல்ல கோபால் ப்ரம் போபாலோ, யாராயிருந்தாலும் ஒருநாள் சேர்ந்து வாழ்ந்து பார்த்தப்புறம்தான் கல்யாணத்திற்கு 'யெஸ், நோ சொல்வேன்' என்று சீமந்தபுத்திரி சொல்லக் கேட்டால் ஷாக்கோ, மயக்கமோ கோமாவோ ஏதோ ஒன்று தாக்கத்தானே செய்யும்.

இவள கம்ப்யூட்டர் சயின்ஸ் படிக்க வச்சதும் போதும். கல்யாணத்திற்குப் பேயா அலையறதும் போதும் என்று அலுத்துக் கொண்டார். அலுத்துக் கொண்டு முடிப்பதற்குள், "யாரந்த கோபால்?" என்று, சர்மா கையிலிருந்த ஜாதகத்தைப் பிடுங்கிக் கொண்டு தன் ரூமிற்குள் மறைந்தாள் சத்யா,

அறையில் போன நூற்றாண்டின் மின்விசிறி போல கம்ப்யூட்டர் ஆனிலேயே இருந்தது. அதன் திரையில் ஒரு பஞ்சவர்ண பந்து, தாளக்கட்டு தவறாமல் குதித்து சதுரம் போட்டுக் கொண்டிருந்தது. கம்ப்யூட்டர் முன் அமர்ந்தாள் சத்யா. மவுசை அழுத்தித் திரை மீட்டு land.com சென்றாள். பின் மெனுவில் மேரேஜ் என்னும் பிரிவை அலசி eligible bachelors-ஐ அடைந்து க்ளிக்கினாள். பட்டியல் விரிந்தது. அமுக்க அமுக்க சரசர வென பெயர்கள் ஓடின. கோபாலனில் பல கோபாலன்கள். ஒருவாறு WWW. கோபாலன் வரத். com என்று தந்தை பார்த்த பையனின் வெப்சைட் விலாசத்தைப் பிடித்தாள். வெட்கப்பட்டபடி வலது கைவிரல் வைத்து உள்ளே நுழைந்தாள்.

முதல் திரையின் ஓரத்தில் அவனுடைய பாஸ்போர்ட் சைஸ் போட்டோவும், HI! THIS IS GOPAL. I AM ELIGIBLE AND A BACHELOR TOO!! என்ற வாசகம் அவளை வரவேற்றன.

பெயர் : கோபால் வரதாச்சாரி, ஊர் : போபால். அம்மா : ருக்மணி, அப்பா : வரதாச்சாரி. வயது : திருமண வயது. படிப்பு : MS (US). வேலை : வாஷிங்டனில் சாப்ட்வேர் என்ஜினீயர், பொழுதுபோக்கு : சாப்ட்வேர், பிடித்த ஆடை : எனிதிங் சாஃப்ட்

# WWW.

கேம்ஸ்: ஆல் பால் கேம்ஸ். புகை : அறவே கிடையாது. தீர்த்தம்: தொழில் நிமித்தம் சில சொட்டு. எதிர்பாக்கும் பெண் : குடும்பப் பாங்கான பச்சைத் தமிழ்ப் பெண்.

இதைப் பார்த்ததும் அவளுக்கு எரிச்சல் ஏற்பட்டது. உன்னோடு ஒருநாள் வாழ்ந்து பார்க்க வேண்டும் என்று சனிக்கிழமை நேரம் குறித்து வளசரவாக்கத்திலிருந்து வாஷிங்டன்னிற்கு ஒரு ஈமெயில் அனுப்பி முடினாள். சனிக்கிழமை. வாஷிங்டன் காலை. வளசரவாக்க மாலை. கம்ப்யூட்டரோடு டிஜிட்டல் கேமரா, வாய்ஸ் ஸின்த்தசைசர் மற்றும் பல்வேறு லேட்டஸ்ட் சாதனங்களோடு சத்யா கோபாலுடன் தொடர்பு கொண்டாள். படுக்கையிலிருந்தவன் லாப்டாப்பை உயிர்ப்பித்து லைவ் சாட்டிற்கு தயாரானான்.

'ஹை, குட்மார்னிங்'குகளைத் தொடர்ந்து சத்யா,

"இதுதான் பெட்ரூமா? பாக்கலாமா?" என்றாள்.

"ஓ எஸ்" என்று அவன் சொன்னதும்

மாதுரி

# கல்யாணம் .COM

கோபாலின் பெட்ரூம் அவளின் குட்டித் திரையில் விரிந்தது. கட்டிலில் தலையணைகளும் போர்வைகளும் புத்தகங்களும் வாக்மேனும் அலங்கோலமாய்ச் சிதறியிருந்தன.

"என்ன இவ்வளவு மோசமாய் இருக்கு?"

"இப்பத்தானே எழுந்தேன்."

"இப்ப சீர்ப்படுத்திடுவீங்களா?"

"நோ நோ. நைட் படுக்கும்போது..."

"சே! சரி, பல் தேய்ச்சிட்டுப் பேசுவோமே."

"இதென்ன நேராவா பேசுறோம்? இன்டர்நெட்தானே. வீணா எதுக்குப் பல் தேய்ச்சி... infact நான் தூங்கி எழுந்ததும் பெட் காப்பி."

"ஐய்யே பல் தேய்க்காமலா?"

"அதான் நேத்து ராத்திரியே தேய்ச்சிட்டேனே."

"நல்லாயில்லே! முதல்ல உங்க முழுநீள போட்டோவப் பார்க்கணும்."

"ஒய் நாட்?"

சில நொடிகளில் தலைமுடியில் துவங்கி நெற்றி, கண், நாசி, குறுந்தாடி என உருண்டு திரண்ட தோள்களுடன் ஹாய் என்று கை ஆட்டியது. பார்த்துக் கொண்டிருந்த சத்யாவிற்கு ஏதோ நெருடியது.

"இது நீங்களா? பொய் சொல்லாதீங்க."

"நானேதான். என்ன சந்தேகம்? ஏற்கெனவே என் போட்டோ உன் கிட்ட இருக்கே?"

"முகம் உங்களுடையது. பட்... பாடி இரவல். அ... அர்னால்டு ஸ்வாஷ்நேகர்... ரைட்?"

கோபால் ஆமோதித்து இதோ என் நிஜ சொரூபம் என்றதும் போபால் கோபால் முழு நீளப் படம் திரையில் தோன்றியது. நம்ம ஊர் ஊட்டச்சத்து. அதே போல் முழு நீள சத்யா, நீச்சல் உடை அணிவித்து பார்க்கக் கூடாது என்ற கண்டிஷனோடு அங்கே போனது.

அடுத்த சிறிது நேரம் அவனது அபார்ட்மென்டை சுற்றி வந்தாள். எம்.எஸ். படிப்பை யு.எஸ்ஸில் படித்திருந்தாலும் என்ஜினியரிங் நம்ம ஊர் நேப்பியார் காலேஜ் டொனேஷன் சீட்டில் படித்ததுதான் எனத் தெரிந்து கொண்டாள்.

"உனக்கு அமெரிக்கா வரப் பிடிக்குமா?" என்ற அவனின் கேள்விக்கு, "அங்க லைப் பத்திக் கொஞ்சம் சொல்லுங்க" என்று பதிலளித்தாள்.

"ரொம்ப நேரமா வீட்டு உள்ளயே இருக்கோம். கார்டன்ல போய்ப் பேசுவோம்" என்று கோபால் உருவாக்கிய கார்டன் சைட்டுக்கு அழைத்துச் சென்றான்.

"இங்க எல்லாமே wonderful. இந்தியா மாதிரி இல்ல. காத்து, தண்ணி, நிலம் ஜனாதிபதி உட்பட எல்லாம் படுக்ளீன் - சுத்தம். பட்டனை அமுக்கினா, கார்டை தேய்ச்சா கிடைக்காதது கிடையாது."

அசர வைக்கிற பில்டிங், ரோட்ஸ், ரயில்வே, டெலிகாம். ரொம்பத் தெளிவான, தங்கள் வேலையை மட்டுமே கவனிக்கும்



மக்கள்.

பேசியபடி வெப்சைட் பூங்காவில் நடந்தனர். வண்ண வண்ண பூச்செடிகள், பெயின்டிங் போல காட்சியளித்த லான்கள், மினி நீர்வீழ்ச்சி, படபடக்கும் பட்டாம்பூச்சிகள், குஞ்சுக் குருவிகள் என அவன் கைவண்ணம் பூங்கா முழுவதும் மிளிர்ந்தது.

"மனுஷன் மனுஷனா, உயிர உயிரா மதிக்கிற உன்னதமான மக்கள்."

"ரொம்ப நல்லவங்களா?"

"சந்தேகமில்லாம."

"பாக்க?"

"ரொம்ப அழகானவங்க."

"அப்ப அங்கய ஒன்னப் புடிச்சி கல்யாணம் பண்ணிக்கலாமே? எதுக்குப் பச்சைத் தமிழ்ப் பொண்ணு?"

மௌனம்.

"ஹலோ!"

மௌனம்.

"மனுஷன், மனுஷி இருவரும் சமம். வீட்டு வேலைகளை ரெண்டு பேரும் பகிர்ந்து கொள்ளணும். அப்படிங்கற அவங்க கொள்கை இடிக்குதா?"

"நீ சொன்னப்புறம் அப்படி இருக்கும்னு தோணுது. அதோட என் மனைவி எனக்கு மட்டும்தான்கிற நம்ம சுயநலம். கொஞ்சம் காம்ளிகேடட். விவாதம் வேண்டாம். எனக்குப் பசிக்குது. உன் சமையல் எப்படியிருக்கு பார்க்கலாம் வா."

பூங்கா மறைந்து கிச்சன் திரைக்கு வந்தது. "உனக்குப் புடிச்ச ஒரு டிஷ் செய்யறேன். என்ன வேணும்?"

"சுண்டக்காய் வத்தக் கொழம்பு. சாப்பிட்டு ரொம்ப மாசமாச்சு" என்றான் கோபால்.

"சரி, வத்தக்குழம்பு மிக்ஸ் இருக்கா?"

"நோ நோ. எனக்கு ஒரிஜினல் A B C Dல ஆரம்பிச்சு ஃப்ரெஷ் வத்தக் கொழம்புதான் வேணும்." சத்யா கம்ப்யூட்டரில் தேவையான பொருள்களையும் அதன் அளவுகளையும் சொல்லச் சொல்ல கோபால் தயாரிப்பில் இறங்கினான். குறிப்பிட்ட நேரம் மைக்ரோவேவனில் வைத்து இறக்கியவனுக்கு அதிர்ச்சியாக இருந்தது.

"இதென்ன தீய்ஞ்சு போன பசை மாதிரி வந்திருக்கு."

"அப்படியா?" என்று சத்யாவும் அதிர்ச்சியுற்றாள்.

"சாப்பாட்டுக்காகவும் தமிழ்ப் பெண் கேட்டேன். நீ இவ்வளவுதானா?"

"நான் என்ன செய்ய? சமையல் புக்ல இருந்ததை அப்படியே சொன்னேன்."

"ஓ! நோ! ஏட்டுச் சுரைக்காய்"

"இருக்கட்டும். டேஸ்ட் பண்ணிப் பாருங்க."

விரலால் தொட்டு தன் நாக்கில் தடவியதும், "அய்யோ அம்மா! செம காரம்" என்று அலறினான்.

"சரி சரி. இத என்னோட மிக்ஸா வச்சுக்குங்க. ஒரு கிளாஸ் சுடுதண்ணில இத ஒரு ஸ்பூன் கலக்கினா நீங்க கேட்ட வத்தக் கொழம்பு தயார்."

பரிமாற்றம் தொடர்ந்தது.

சத்யா தொடர்ந்தாள் : "இதோ பாரு, தமிழ்ப் பொண்ணு, அப்படி இப்படின்னு என்னை சமையல்காரி, வேலைக்காரி ஆக்கிடாதே. எனக்குப் பிடிக்காது. பார்க்கப் போனா நம்ம ரெண்டு பேருக்கும் ஒற்றுமையை விட வேற்றுமை அதிகம் இருக்கு. நீ பெட் காப்பி. நான் குளிச்சப்புறம்தான் எல்லாம். நீ வத்தக் குழம்பு. நான் மோர்க் குழம்பு..."

"சரி சரி. ஆனால் எதிர்த் துருவங்கள் ஈர்க்கற மாதிரி இல்லையா? எனக்கு உன்னைப் பிடிச்சிருக்கு!"

"எல்லாருக்குமே என்னைப் பிடிக்கும். இப்பப் பிரச்னை வேற. நான் இன்னும் ரெண்டு நாளிலே சிங்கப்பூர் போய் புது வேலைல சேரணும். ஒரு வருஷம் லீவே கிடையாது. அப்பாவோ பைத்தியம் மாதிரி கல்யாணம் பண்ணிக்கிட்டு வேலைக்குப் போன்னு பிடிவாதம் பிடிக்கறார். பாசிபிளா?"

"இதென்ன ஜுஜுபி!"

"வாட்?"

"ரெண்டு நாள் என்ன, ரெண்டு மணி நேரத்தில இந்தக் கல்யாணம் நடக்கும்! நீ சரின்னு சொல்லு!"

"எப்படி?"

"அப்ப சரின்னு சொல்லிட்டேன். நான் கேட்கிறதை மட்டும் கொடு."

**கோ**பால் கேட்டபடி, அடுத்த நாளில் முகூர்த்த நேரம், கல்யாண சத்திரம், தன் போட்டோ, அம்மா, அப்பா, மாமா, மாமி, இஷ்டமித்ர பந்துக்கள் போட்டோ, செய்ய வேண்டிய சம்பிரதாயங்கள், தனக்கும் கோபாலுக்கும் தேவையான ட்ரெஸ், சாப்பாட்டு மெனு, நாதஸ்வர, மெல்லிசை கோஷ்டி என எல்லா விவரமும் அனுப்பினாள்.

அடுத்த நாள், எளிதில் கிடைக்காத புதன்

கிழமை, காலை. சத்யா உள்பட எல்லோரும் கல்யாணத்திற்கு அழகாக அலங்கரித்துக் கொண்டு தயாராக சத்யாவின் அறையில் கம்ப்யூட்டரைச் சுற்றி அமர்ந்தனர். வீட்டில் கம்ப்யூட்டர் இருந்த பந்துக்கள் அவரவர் வீட்டிலேயே இதே போல் தயாராயினர். குறித்த நேரத்தில் அனைவரும் WWW. கல்யாணம்.com என்று வெப்சைட்டிற்கு லாகின் செய்தார்கள். எடுத்ததும் திரையில் பத்மாவதி தாயார் – வெங்கடாசலபதி, அடுத்து, "நான் ரகுநாத பட்டாசாரியார், கனத்தூர் பெருமாள் கோவில்லேயிருந்து அமெரிக்கா வந்து நம்ம ஊர் சம்பிரதாயப்படி கல்யாணம் பண்ணி வைக்க இந்த வெப்சைட்டை நிர்மாணம் பண்ணியிருக்கேன். இதில நாளுக்கு 39 கல்யாணம் நடக்கிறது. அமெரிக்க சட்டப்படி இந்தக் கல்யாணம் செல்லும். நான் மேரேஜ் சர்டிபிகேட்டும் தருவேன். தம்பதிகளுக்கு என் அட்வான்ஸ் ஆசீர்வாதம்!" விடைபெற்றார்.

தொடர்ந்து GOPAL WEDS SATHYA என்று திரை மின்ன விஜய சேஷமஹால் சத்திரம் விரிந்தது. சொந்தக்காரர்களும், நண்பர்களும் உள்ளே நுழைய, சத்யாவின் குட்டி கசின்கள் வாசலில் பன்னீர் தெளித்து சர்க்கரை கொடுத்தனர். உள்ளே ஹாலில் வரிசையாக, சத்யா போட்டோ அனுப்பிய அத்தனை பேரும் சேரில்.

"சத்யா எப்படியிருக்கு நம்ம அரேஞ்ச்மெண்ட்?" என்று இடையில் கோபால் வார்த்தையில் வந்தான்.

"Wonderful!" என்றாள் ஆச்சர்யத்தை அடக்க முடியாமல்.

இடையே மணமேடை மானிட்டரில் தோன்றியது. கோபாலன் அம்மா, அப்பா, சத்யாவின் அம்மா, அப்பா, மாமா, மாமி, கட்டுக் குடுமியுடன் வாத்தியார்கள், இங்குமங்கும் அலைந்தபடி கல்யாண மும்முரத்தில் காணப்பட்டனர்.

எல்லாம் தயாரானதும் ரகுநாத பட்டாச்சாரி திரையில் தோன்றி, "பையனும், பொண்ணும் அவளோட ரகசிய பாஸ்வேர்டை டைப் பண்ணா, மேடைக்கு வந்திடலாம். நேரமாச்சு" என்றார்.

வளசரவாக்கத்தில் சத்தியாவும், வாஷிங்டன்னில் கோபாலும் பாஸ்வேர்டை தட்ட பஞ்சகச்சம், கூரைப் புடைவையோடு மணமேடைக்கு ஏறினர். சம்பிரதாயப்படி இ போர்டை தட்டியே குறித்த நேரத்தில், மங்கள இசை, மந்திர கோஷத்தோடு, கன்னிகாதானம், அம்மி மிதித்து அருந்ததி பார்த்தல் எல்லாம் நடந்தேறின. பிறகு தம்பதிகள் பெரியோர் கால்களில் விழ அட்சதை மழையும் பொழிந்தது. தொடர்ந்து கூடியிருந்தோர் வந்து வாழ்த்தி கோபாலுக்கும் சத்யாவிற்கும் கைகொடுத்தார்கள். மொய் ஒருபுறம், டைனிங் ஹாலில் சாப்பாடு மறுபுறம் என அமர்க்களப்பட்டது.

"வாட் டியர் பெண்டாட்டி?" கோபால் சத்யாவிற்குக் கைகொடுத்தான்.

இங்கே பார்த்துக் கொண்டிருந்த சத்யா சிலிர்த்து, தன் கையைத் தொட்டுக் கழுத்தையும் தடவிப் பார்த்தாள்.

"சத்யா, வெர்ச்சுவல் பாங்கிங் போல இது வெர்ச்சுவல் மாரேஜ். எவ்வளவு நேரமும் காகம் மிச்சமாகிறது பார். ஆனா, 'மொய்'யும் சாப்பாடும் நிஜம். மெயில் ஆர்டர் முறையில் அவங்கவங்களுக்கு போய்ச் சேரும். நம் கல்யாணத்தை அட்டெண்ட் பண்ணவங்களுக்கு கல்யாணச் சாப்பாடு உண்டு!" என்றான் கோபால்.

"கல்யாணம்... ஒரு வெப்(web)லேயே கல்யாணம்னா மனுஷன் தேறிட்டான்" என்றாள் சத்யா.

"அடியேம்மா! சாந்தி முகூர்த்தத்தைக் கூட 'வெப்பு'ல வெச்சுண்டுடாதீங்க!" என்றாள் அவள் பாட்டி. ●

## மறக்க முடியுமா!



முதன்முதலாய்
ஒரு குளியலில் அழுக்கு சேர்ந்தது
மகாமகக் குளம்.

●●●

**சிறையிலும் கலவரமா?**
**கம்பி எண்ணுவதாய்**
**நாம் நினைக்கிறோம்**
**உள்ளே –**
**கரன்சி எண்ணுகிறார்களோ?**

**—'மறக்க முடியுமா' என்ற தலைப்பிலான சில நிகழ்ச்சிகளைக் கவிதைகளாக்கியவர்: நா.வே. அருள்**

# 49

குதிரைக்கு உபன்யாசம் சொல்லித் தூங்க வைத்து ஆஸ்தான வித்வானானவர் பற்றிச் சொன்னேன்!

உபன்யாசம் கேட்கிறபோது சுவாரஸ்யமாகத் தூக்கம் வரும் என்று உணர்த்தவே இந்தக் கதை.

இப்படித் தூங்குவது ஜேஷ்டா கனிஷ்டா சகோதரிகளுள் முதலாமவளை அழைக்கும்!

உபன்யாசம் ஓர் இடத்தில் ஆரம்பிப்பதற்கு முன்பாகவே அங்கே வந்து காத்திருப்பார்கள் இருவரும். சிரத்தையாக யார் கேட்கிறார்களோ அவர்களை கனிஷ்டாவாகிற மஹாலக்ஷ்மி வரிக்கிறாள். 'இது எப்போது முடியப் போகிறது' என்று யாராவது உட்கார்ந்திருந்தால் அவர்களை ஜேஷ்டாவாகிற மூதேவி வரிக்கிறாள்.

கேட்பவர்களுக்கு மட்டும்தானா இந்த சாஸ்திரம் என்றால், கேட்பவர்களுக்கு மட்டுமின்றி சொல்பவர்களுக்கும் உண்டு.

சொல்கிறவர்கள் சரியாகச் சொல்லாது போனால் அவர்களுக்கும் அதே பலன்தான்! ஜேஷ்டாதான் வரிப்பாள். நல்ல பக்தி சிரத்தையோடு சொன்னாலோ அவர் வாக்கிலேயே லக்ஷ்மி பிரகாசிப்பாள். சர்வ விதமான விஷயமும் ஓடி வரும்.

புராணம் கேட்கிற சமயத்திலே தூக்கம் வரும் என்று சாஸ்திரத்திலேயே இருப்பதைப் பார்க்கிறோம்! இதனால்தான் ஆந்திர தேசத்திலே ஒரு வழக்கம் - கதை சொல்லிக் கொண்டேயிருக்கிற போது திடீரென்று, 'ஸ்ரீமத் ரமா ரமண கோவிந்தோ!' என்று கதை சொல்கிறவர் ஒரு கூவு கூவுவார். எதிரே உட்கார்ந்திருப்பவர்களெல்லாருமாக 'ஹரி ஹரி ஹரி ஹரி' என்று ஒரு தடவை கத்துவார்கள்!

இந்தக் கூச்சலில், மூலை முடுக்கில் தூங்கிக் கொண்டிருப்பவர்களெல்லாம் அலறியடித்துக் கொண்டு எழுந்து கொள்வார்கள்! இதுவரை கேட்காது போனாலும் பரவாயில்லை. இனிமேல் கேட்கப் போகிற விஷயம் முக்கியமானது - ஜாக்கிரதையாகக் கேட்க வேண்டும் என்பதற்கு அடையாளமாகவும் இந்த கோஷம் அமையும்.

புராணம் கேட்கிறபோது தூக்கம் வருகிறது போல யக்ஞம் நடக்கிறபோதும் தூக்கம் வரும். அந்த மாதிரி நேராதிருப்பதற்கு பகவானிடத்திலே பிரார்த்திக்க வேண்டும் - விஷ்ணுவைப் பிரார்த்திக்க வேண்டும். துஷ்ட தேவதைகளெல்லாம் ஓடி விடும்படியான பிரார்த்தனை இருக்கிறது. அதைச் சொல்லிப் பிரார்த்தித்தால் அந்த யக்ஞம் நன்றாக நடக்கும்.

ஆதலால், எங்கு நாம் பார்த்தோமானாலும் எம்பெருமான் விஷ்ணுவை எதற்காக அழைக்கிறோம்...? யக்ஞத்திலே எதற்காக அழைக்கிறோம்? காருண்ய ரூபியான லக்ஷ்மியோடு சேர்ந்து அவன் இருக்கிறான். அவன் லக்ஷ்மியோடு என்ன பண்ணுகிறான்...? வந்து ரக்ஷிக்கிறான்.

எல்லா சித்தாந்தங்களிலேயும் எல்லா ஆசார்யர்களும் ஒப்புக் கொண்ட விஷயம் இது. வேதார்த்தத்திலேயும் இருக்கிறது. வேதத்தினுடைய முடிவான உபநிஷத் பாகத்திலேயும் அவன்தான் ரக்ஷகன் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

## கதையான்றுதில்

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்



வேதத்தின் கிட்டே சென்றோமானால், கூர்ந்து பார்த்தோமானால் அறியக்கூடியனவற்றை சுவாமி தேசிகன் ரஹஸ்யத்ர்யஸாரம் என்ற நூலிலே ரொம்ப அழகாகச் சொல்லியிருக்கிறார்.

சாஸனம் என்று வேதத்தைச் சொல்வதுண்டு. சாஸன சாஸ்திரம் என்பது அதன் விவரிப்பு. நம்மைப் பார்த்து இப்படிப் பண்ணு, இப்படிப் பண்ணாதே என்கிறது. 'ஹிம்சை பண்ணாதே – சிலதெல்லாம் செய்யாதே; சிலதைச் செய்' என்று திட்டவட்டமாகச் சொல்கிறது. இப்படி ஆக்ஞாபிப்பதனாலே வேதத்துக்கு சாஸ்திரம் என்று பெயர்.

வேதமாகிற சாஸ்திரம் இரண்டாகத் தெரிகிறது. பூர்வ பாகம் – கர்ம பாகம். உத்ர பாகம் – பிரும்ம பாகம். இதையேதான் கர்ம காண்டம், பிரும்ம காண்டம் என்று சொல்வார்கள். 'கர்ம காண்டம், ஞான காண்டம்' என்று இன்னொரு விதமாகவும் சொல்வார்கள்.

கர்மகாண்டத்துக்கு ஜைமினி என்கிற மஹரிஷி பதினாறு அத்தியாயங்களிலே விசேஷமாக சூத்ரம் விதித்திருக்கிறார். 'இப்படியிப்படிப் பண்ண வேண்டும்' என்று சொல்கிறார். மீமாம்ஸா சாஸ்திரம் என்று அதற்குப் பெயர். மீமாம்ஸா சாஸ்திரமானது யக்ஞ பிரகரணம் மொத்தத்தையும் விவரிக்கிறது. இதை ஏன் பண்ண வேண்டும்? அதை ஏன் பண்ண வேண்டும்? என்று காரிய கலாபங்கள் மொத்தத்தையும் விவரிக்கிறது.

ஞான காண்டம் என்று சொல்லக்கூடிய உபநிஷத் பாகத்துக்கு வியாஸ பகவான் 545 சூத்ரம் எழுதியிருக்கிறார். கடைசியில்

**வே**தம் இரண்டு பிரிவுகள் கொண்டது என்பது நமக்குத் தெரியும். – கர்ம காண்டம்; ஞான காண்டம்.

உயர்ந்ததான எம்பெருமானை அடைந்து மோக்ஷத்தை அடைகிறோமே, அதுவரை 545 சூத்திரங்களிலே பத்து உபநிஷத்களுடைய சாரத்தையும் பிழிந்து தருகிறார்.

கேனோபநிஷத், கடோபநிஷத், ப்ருஹதாரண்யோபநிஷத், சாந்தோக்யபநிஷத், தைத்ரீயோபநிஷத் இத்யாதி உபநிஷத்களுடைய சாரமான அனைத்தையும் அந்த சூத்திரங்களில் காட்டுகிறார் வியாஸர்.

இது மொத்தத்தையும் பார்த்தோமானால் ஏக சாஸ்திரம்தான்.

ஜைமினி ஆரம்பித்த கர்ம வின்யாஸத்திலிருந்து ஞான வின்யாஸம் வரைக்கும் பார்த்தோமானால் மொத்தம் ஒரே சாஸ்திரம் – ஏக சாஸ்திரம்.

அப்படி ஏக சாஸ்திரமாகிற எம்பெருமான் விஷயத்தை நாம் ஆராய்ந்து பார்த்தால் கர்மகாண்டத்திலேயும் சரி, ஞான காண்டத்திலேயும் சரி எங்கு பார்த்தாலும் ரக்ஷக சர்வ சித்தார்த்தே என்பதுதான் இறுதிப் பொருள். விஷ்ணுவே ரக்ஷகன் என்று சொல்லப்படுகிறது.

விஷ்ணுவினுடைய பிரபாவமானது சர்வ வேத ஸாரம்; சர்வ யந்த்ர ஸாரம்; சர்வ மந்த்ர ஸாரம், சர்வ தந்த்ரஸாரம் என்று பகுமுகமாக உபநிஷத்கள் சொல்கின்றன. அவனிடம் இல்லாததொன்று உண்டோ. எல்லாம் அவனிடம் அடங்கி நிற்கின்றன. எல்லாவற்றுக்கும் முழு பீஜனாய் அவன் இருக்கிறான்.

உபநிஷத்தில் ஒரு புதிர் போடப்படுகிறது பாருங்கள் –

புதிர் என்பது நாம் உண்டாக்கியது அல்ல; வேதத்திலேயே இருந்திருக்கிறது!

புதிர் ஏன் போடப்படுகிறது? புதிர் போட்டால் – கேள்வி கேட்டால்– எந்த விஷயமும் தெளிவாகப் புரிந்து போய்விடும் என்பதற்காக.

ஆகையினால் இந்த இடத்திலே இந்த வார்த்தையை நன்கு கவனிக்க வேண்டும்.

ஹிரண்ய கர்பர் இருக்கிறாரே.... ஹிரண்ய கர்பர் என்றால் பிரும்மா.

ஹிரண்ய கர்ப சாளக்கிராமம் என்று பார்க்கலாம். 'நிகு நிகு' என்று நல்ல அழகாக இருக்கும்.

நல்ல விஷ்ணு சாளக்கிராமம் என்றால் அதிலே துளை இருக்கும். நாவல்பழம் மாதிரி அதன் மேலே விசேஷமான கறுப்பு நிழலாடும். அதுதான் உத்தமமான சாளக்கிராமம்.

சிறியது, பெரியது, ஷட்சக்ர சீதாராமன், சந்தானகோபாலன் – இப்படிப்பட்ட சாளக்கிராமமெல்லாம் கிருஹத்திலே இருந்தால் அந்த கிருஹம் உன்னதமான நிலையில் இருக்கும். எல்லோரும் சந்துஷ்டர்களாகத் திருப்தியுடன் இருப்பார்கள். எடுத்துக் கொண்ட காரியம் நன்கு நிறைவேறும்.

ஷட்சக்ர சாளக்கிராமம் – நரசிம்ஹ சாளக்கிராமம் ரொம்பப் பெரியதாக இருக்கும். த்ரிநேத்திரத்துடன் இருக்கும் அந்த சாளக்கிராமமானது ரொம்ப அழகாக இருக்கும்.

துவாரகா சிலை என்று ஒன்று உண்டு. துவாரகா சிலையையும் த்ரிநேத்ர சாளக்கிராமத்தையும் பக்கத்துப் பக்கத்தில் வைத்துத் திருமஞ்சனம் – அபிஷேகம் பண்ணினோமானால் லக்ஷ்மி நாராயண தத்துவம் பூரணமாய் அந்த இடத்திலே ஏற்படுகிறது. அதனால் அவை இரண்டையும் வைத்து நித்யம் திருமஞ்சனம் செய்ய வேண்டும்.

## அருள்வாக்கு

இன்ஸ்டிட்யூஷன் (ஸ்தாபனம்) என்று பலபேர் சேர்கிறபோது அது கலந்தாங்கட்டியாகத்தானிருக்கும்; அப்படியிருந்தாலும் அது இன்டிவிஜுவலிடம் (தனி மனிதனிடம்) தெரிவதுபோல தோஷமாகத் தெரியாது. தனியாக ஏதாவது ஒரு பூவை மட்டும் வைத்து மாலை கட்டினால் அதிலே நடுவிலே எங்கேயாவது ஒரு தழை, அல்லது துர்நாற்றமெடுக்கும் துருக்க ஜாமந்திப் பூ மாதிரி ஒன்றே ஒன்று சேர்ந்திருந்தால் கூட உடனே காட்டிக் கொடுத்து விடும்; அதைத் தூக்கிப் போட்டுவிடுவோம். இதுவே பலவித புஷ்பங்களும் சேர்ந்த கதம்ப மாலையாக இருந்தால் அதிலே இந்த வாஸனைப் புஷ்பங்களுக்குச் ஸமமாகத் தழையும் துருக்க ஜாமந்தியும் இருந்தாலும் தெரியாது. கத்திரிக்காய் ஒரே விதையாயிருக்கிறது, அவரைக்காய் ஒரே முற்றலாயிருக்கிறது என்றால், "தனியாகச் சமைக்க வேண்டாம், அவியலிலே போட்டுவிடுங்கள்" என்பார்கள். தனியாக ஒரு பண்டமிருந்து

கிருஹத்தில் ஒரே ஒரு சாளக்கிராமம் இருக்கலாம். இரண்டு சாளக்கிராமம் இருக்கக் கூடாது. இரண்டு சாளக்கிராமம் வைத்துக் கொண்டு கிருஹத்திலே பூஜை பண்ணினால், வீடு இரண்டு படும்! வீட்டிலே எப்போது பார்த்தாலும் சண்டை வந்து கொண்டேயிருக்கும். எதற்கெடுத்தாலும் மனஸ்தாபம். ஒருத்தருக்கொருத்தர் அன்னியோன்ய பாவமில்லாமல் போகும். அதனால் இரண்டு சாளக்கிராமம் இருக்கக் கூடாது.

மூன்று சாளக்கிராமமும் இருக்கக் கூடாது. இரட்டைப் படையில் இரண்டும் ஒற்றைப் படையில் மூன்றும் கூடாது. 4, 5, 6, 7 என்று எத்தனை சாளக்கிராமம் வேண்டுமானாலும் இருக்கலாம். அதற்கு நியமம் கிடையாது.

பன்னிரண்டு சாளக்கிராமம் ஒரு கிருஹத்திலே இருந்ததென்றால் அது ஒரு க்ஷேத்திரம் என்றே கொள்ளப்படுகிறது. ஸ்ரீரங்கம் என்ற க்ஷேத்திரமே அங்கே இருக்கிறது. அது வீடு அல்ல; க்ஷேத்திரம்! அப்படி சாளக்கிராமத்தை விசேஷமாக நினைக்கிறோம்.

திருமங்கையாழ்வாரின் திருவுள்ளத்தைப் பாருங்கள் - 'சாளக்கிராமம் அடை நெஞ்சே!' என்கிறார். உள்ளமே அங்கு சென்று அடை என்றார். ஏனென்றால் சரீரத்தைக் கொண்டு சேர்ப்பது கஷ்டம். சாளக்கிராம க்ஷேத்திரத்துக்குப் போய் எம்பெருமானை சேவிப்பதென்றால் ரொம்ப சிரமம்.

கண்டகி நதி தீரத்திலே பரமாத்மா எழுந்தருளியிருக்கிறான். அந்த நதியில்தான் சாளக்கிராமம் கிடைக்கிறது. அங்கே போவது சிரமம் என்பதால்தான் ஆழ்வார் நெஞ்சத்தை மட்டும் அனுப்புகிறார்!

அப்படிப்பட்ட விசேஷம் பொருந்தியவை சாளக்கிராமங்கள். அதிலும் ஹிரண்ய கர்ப்ப சாளக்கிராமம் சிறப்பான விசேஷம் பொருந்தியது.

(தொடரும்)



அது கொஞ்சம் மூளியாகிவிட்டால்கூட ப்ரயோஜனமில்லையென்று தூக்கிப் போட்டு விடுகிறோம். ஆனால் இந்த மாதிரி ஓட்டை உடைசல், கண்ணாடிச் சில்லுகள், வீணாய்ப்போன ப்ளாஸ்டிக் துண்டுகள், துணிக் கிழிசல்கள் முதலியவற்றை வைத்தே கண்ணைக் கவருகிறமாதிரி டிஸைன்கள், பொம்மைத்தேர் முதலானதுகள்கூடப் பண்ணுவதாக அவ்வப்போது பேப்பரில் பார்க்கிறோமல்லவா?

இப்படித்தான் நம்மிலும் ஆகாதது போகாததுகளை எல்லாம் வைத்தே ஆர்கனைஸேஷன், இன்ஸ்டிட்யூஷன் என்று ஏற்படுத்தி ப்ரமிக்கப் பண்ணிவிடலாம். நான் அதிகம் சொல்ல வேண்டியதில்லை- உங்களுக்கே தெரியும், இப்போது ப்ரமாதமாக எத்தனையோ ஸங்கங்கள் இருக்கின்றனவே, அவற்றிலே தனியாக ஆள் ஆளாக எடுத்துப் பார்த்தால் எத்தனை பேரை சுத்தம் என்று சொல்ல முடியும் என்பது ஸந்தேஹந்தான். பலபேர் சேர்ந்து இருக்கும் போது தோஷங்களைப் பூசி மெழுகிவிட முடியும்.

பசங்களுக்கு புத்தி மட்டும் வளர வேண்டுமென்றில்லாமல் காரெக்டரும் (குணநலனும்) வளரணும் என்றால் அது சுத்தமான இன்டிவிஜுவல் குருமார்களால் நடக்கிற அளவுக்கு இன்ஸ்டிட்யூஷனால் ஒருநாளும் முடியாது. இன்ஸ்டிட்யூஷனில் அறிவைத்தான் பரீக்ஷித்து வளர்க்க முடியும். குணத்தை முடியாது. சிஷ்யனைக் கூடவே வைத்துக் கொண்டு, அவனைப் பணிவிடை செய்ய வைத்து, அவனுக்கு ஆஹாரம் போட்டு வளர்க்கும்போதுதான், கூடவே குணத்தையும் வளர்க்க முடியும்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**













# மிலெனிய முஜுவல்!






கருத்து : மாதுரி
படம் : செல்லம்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1900/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 950/- (Air Mail)

# அன்னதானம் செய்வோம்! ஆனந்த வாழ்வு பெறுவோம்!!


ஸ்ரீ அருணாசலேஸ்வரர்

## தீபத் திருநகர் திருவண்ணாமலையில்
## மாதாமாதம் பௌர்ணமி கிரிவலத்தில்
## அன்னதானம் செய்வோம் வாருங்கள்....


ஸ்ரீ உண்ணாமுலையம்மை

அன்பார்ந்த ஆன்மீக அன்பர்களுக்கு வணக்கம். வரும் புத்தாண்டில் தங்களுடைய வாழ்வில் சகல சௌபாக்கியங்களும் பெற ஸ்ரீ அருணாசலேஸ்வரரிடம் பிரார்த்தனை செய்கிறோம்.

- அடிமுடி காண முடியாத ஜோதி மலையான திருவண்ணாமலையில் மாதாமாதம் பௌர்ணமியன்று லட்சோப லட்ச மக்கள் கூடி கிரிவலம் வருவது நாம் அறிந்ததே.
- ஆன்மீக அன்னதான அறக்கட்டளை மூலம் கிரிவலம் வரும் பாதையில் அமைந்துள்ள குபேரலிங்கத்திற்கும் இடுக்குப் பிள்ளையார் கோயிலுக்கும் இடையில், கிரிவலம் வரும் பக்தர்கள் மற்றும் அங்குள்ள ஆதரவற்ற முதியோர்கள், உடல் ஊனமுற்றோர்கள், கண்பார்வையற்றோர்கள் என அனைவருக்கும் பௌர்ணமியில் இரவு 8 முதல் 12 வரை அன்னதானம் செய்யப்படுகிறது. இப்புனித பணியில் பங்குகொண்டு தாங்களும், தங்களின் சந்ததியினர்களும் புண்ணியப் பலன் பெற இது ஒரு சிறந்த வாய்ப்பாகும்.
- இலட்சியங்களை நிறைவேற்ற லட்சங்கள் தேவையில்லை அன்னதானமே அஷ்ட தரித்திரத்தைப் போக்கி அஷ்ட ஐஸ்வர்யங்களைத் தரவல்லது!

தாங்கள் எதை நினைத்து அன்னதானம் செய்ய விரும்புகிறீர்கள் என்பதை தெரிவித்தால் அதன்படி நாங்கள் அன்னதானம் செய்து பிரசாதத்துடன் ஸ்ரீ அருணாசலேஸ்வரர், ஸ்ரீ உண்ணாமுலையம்மை படத்தையும் தங்களுக்கு அனுப்பி வைக்கிறோம்.

❖பிறந்தநாள் ❖திருமணநாள் ❖முன்னோர்கள் திதி நாள் ❖வாழ்க்கையில் உயர்வு ❖தொழிலில் முன்னேற்றம் பெற ❖நிரந்தர வேலை பெற ❖புதிதாக தொழில் தொடங்க ❖புதிதாக வீடு/மனை பெற ❖கணவன்-மனைவி வாழ்வில் சுகம் பெற ❖பிள்ளை பாக்கியம் பெற ❖கல்யாண பாக்கியம் பெற ❖பிள்ளைகள் படிப்பில் நன்கு கவனம் செலுத்தி முன்னேற ❖பிள்ளை பாக்கியம் பெற ❖நோயிலிருந்து சுகம் பெற ❖மன அமைதி பெற ❖வாகன யோகம் பெற ❖குடும்ப ஒற்றுமை பெற ❖உலக ஒற்றுமை பெற ❖சமுதாய ஒற்றுமை பெற ❖தேச ஒற்றுமை பெற ❖நல்ல சிந்தனை பெற ❖சிந்தனை வளம் பெருக ❖தெய்வசக்தி, புகழ் பெற ❖உடல் ஆரோக்கியம் பெற ❖நீண்ட ஆயுள் பெற ❖எல்லா உயிர்களும் இன்புற்று வாழவும்.

- நன்கொடைகள் அவரவர் சக்திக்கு ஏற்ப கொடுக்கலாம். நன்கொடைகள் பணமாகவோ, அல்லது பொருளாகவோ, அதாவது அரிசி நெல், பருப்பு வகைகள், எண்ணெய், எள், புளி, என்று எந்த பொருளாகவும் கொடுக்கலாம்.
- நன்கொடை அனுப்புபவர்கள் *(Aanmeeka Annadhana Charitable Trust Chennai-4)* என்ற பெயரில் Cheque / D.D / M.O. மூலம் அனுப்பி வைக்கலாம். உடனடியாக தங்களுக்கு Receipt அனுப்பி வைக்கப்படும்.
- பொருள்கள் அனுப்புவோர் TVS / ABT மூலமாக மைலாப்பூர், சென்னை-4க்கு அனுப்பி வைத்து எங்களுக்கு தெரிவித்தால் நாங்கள் உடனே Delivery எடுத்துக் கொள்கிறோம்.

- தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும்.
- ரூ.500/- அனுப்புபவர்களுக்கு ஆன்மீகம் மாத இதழ் ஒரு ஆண்டிற்கு அனுப்பப்படும்.
- ரூ.1000/- அனுப்புபவர்களுக்கு ஆன்மீகம் மாத இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு இலவசமாக அனுப்பப்படும்.
- ரூ.2000/- அனுப்புபவர்களுக்கு ஆன்மீகம் மாத இதழ் நான்கு ஆண்டுகளுக்கு இலவசமாக அனுப்பப்படும்.

அன்னதானத்திற்கு நன்கொடையாக ரூ.500, ரூ.1000, ரூ.2000, ரூ.5000 அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு காசியில் பூஜிக்கப்பட்ட ஸ்ரீ அன்னபூரணி அன்னையின் விக்கிரகம் பிரசாதமாக கொடுக்கப்படும். இதை தாங்கள் பூஜையறையில் வைத்து பூஜித்து விசேஷம் பெறலாம்.

ஆன்மீக அன்பர்கள் ஒரேமுறை(One Time) நன்கொடையாக ரூ. 5,000 செலுத்தினால், இந்தத் தொகையை "ஆன்மீக அன்னதான அறக்கட்டளை" என்ற பெயரில் வங்கியில் (Fixed Deposit) நிரந்தர வைப்பு செய்து அதில் வரும் வட்டித் தொகையில், மாதாமாதம் பௌர்ணமி அன்று தங்கள் சார்பாக அன்னதானம் செய்து அருணாசலேஸ்வரரின் திருவருளைப் பெற வேண்டுகிறோம். (Life Time) ஆயுட்காலம் முழுவதும் 'ஆன்மீகம்' மாத இதழும், பிரசாதமும் தங்களுக்கு அனுப்பி வைக்கப்படும். தாங்கள் விரும்பும்போது வாரிசு பரம்பரையாகவும் முகவரி மாற்றம் செய்து பிரசாதமும் 'ஆன்மீகம்' மாத இதழும் தொடர்ந்து அனுப்பி வைக்கப்படும்.

**நன்கொடைகளுக்கு வருமான வரிவிலக்கு உண்டு.**

*Cheque / D.D / M.O* அனுப்ப வேண்டிய முகவரி :

# ஆன்மீக அன்னதான அறக்கட்டளை

## AANMEEGA ANNADHANA CHARITABLE TRUST (Regd.)

31/1, Nadu Street, ( Opp. Kapaleeswarar Koil ) Mylapore, Chennai - 600 004. Ph . 4958086 / 4959302

